அண்ணாமலை அடிகளார்

# வேதாந்த ஞானமலர்

| இதழ்கள் | |
|---|---|
| 1. கோவிந்தனை நாடு | 2. கீதாசாரத் தாலாட்டு |
| 3. சசிவன்ன போதம் | 4. நாநாசீவவாதக் கட்டளை |
| 5. மகாராசா துறவு | 6. உபநிடதம் |
| 7. அஷ்டாவக்ர கீதை | 8. பஞ்சபத மகா வாக்கிய ரகசியம் |

தமிழறிஞர்
அண்ணாமலை அடிகளார்

" THIS BOOK IS PUBLISHED WITH THE FINANCIAL ASSISTANCE OF TIRUMALA TIRUPATHI DEVASTHANAMS UNDER THEIR SCHEME AID TO PUBLISH RELIGIOUS BOOKS"

மவுன்குரு பதிப்பகம்
கந்தநேரி - 635 809.
தொலைபேசி எண் 04171- 44162,

## நூலைப்பற்றிய விவரங்கள்


| | | |
|---|---|---|
| வெளியீடு | : | மவுனகுரு பதிப்பகம் |
| நூலின் பெயர் | : | வேதாந்த ஞான மலர் |
| ஆசிரியர் | : | தமிழறிஞர் அண்ணாமலை அடிகளார் |
| முதற்பதிப்பு | : | அக்டோபர், 1999 |
| தாள் | : | 18.2 கி.கி. மேப்லித்தோ தாள் |
| பக்கம் | : | 272 |
| எழுத்துகள் | : | 11 புள்ளி |
| நூல்வடிவம் | : | டெம்மி |
| விலை | : | ரூ. 75 |
| பிரதிகள் | : | 1000 |
| வெளியீடு | : | மவுன குரு பதிப்பகம் |
| ஒளி அச்சு | : | **அன்னை கிராபிக்ஸ்**<br>73/1, டாக்டர் பெசன்ட் ரோடு,<br>இராயப்பேட்டை, சென்னை-14<br>தொலைபேசி : 8593131. |
| அச்சிட்டோர் | : | **மூவேந்தர் அச்சகம்**<br>சீனிவாசபெருமாள்சன்னதிதெரு,<br>இராயப்பேட்டை, சென்னை-14.<br>தொலைபேசி: 826 71 89. |

அண்ணாமலை அடிகளார்

# பொருளடக்கம்

## வேதாந்த ஞான மலர்

**அத்தியாயம்**

## 1. வேதாந்த நூல்கள் பதிப்பிக்கப் பொருள் தந்த புரவலர்கள்

பூங்குழந்தை தொட்டிலிலே பொலிவேறத் திகழ்வது போல்
பாங்குடனே மலர்தன்னைப் பாரும் எனக் கையேந்தித்
தேங்குபுகழ் நல்லார்முன் தெளிமனதில் யான்செல்ல
வழங்கியதைச் சீராட்டி வாழ்வளித்தார் வாழியவே!

| | | |
|---|---|---|
| 1. | திருமலை திருப்பதி தேவஸ்தானம் திருப்பதி | ரூ20000 |
| 2. | திருமிகு. வனஜா ஜெயவேலு,கழணிப் பாக்கம் உயர்நிலைப் பள்ளி அறக்கட்டளை | 5000 |
| 3. | திருமதி. கலைவாணி கழனிப் பாக்கம் உயர்நிலைப் பள்ளி அறக்கட்டளை | 5000 |
| 4. | திருமதி. லோகவதி பிரம்மஞானம், சென்னை 'பிரம்மஞானம்' ஆன்மீக இதழ் ஆசிரியர் | 1000 |
| 5. | திரு. கே.சாமிநாதன், கவுன்சிலர், மாளியபட்டு உயர்நிலைப் பள்ளி அறங்காவலர் குழு தலைவர் | 1000 |
| 6. | திரு. வெங்கிடே சுவரர், கம்யூட்டர் (சன்மார்க்கி......) | 1000 |
| 7. | திரு. கந்தனேரி, சிவசோதி, சிங்கப்பூர் (பிரம்மவித்யாபீடம்) | 1000 |
| 8. | திரு.பி.கே. மணி, துணைத் தலைவர் வேதாந்தசபை | 1000 |
| 9. | திரு. ஜெயவேலு,ராமாபுரம் வேதாந்தமடம் | 1000 |
| 10. | திருமதி. மாலதி செல்வன், கந்தனேரி கந்தசாமி மடம் | 1000 |
| 11. | திருமதி. பரிமனம், மாளியப்பட்டு வேதாந்தமடம் | 1000 |
| 12. | திரு.சத்தியமூர்த்தி, செங்குட்டை வேதாந்த சபை செயலாளர் | 1000 |
| 13. | திரு. ஜவகர், சென்னை வேதாந்த சபை தலைவர் | 1000 |
| 14. | திரு. கோவிந்தராஜி, பணமடங்கி பூசாரிகள் பேரவைதலைவர் | 1000 |
| 15. | திரு. இளஞ்செழியன், பெங்களூர் சன்மார்க்கசங்கம் | 1000 |
| 16. | திரு. அண்ணாமலை ஆசிரியர் அம்மையார்குப்பம் | 1000 |
| 17. | திரு சண்முகானந்த சுவாமிகள் குடியேற்றம் | 1000 |
| 18. | திரு. புலவர் நடராசன் ஆசிரியர் , வேலூர் | 1000 |
| 19. | திருமதி. ஜெயகாந்தம்மாள், குடிசை கிராமம் | 1000 |

20. திருமதி. கல்யாணி பழனி ஆச்சாரி, குடியாத்தம் 1000
21. திரு. ஏ.சுப்பிரமணி ஆசிரியர், தேவனாம்பட்டு 1000
22. திரு. தசரதன், மாதனூர் 1000
23. திரு. நயினப்பா ஆசிரியர் இரண்டாடி 1000
24. திரு. தன்சிங், வேலூர், 100
25. திரு. தனசேகரன், வேலூர் 100
26. திரு. ஜி.முனிசாமி அரிசி மண்டி, வேலூர் 100
27. திரு. டி. கோடீஸ்வரன் அரசுஜெட் வேலூர் 100
28. திரு. பொன்னுசாமி ரைஸ்மில், பள்ளக் கொல்லை 100
29. திரு. கே. வீராசாமி, விழுந்தாகால் 100
30. திரு. உமாபதி, சத்துவாச்சாரி 100
31. திரு. மூர்த்தி, தாங்கல் 100
32. திரு. கோவிந்த ரெட்டியார், அணைக்கட்டு 100
33. திரு. சொக்கலிங்கம், பணமடங்கி 100
34. திருமதி. சாதுலட்சுமியம்மாள் அணைக்கட்டு 100
35. திருமதி. மங்கையம்மாள், பனமடங்கி 100
36. திரு. மாரிமுத்து சென்ன சமுத்திரம் 100
37. திரு. இராசேந்திரன் சென்னை 100
38. திரு. பிரமஞானம் பிர்மவித்யா பீடம் சென்னை 100
39. தவத்திரு. வேலவனார் பள்ளிகொண்டான் 1000
40. திரு இலட்சுமணன் அணைக்கட்டு 1000
41. திரு . பொருளாளர் பாலசுப்பிரமணி கொடைக்கல் மடம் 1000
42. திரு. வேதாந் த மடம் கொடைக்கல் பாஞ்சாலையம்மாள். 1000
43. திரு. குகையநல்லூர் வேதாந்த மடம் புருஷோத்தமன் 1000
44. திரு. வேதாந்த மாயாண்டி மடம் பொன்னை. 1000
45. அம். ரங்கநாதன் உயர் நிலைப்பள்ளி அறக்கட்டளை
கழணிப்பாக்கம் 1000



ஓம் தத் சத்

## பதிப்புரை

உலகில் காலந்தோறும் அருளாளர்கள் தோன்றிக் கொண்டே இருக்கின்றார்கள் அந்தந்தக் காலத்தில் வாழும் மக்களுக்கேற்ற வாழ்வியல் நெறி முறைகளை எடுத்துரைத்தே வருகிறார்கள். வாழ்க்கையில் அவரவர்தம் இயல்புக்கேற்ப அவ்வருளாளர்கள் ஒருவரை தேர்ந்தெடுத்து அவருடைய உபதேசங்களைப் படித்து பயன் பெற வேண்டும் என்பது அவர்களின் அவதாரத்திற்கு காரணமாகும்.

இவ்வாறு வாழையடி வாழையாக அருளாளர் மரபில் 18-ம் நூற்றாண்டில் தமிழ் நாட்டில் வள்ளலார், அச்சுத தாசசுவாமிகளும் வடநாட்டில் இராமகிருஷ்ணர், விவேகானந்தரும் அருள்வழி வாழ்ந்து வழிகாட்டினர்

19-ஆம் நூற்றாண்டில் வடநாட்டில் மகாத்மாகாந்தியடி களும் தென்னாட்டில் மவுன குரு சுவாமிகளும். திரு.வி. கலியாணசுந்தரனாரும் நாடு, மொழி, சாதி, சமய நிலைகடந்து அருள் வழி வாழ்ந்து வழிகாட்டிச் சென்றனர்.

''தோன்றின் புகழொடு தோன்றுக'' தாம் இன்புறுவது உலகு இன்புறக்கண்டு காமுறுவர் கற்றறிந்தார்'' என்னும் குறள் கருத்திற்கு ஒப்ப 50 ஆண்டுகளாக வேதாந்த நூற்பயிற்சி மவுன குரு சுவாமிகளால் நடைபெற்றது.

2.1.1965ல் மவுன குரு விதேகமுத்தி அடைந்த பின்னரும் அவர் காட்டிய வழியில் வேதாந்த நூல் இலவச பயிற்சி நடைபெற்று வருகிறது. அதன் அடையாளமே இந்த வேதாந்த ஞானமலர்'' இந் நூலானது பக்தி, யோகம், ஞானம் என படிப்படியாக பக்குவக்மாகி எளிதில் துன்பம் நீங்கி இன்ப வாழ்வு அடைய வழகாட்டும் ஒளிவிளக்கு, இந்த மலர் தவத்திரு மவுனகுரு சுவாமிகள் திருவருளால் வெளிவருகிறது. இ.:து ஆன்மீக உலகிற்கோர் மணிமகுடம் ''அன்னை தமிழ்தாய்க்கு அழகு முல்லை சூட்டும் திருப்பணி'' அறிவு வளர்ச்சிற்கோர் சுடர் விளக்கு!

ஆன்மீக முன்னேற்றத்திற்கு கோர் அமுத சுரபி! இல்லற வாழ் விற்கோர் இணையற்ற செல்வம்! உயர் சாந்தப்பண் பொனுக்கு உற்றதோர்துணை! துன்பத்தின் நீக்கம்! இன்பத்தின் அடைவு! பாரத நாட்டின்கண் பல மொழிகளில் உள்ள வேத கருத்துக்களையும் ஞானிகள் பாடிய செய்யுள்களையும் எளிய நடையில் பேசும் தமிழில் எல்லோரும் புரிந்துக் கொள்ளும வண்ணம் உரைநடையாக வெளியிட முதல் பதிப்பாக மவுனகுரு பதிப்பகம் முன் வந்துள்ளது. அனன்பர்கள் ஆதரவு தந்து படித்து மேலான பிறவிப்பருயன் எய்த விரும்பு கின்றோம். '

மவுனகுரு பதிப்பகத்தார்.

தவத்திரு சண்முகானந்த சுவாமிகள் வேதாந்த பேராசிரியர்
குடியேற்றம்

நூன்முகம் ஓம் தத் சத் தவத்திரு மவுன குருவே நம

நூலின் கண் நுழையும் முன்னர் நூல் நவிலும் மையக் ருத்தாக இந்நூலிற்கு வழங்கும் பெயர் '' வேதாந்த ஞான மலர் '' ன்பதாகும் இம்மலர் எட்டு இதழ்களாக எட்டு அத்தியாயங்களாக மைந்து உள்ளது.

கோவிந்தனை நாடு'' என்னும் தலைப்பில் மலர்கிறது. பராசையை விடுத்து நிலையில்லா வாழ்க்கையை நினைவூட்டும் சாரணையானது நல்லோருடன் கூடி விசாரித்து ரமானந்தத்தை அடைவாயாக என்று கூறும் இரண்டாவதாக. கீதா சாரத் தாலாட்டு'' என்னும் தலைப்பின் ''கீழ்யாரும் றப்பதோ இறப்பதோ இல்லை '' என்னும் பகவான் கண்ணனின் பதேசம் பிறப்பு இறப்பு உடலுக்கு, பசிதாகம் பிராணனுக்கு, ண்டல், கேட்டல், நடத்தல், கொடுத்தல், வாங்கல் ானேந்திரிய கர்மேந்திரிய தொழில், பயம் இன்பதுன்பம் மகோபம் மனத்திற்கே அன்றி ஆத்மாவுக்கன்று. ஆத்மா பிறந்து றப்பது இல்லை, என்னும் பிரமஞானம் (பேரறிவு) ர்சுன்னுக்குப் பகவானின் உபதேசம் ஆகும். தற்போது கட்பவரும் கற்பவரும் முக்தி பேறு அடைய வழிகாட்டுவது ருகிருபையே எனக் கூறி மூன்றாவதாக.''சசிவன்னபோதம்'' டலுக்கு வரும் வியாதியானது குருஅனுக்கிரகத்தால் நீங்கி கதிக்கும் வழிகாட்டுகிறது.

நான்காவதாக: ''நாநா சீவவாதக் கட்டளை என்னும் லைப்பின் கீழ் ஜீவன், ஈசுவரன் , பிரமம், தூலசூட்சும காரண ரவிளக்கத்துடன் பந்த மோட்சங்களின் காரணத்தைக் கூறி

ஐந்தாவதாக மகாராசாதுறவு'' என்னும் தலைப்பின் கீழ் கை அஞ்ஞானம், உறவு ஞானம், ஞானத்திற்கு மாதாபிதா யார் ன்னும் விசாரணை என்னும் யுடன்?

துறவு நிலை ஆண்களுக்கு மட்டுமா. பெண்களுக்கு வேதமானது துறவு நிலை என்ன சொல்கிறது? என்ற கேள்வி எல்லோரையும் சிந்திக்க வைத்து அரச பவியை விடத் துறவு நிலையே மிகச் சிறந்தது என நிலைநாட்டி

ஆறாவதாக உபநிடதமானது "நான்" என்னும் பதத்திற்கு விளக்கம் ஞானசாதன நிலையைப் பற்றியும் அஷ்டபிரமாணம் எட்டுவித விளக்கம்) கூறி தூலசரீரம் முதல் பிரம நிலைவரை திருஷ்டாந்தமாகக் கூறிஏழாவதாக அஷ்டாவிக்கிர கி தையும் எட்டாவதாக பஞ்சபத மகாவாக்கிய ரகசியமானது சமாதி நிலை விளக்கத்தைக் கூறு கிறது.

முத்தர் பெத்தர் இலக்கணத்தினையும், அஞ்ஞான ஞான இலக்கணத்தினையும் இந்த உபநிடதம் புகட்டுகிறது. இந்த வேதாந்த ஞானமலரின் வாசனையானது உலகம் பூராவும் மணம் பெறவேண்டும் என்ற அவாவின் காரணமாக எமது சிற்றறிவுக்கு எட்டியவாறு விளக்கப்பட்டுள்ளது. ஆன்மீக அருள் வழங்கல், என்னும் சிறப்பு, நோக்கோடு இந்த மலலை எனது குருநாதனே தவத்திரு கந்தர்ரி மவுன குருவின் திருவடி கமலங்களுக்கு சமர்ப்பிக்கின்றனம் ஆன்ம நேய அன்பர்கள் இன்னூலுக்குச் சிறப்பானதொரு வரவேற்பளித்து மேன்மேலும் இதுபோன்ற ஞான நூல்கள் வெளிவர ஆக்கமும் ஊக்கமும் அளித்திட வேண்டியும் இதைப் படிப்போரும் கேட்போரும் வீடுபேறு அடைய இறைஞ்சி எனது முன்னுரையை முடித்து நூலின் கண் நுழையுமாறு வேண்டியும் வாழ்த்தியும் இம்மலரை தவத்திரு மவுனகுரு சுவாமிகளின் திருப்பாத கமலங்களுக்கு சமர்ப்பிக்கின்றனம்.

தவத்திரு சண்முகானந்த சுவாமிகள் வேதாந்த பேராசியர்
குடியேற்றம்.





# அணிந்துரை

**புலவர் க.அ. கிருஷ்ணன்** எம்.ஏ. எம்.இடி.,

*தலைமையாசிரியர்*

*கந்தனேரி வேலூர் மாவட்டம் 635 809*

*''அறம் பொருள் இன்பம் வீடடைதல் நூற்பயன்'' என்பது நன்னூல் விதி. உலக வாழ்க்கைக்குப் பொருள் தேவை, பொருள் இருந்தால் அறம் செய்யலாம். அறத்தால் இன்பம் பெறலாம். இம்மூன்றும் இவ்வுலக வாழ்க்கையில் நிகழும். இவை நல்வழியில் செய்யப்பட்டால் கிடைப்பது வீடுபேறு. வீடுபேறு என்பது அவ்வுலக வாழ்க்கை. அதை அடைய வழிகாட்டுவன ஞான நூல்கள். அவை சித்தாந்த நூல்கள் என்றும், வேதாந்த நூல்கள் என்றும் வகுக்கப்படுகின்றன. வேதாந்த நூல்களை அடிப்படையாக வைத்து எழுதப்பட்டதே இந்நூல். இதன் பெயர் ''வேதாந்த ஞானமலர்'' என்பதாகும். இதன் ஆசிரியர் திருமிகு இரா. அண்ணாமலை அடிகளார் ஆவார்.*

*இந்நூலாசிரியரைப் பற்றியும் இந்நூலைப் பற்றியும் சில கருத்துக்களைக் கூற விழைகின்றேன். இந்நூலாசிரியர் அண்ணாமலை அடிகளார் கந்தனேரி கிராமத்தில் பிறந்து வளர்ந்தவர். சிறுவயது முதலே கல்வியிலும் பொது தொண்டிலும் ஆர்வம் உள்ளவர். நல்ல பண்பாளர். நிலச்சுவான்தாரர். இவ்வூரின் ஊராட்சித் தலைவராக இருபது ஆண்டுகளும். கூட்டுறவு வங்கித் தலைவராகப் பல ஆண்டுகளும் திறம்பட பணியாற்றியுள்ளார். பெருந்தலைவர் காமராஜர், பெரியவர் பக்தவச்சலம் முதலான முதல்வர்களைக் கண்டு பேசி இவ்வூருக்குப் பல நற்செயல்கள் செய்துள்ளார். எடுத்துக்காட்டாகச் சில :- ஊருக்கு அடிப்படைத் தேவைகளான ஆரம்பப் பாடசாலை, குடிநீர்க் குழாய் மின்சார விளக்குகள், கூட்டுறவு வங்கி, பால் வள வங்கி, தாய் சேய்நலவிடுதி சமுதாயத் தோப்பு முதலியவற்றைக் கொண்டு வந்தவர் இவரே. இன்னும் பல நற்செயல்கள் இவரால் செய்யப்பட்டன. பிறகு ஆன்மிகத்*

துறையில் நாட்டம் கொண்டு வேதாந்த வல்லுனர்கள், துறவிகளோடு தொடர்பு கொண்டு வேதாந்த பாடசாலைகள் நடத்தி பக்திநெறி பரப்பி வருகிறார். இன்று இல்லறத் துறவியாகவே வாழ்ந்து வருகிறார். இவர் பெரும்புகழ்பெற்ற ஞானி மவுன குருசாமிகளின் சீடராவார். அவர் காட்டிய வழியில் இன்று வேதாந்த ஆன்மீக நெறியைப் பரப்பி வருகிறார். இத்துறையில் சுமார் 34 அண்டு காலமாகப் பணியாற்றி வருகிறார். ஓயா உழைப்பு, சலியா உழைப்பு என்பதே இவர் வாழக்கையாக உள்ளது. "உயர்நிலைப்பள்ளி கந்தனேரியிலும் பனேமடங்கியிலும் ஏற்படுத்த முயற்சி செய்து வருகிறார்.

"கற்றதனால் ஆய பயன்என்கொல் வாலறிவன் நற்றாள் தொழாஅர் எனின்" என்பது வள்ளுவர் வாக்கு. இவர் எழுதிய வேதாந்த ஞானமலர் என்னும் இந்நூல் வதங்களின் சாரம் என்று கூறினால் மிகையன்று. ரிக், யஜீர், சாமம், அதர்வணம் என்று வேதங்கள் நான்காகக் கூறப்படுகிறது. இன்றும் அவைகள் படித்தோர்க்கும பாமரர்க்கும் காணாப் பொருளாகவும் காட்டலாகாப் பொருளாகவுமே இருந்து வருகின்றன். இந்நூலைப் படிப்பவர்கள் வேதங்களின் சாரத்தை ஓரளவு உணரக் கூடும். கோவிந்தனுக்கு நாராயணன் என்றும் அஷ்டாட்சரம் என்று ஒரு பொருளும் உண்டு. அதேபோல் இந்த ஞான மலரிலும் எட்டு இதழ்கள் உள்ளன. இவற்றில் மகாராசா துறவு என்பது சுவையோடு கூடிய நீதிக்கதையாகும். இந்நூலைப் படிப்போர்க்கு நல்ல பக்தியும் ஆன்மீகத்தில் ஈடுபாடும் பற்றற்ற நிலை ஏற்படும்.

" தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு"

என்ற வள்ளுவர். வாக்கை நோக்குக! ஆகவே அன்பர்கள் இந்நூலை வாங்கிப் படித்து பெரும் பேறு பெற வேண்டும் எனக் கேட்டுக் கொள்ளுகிறேன். இந்நூலை வாங்குவதன் மூலம் ஆன்மிக வளர்ச்சிக்குத் துணை நிற்பதோடு இவர் வெளியிட இருக்கும் ஞான நூல்களுக்கு ஆக்கமும் ஊக்கமும் தந்தவர்கள்

*ஆவோம். மேற்கண்ட எட்டு இதழ்கள் கொண்ட வண்ணமலரை, வாடா மலரை, வாசனை மலரை அனைவரும் வாங்கி நறுமணம்பெற கேட்டுக் கொள்ளுகிறேன்.*

*தென்னிந்திய ஆன்மிக வளர்ச்சிக் கழகத்தின் தலைவராகப் பணியாற்றி வரும் திருமிகு அண்ணாமலை அடிகளார் தவத்திரு, கந்தனேரி மவுன குருசாமிகளின் சீடர் என்பது பெருமையளிப்பதாகும். இவர் ஆண்டுதோறும் கரிகிரி என்னும் கிராமத்தில் தவத்திரு மவுன குருசாமிகளின் நினைவாக குருபூசை நடத்தி அன்னதானம் செய்து வருகிறார், அதற்கு பல அன்பர்கள் உதவியாக உள்ளார்கள். திருமுருக கிருபானந்த வாரியார், தமிழறிஞர் டாக்டர். மு. வரதராசனார் போன்றோர் குருபூசையில் சொற்பொழிவாற்றியுள்ளார்கள். வாரியாரைப் போன்று சுயமாகப் படித்து அறிஞரானவர் அண்ணாமலை அடிகளார் , தமிழக அரசு அவருக்கு தமிழறிஞர் விருது வழங்கி சிறப்பித்துள்ளது, மேலும் அவருக்கு பெருமை சேர்ப்பதாக உள்ளது. அவருக்கும் அவருடைய வேதாந்த ஞான மலருக்கும் என் இனிய வாழ்த்துக்கள் உரியதாகும். வாழ்க! வளர்க! அவர் தொண்டு.*

*அன்பன்*
*புலவர் க. அ. கிருட்டிணன்.*

## மவுன குரு சுவாமிகள் பற்றி ....

நாட்டில் உள்ள மற்ற துறவிகளும் சுவாமிகளைப் பின்பற்றினால் பெரு நன்மையாகும் .

-மகாத்மா காந்தியடிகள்

நான் ஒரு மவுன மலையைப் பார்க்கிறேன் . அது நடப்பது தொண்டுவண்ணமாய் இருப்பது . அவர் ஊரில்லார் பேரில்லார் . எங்கே பிறந்தாரோ. எங்கே வளர்ந்தாரோ? தெரியவில்லை . சாதாரண மனிதனைப் போலவே உலவுகிறார் . அவர் மௌனமாய் இருந்ததால் அவரை மக்கள் மவுனசுவாமிகள் என்று அழைக்கிறார்கள் .

-திரு. வி. க

கங்கையும் . காவிரியும் ஒன்றுபடுத்தக் கால்வாய் எடுத்தல் வேண்டுமெனப் படம் போட்டுக் காட்டினார் .

-மு.வரதராசனார்.

எனக்குத் தெரிந்தவரை இந்தியாவில் தோன்றிய ஞானிகளில் கரிகரி மவுன சுவாமிகளைப் போன்ற வரைக் காணுதல் அரிது .

- எஸ் . சச்சிதானந்தம் பிள்ளை

## குருவணக்கம்

மவுன குரு சீடர் சாது.நாகரத்தினம் அம்மையார்

தவத்திரு , ஜெயராம அடிகளார்

செங்குட்டை காட்பாடி.

இறைவன் வணக்கம் குருவணக்கம்.

1. இருட்டில் விளக்கு - விளக்கு என்றால் இருள் போய்விடுமா? அந்தகாரக்குகையில் ஆயிரம் நாள் இருந்தாலும் தீபம் கண்டவுடன் இருள் நீங்கும். அதுபோல தத்துவ விசாரணை செய்து ஞானம் என்கிற தீபம் உண்டானால், அஞ்ஞானம் என்ற இருள், போம். உண்மையானது நான் என்னும் அறிவு, உண்மையாக தோன்றும் உலகம் தத்துவம். இது பிரம்மத்தினிடம் ஒருகாலும் இல்லாததால் சர்வாபாவனாம் இந்த சர்வாபாவனையே இரு கரம் கூப்பி தலை குனிந்து வணங்கி நிற்கின்றேன்.
2. நிஷ்பிரபஞ்சன் என்றால், பிரபஞ்சமின்மை. உலகத்தை பேர்த்துவிட வேண்டும் என்பது அல்ல? சொப்பன உலகம் என்றே துணிவுடன் ஒழித்தல் வேண்டும். இதனால் ஜெகத் இல்லை. துணிவுடன் ஒழித்தால் ஞானம் உண்டாகிறது. இதனால் அவனே நிஷ்பிரபஞ்சன். இந்த நிஷ்பிரபஞ்சனையே இரு கரம் கூப்பி தலை குனிந்து வணங்கி நிற்கின்றேன்.
3. புவியில் மரம், செடி முதலியவை உதித்து, இருந்து, புவியாக அழிதல் போல ஜகம் அறியும் சாட்சியாக நம்மில் உதித்து, இருந்து, அழிந்து விடலாலே தன்னைப்போல் வேறு ஒரு வஸ்து இல்லாமையினால் அத்வைத பிரம்மம். இந்த அத்வைத பிரம்மத்தையே இருகரம் கூப்பி தலை குனிந்து வணங்கி நிற்கின்றேன்.
4. இருதயத்தீல் தானாகவே பிரகாசிக்கும் தத்துவம் சச்சிதானந்த சொரூபமானது. மூன்று நிலைகளிலும் ஊடுருவி விழித்துக் கொண்டு சாட்சிபோல் பார்த்துக் கொண்டு நிஷ்களமான பஞ்ச பூதங் கடந்த ஆன் ம சொரூபம் ஆனாவர் இவர்.

2.ஆன்மா வாயுவாதி பூதபௌதிகங்களோடு அனைத்திலும் வியாபித்திருந்து . ''பரவும் ஆகாசம் ஒன்றின் பற்றுது மற்றநாலும் '' போல் . அசங்கமாம் . அவித்தை . காமம் . கர்மங்களொழித்த ஞானியாவார்
மவுன குரு

குறிப்பு - ஞானியானாலும் . அஞ்ஞானி யானாலும் . பிராரத்த வினை அனுபவித்தே தீர வேண்டும் .

3. சஞ்சலமற்ற அகண்டம் பூரணமாய் சித்தம் பிரம்மாகாரமான ஞானியாவார் இவர்.

4. சர்வ அனர்த்தங்களையும் . விகற்பங்களையும் . விடடொழிதட்து. பிரம்த்மாத்திரமாய் அகண்டானுபவ ஞானி யாவார் இவர் .

5. நாம ரூபமாகிய ஜகத் பொய் . பந்தத்தின் ரூபம் மனைவி . புத்திரர்கள் . தனங்கள் என்ற திட ஞான முள்ள ஞானியாவார் இவர் .

6. மனம் பிரமத்தில் நிலை நிறுத்தினால் . கர்ம பலங்கள் எரிக்கப்பட்டு விடுகின்றன . கர்ம பலன் களை எரித்த பிரம்ம சொரூபமாவார் இவர் .

7. முட . கோர . சாந்தம் விருத்திகள் விட்ட சமயம் சத்து . சித்து . ஆனந்தம் வெளியாம் . அந்த சச்சிதானந்த பிரம்ம சொருபமாவார் இவர்.

8. வந்து போகும் நிகழ்ச்சிகளில் பாதிக்கப்படாதவனே பிரம்ம. அந்த பிரம்ம சொரூபமே இவர்.

9. ஆகாயம் முதல் அகங்கார பரியந்தமான பிரபஞ்சம் ரச்சுவில் சர்பம் போல . அசத் து . ஜடம் . துக்கம் என பிரித் து பிரம்மத்தை எளிதாக அறிதல் . பொருட்டு பிரம்மம் ஏகம் எனப்படும் . ஏகமாகிய பிரம்ம சொரூபமே இவர்.

10. சர்வத்தையும் அறியும் சுயம் பிரகாசமான பிரமத்தை அறிய வேறு பிரகாசந்தரமேது. பல புருடர் முன்னே தசமன் தன்னை பார்ப்பதும் தனைக் கொண்டேதான் அப்படி போலசுயம் பிரகாசமான பிரம்ம சொரூபமாவார் இவர்.

11. விருத்தி ஞானம் அஞ்ஞானத்தை நிவர்த் தித்து, ஜாடி நீர் மண்ணை பிரித்த தேற்றாம் பொடிபோல தானும் மண்ணொடுமாயும் அப்போது பரிபூரண பிரம்ம சொரூபம் அகண்டானுபவ சித்தி கூடும். அந்தபரி பூரண பிரம்ம சொரூபமாவார் இவர்.

12. வெல்லத்துக்கு தானே மதுரசுபாவம் போல், ஆன்மாதானே அனுபவரூபம் எக்காலத்தும் பந்த மற்ற பிரம்ம சொரூபமாவார் இவர்,

13. அஞ்ஞானத்தால் அந்தக் கரணத்தையே ஆத்மாவாக தவறாக புரிந்துக்கொண்டு, கரணங்கள் செயல்பட தொடங்கும் போது நான் என்ற அகங்காரம் உடல் முதலானவற்றையே, காட்டிக்கொண்டிருக்கிறது. பிரம்மம் காணும் பொருளிலெல்லாம் உள்ளேயும் வெளியேயும் இருக்கிறது. பிரிந்து நிற்க வில்லை யாதொன்றும் செய்வதில்லை எதிலும் ஒட்டுவதில்லை. அறிய முடியாத பிரம்ம சொரூபமாவார் இவர்.

14. மனது சத்துவசொரூபம், ரஜஸ்தமஸ் நசிந்தால் கனபரிணாம சலனம் போம், போகவே, மனம் களங்க மற்ற ஆகாசம் போல் பிரம்மத்தில் நிர்வி கற்ப சமாதியில் நிற்கும் பிரம்மமாவார் இவர்.

15. ஜாக்ரம், சொப்பனம், சுழுத்தி அவஸ்தைகளில் எழுந்திடும் விருத்திகளும், மூட, கோர சாந்தம் முதலிய விருத்திகளையும், ஒழித்து ஆனந்தமாய் இருக்கும் பிரம்மசொரூபமாவார் இவர்.

16. இருதயத்தில் தானாகவே பிரகாசிக்கும் தத்துவம், சச்சிதானந்த சொரூபமானது மூன்று நிலைகளிலும் ஊடுருவி வீழித்துக் கொண்டு, சாக்ஷீபோல் பார்த்துக் கொண்டு நிஷ்களமான, பஞ்சபூதங்களின் கூட்டு அல்லாதது ஆத்மா. அந்த ஆத்ம சொரூபமே இவர்.

17. மனதினாலும் வாக்கினாலும், அடைய முடியாத, மேலானதும் பிறப்பு அற்ற, மாறுதலற்றதுமான ஆத்மாவால், எல்லா வார்த்தைகளும் ஒலிக்கின்றனவோ அதுவே ஆத்மா, அந்த ஆத்மசொரூபமே இவர்.
18. பலவிதநாமரூபங் கொண்ட பிரபஞ்சம் பர பிரமத்தை ஆதாரமாக கொண்டு, கயிறு பாம்பாக தோற்ற மளிப்பதைப் போல பிரதி பலிக்கிறது. அத்த பர பிரம்ம சொரூபமே இவர்.
19. இது அறிவு சொரூபமாய் எங்கும் வியாபக மான ஆகாயம் போல, வியாபகமான பிரம்ம சொரூப மாவார்

இவர்.

இவர் படம் திறப்பதில் பெரு மகிழ்ச்சிஅடைகிறேன்.
உண்மையுள்ள
கே. வி. ஜெயராம பிள்ளை,
கரிகிரி.

மவுன குரு சீடர்கள்

திருமதி . சாது நாகரத்தினம்மாள் கரிகிரி
திரு . கே. வி. ஜெயராம பிள்ளை . கரிகிரி





ஓம் தத் சத்

# வாழ்த்துரை

## தென்னிந்திய ஆன்மீக வளர்ச்சிக் கழகம், வேலூர்

ஜெ. சத்தியமூர்த்தி, செயலாளர், (செங்குட்டை)

சின்னமுனிரத்தினம், அணைக்கட்டு

பி.கே. மணி, துணைத்தலைவர், அணைக்கட்டு

வேதங்கள் நான்கும் நூல் வழியாயின் மொழியாக்கம் செய்யுங்கால் சிதையும் என்று எண்ணிய குருமார்கள். அதனை குரு (பாரம்பர்யம்) வழியில் அறியும்படி செய்தனர். புனித வேதங்களைச் செவியால் கேட்டுணர முடியுமே அன்றி கண்களால் காண இயலாததாயின.

ஆதலின் அதனை நிறைவு செய்யும் பொருட்டு வேதங்களின் சாரமாக உபநிடதங்கள் பலவாகவும், அதனது விரிவாக்கமாக வேதாந்த நூல்கள் பலவும் நமது முன்னோரால் வெளியிடப்பட்டது. பல மடங்களில், முன்னோர் நூல்கள் இல்லாமல் போயினமையால் வேதாந்த போதனை செய்யவழியின்றி இடர்படும் நிலை உருவாகியுள்ளது. இதனை நீக்கும் வண்ணமாக சுமார் 28 பெரிய, மற்றும் சிறிய நூல்களை தனி நூல்களாகவும் தொகுப்பு நூல்களாகவும் வெளியிடும் வகையில் சில பேராசிரியர்களின் எளிய உரையோடு அமைத்து சுமார் ரூபாய் இரண்டு இலட்சம் மதிப்பீடு செய்து திருப்பதி தேவஸ்தானத்தை அணுகியதில் உடனடியாக அச்சேறுவிக்க உத்திரவு செய்து அவர்கள் நிதி உதவி தர இசைவு தந்து ஊக்குவித்தமைக்கு நன்றி கூறுகின்றனம் இந்நூலைக் கண்ணுறும் அன்பர்கள், தங்களால் இயன்றவரையில் பொருளாகவோ, பணமாகவோ, ஞான தானம் நல்கி அச்சிட வேதாந்த நூல்கள் 28 ம் வெளிவர உதவி புரிந்தும் வாழ்த்துரை வழங்கியும் ஆதரவு தர அன்போடு கேட்டுக் கொள்கின்றனம் .

இங்ஙனம்

(ஜெ.சத்தியமூர்த்தி) பி.கே. மணி, சின்னமுனிர்த்தினம்



## நேரிசை ஆசிரியப்பா வாழ்த்துப் பாமாலை

கு. அச்சுதானந்தன்
மடாதிபதி , அச்சுத தாசர் மடம் வல்லம்

உலகுயிர் பரமென் றோதிய வபாவம்,
கலக மாமெனல் கருத்தில் கண்டு
பார்தனில் எவர்க்கும் பாங்குடன் தெரிய,
ஓர் நிக ரில்லா உத்தமன் செய்த
வேத வாக்கிய விழுப்பொருள் அனைத்தும்,
ஓதி உன்ன ஓர்பொருள் நீயாம்
ஆகலின் அவற்றை அண்டல் நீதியாய்,
தாகம் கொண்டு தாங்கினர் தவத்தை
உன்னத தபசு உம்பரும் மகிழ,
அன்னவர் பரம்பரை அணுக ராகி
தன்னறி வறிவால் சம்பத் தென்னும்,
நன்கிரி பிரம பீடத் துற்றனன்
அரியவன் எனலாம் அச்சு தானந்,
தரும் கரி கிரிமௌன குருவும் ஆகவே
வசன ஞான மார்க்க முடே,
நிசம தான நீணூல் வேண்டி
மாறா தென்றும் மாபெரும் முனைப்பால்,
பேறா தென்ப பேர்நூல் கோத்த
கந்தன் ஏரியாம் கனிதவப் பயத்தான்,
வந்தனன் உலகு வாழ்பவர் ஏத்த
அண்ணா மலையெனும் அடிகளா ரவரும்,
ஒண்புகழ் கமழும் ஓர்ஜெய ராமனாம்
அடிகளார் பயந்த அற்புதச் செல்வனாம்
வடிவறி நலத்தோன் வேலையில் வசியும்
சத்திய மூர்த்தியும் சகமாய் கொண்டு,
இத்தரை யதனில் முத்திரை பெறவே
வேதாந்த ஞான மலர்நூல் ஒன்றை,
ஓத மேதினி ஒருபெரு பனுவலாய்
அருளினன் அவரொடு அவனியில்
இருளற எவரும் இந்நூல் வாழி

-கு அச்சுதானந்தன்





1.6.1999

திருமிகு. தி. வனஜா, ஜெயவேல்
உயர்நிலைப்பள்ளி அறக்கட்டளைகுழு உறுப்பினர் கந்தனேரி
திரு. லெட்சுமணன் பொருளாளர் அணைக்கட்டு

## விழிப்புணர்வு படைப்பு

புண்ணியம் மிகுந்த பாரதநாட்டின் கண் சாதி, மத பேதமின்றி எல்லோருக்கும் வேதாந்த பாடங்களை, இலவசமாக போதித்துவருகின்ற ஒரே ஸ்தாபனம். தென்இந்திய ஆன்மிக வளர்ச்சிக்கழகம் இந்தஸ்தாபனத்தின் தலைவராக தவத்திரு அண்ணாமலை அடிகளார், சுமார் 34 ஆண்டுகளாக செவி வழியாகவே போதித்து சுமார் 2000 மாணவர்களை உருவாக்கியுள்ளார். தமிழ்நாட்டில் 75 ஆண்டுகளாக வேதாந்த நூல்கள் வெளியிடாததால் வேதாந்தம் கற்க விரும்புவோர் நூல் இல்லாது மிகுந்த சிரமம்பட்டனர்.

இந்தகுறையைப்போக்க கந்தனேரி அடிகளார் அவர்கள் இருபத்தெட்டு வேதாந்த நூல்கள் அனைத்தையும் 4 தொகுப்புகளாக 4000 நூல்கள் வெளிவர செய்யும்முயற்சி பாராட்டத்தக்கது. குருசீடர் முறைப்படி வழிவழியாக வந்த இலக்கியங்களை உரைநடையாக்கி ஆன்மிக நாட்டம் கொண்டோரை விழிப்புணர்வு செய்ய முதன்முதலாக வெளிவர இருக்கின்ற வேதாந்தஞான மலர் ஓர் அற்புதப்படைப்பு இதைக் சுற்றுணர்ந்து பக்தியோகம், கர்மயோகம், ஞானம் கைவரப்பெற்று கைவல்ய முத்தியடைய பிரார்த்திக்கின்றோம்.

இங்ஙனம்
திருமதி. வனஜா ஜெயவேல்
திருமிகு. லெட்சுமணன்
பொருளாளர்

## பிரம்மஸ்ரீ அண்ணாமலையார் வேதாந்தப் பேராசிரியர் அம்மையார் குப்பம்
## ஓம் தத் சத்

தமிழ் மாநிலத்தில் அத்வைதத்தைப் பரப்பிய தவத்திரு மவுனகுரு சுவாமிளுக்கு

## சமர்ப்பணம்

''வேதாந்தம் கற்பது பரதேசியாய்ப் போவதற்கல்ல'' விபரம் அறிந்து குடும்பம் நடத்துவதற்காகவே ! என்றார் குருகிணகர் சுவாமிகள்

உடம்பினைப் பெற்ற பயனாவதெல்லாம்

உடம்பினுள் உத்தமனைக் காண்.

என்னும் முதுரைக்கிணங்க

உடம்பை அடைந்ததனாலுண்டாகும் பயன் தேகத்தில் இறைவனைக் காண்பதே ஆகும்.

இரவும் பசலும் ஒன்றன்பின் ஒன்று மாறி மாறி இடையறாது வருதல் போன்று, மக்களுக்குச் சுகத்திற்குப் பின் துக்கமும், துக்கத்திற்குப்பின் சுகமும், வருதலியல்பாகும். அங்ஙனம் வருதற்கேது தர்மாதர்மங்ளெனவும் அவற்றிற் கேது இருவினை யெனவும், அவற்றிற்கேது இராகது வேடங்களெனவும் அவற்றிற்கேது அனுகூல பிரதி கூல ஞானங்களெனவும் அவற்றிற்கேது பேதஞானமெனவும், அவற்றிற்கேது அஞ்ஞானம் எனவும், அது அனாதி எனவும், அவ்வனாதியாய அஞ்ஞானம் நாசமுறுதற்கேது ‘அகம் பிரமாஸ்மி என்னும் மகாவாக்கிய ஞானமெனவும் மறை முதலியவை கூறுகின்றன. அத் தத்துவ ஞானத்தால் சர்வம் மித்தை எனவும், சர்வம் பிரமமெனவும், அதுவே நாம் எனவும் உணர்தற்கு வேண்டிய நூல் வேதாந்த சாத்திரங்களேயாகும்.

இப்பரந்தவுலகின் கண் மக்களால் விரும்பப் படுவன இன்பத்தின் அடைவும் துன்பத்தின் நீக்கமுமாம். துன்பங்கனைத்திற்கும் காரணமெதுவோ அது நீங்காமல் இன்பம் உண்டாகாது. இதனைச் சாந்தோக்ய உபநிடதம் அடியில் வருமாறு பேசுகின்றது.

*நாரதர், சனத் குமார முனிவரை நோக்கிச் ''சுவாமின்! அடியேனைத் துன்ப மில்லாதவனாகச் செய்தருளுவீர்'' என்றார். அதற்குச் சனத் குமார முனிவர். இறைவன் துன்பமற்ற இன்ப வடிவின், அவனுக்கு வேறானவை யெல்லாம் துன்ப வடிவங்கள், காரணமாகிய அஞ்ஞானமும் அதன் காரிய மாகியவுலகும், வேறாகவுள்ளன. ஆதலால் அவை துன்ப வடிவங்களாம். காரணமாகிய அஞ்ஞானம் நீங்காத வரையிலும் துன்பமும் ஒழியாது. இவ்வஞ்ஞானம் மெய் ஞானத்தால் நீங்கும்.அம்மெய்ஞானம் விசாரத்தாலுண்டாகும். ''நான் யார்? இவ்வுலகம் எத்தகையது? இன்ப துன்பங்கட்குக் காரணம் யாது? இவை முதலிய ஆராய்ச்சியே விசாரம் எனப்படும். இத்தகைய விசாரமின்றி இன்பமடைய இயலாது'' எனத் திருவாய்மலந்தருளினர்.*

*இவ்வுயர் நெறியாகிய வேதாந்த விசாரம் பண்டை நாளில் சிறப்புற்று விளங்கியதென்பதை நம் முன்னோர் களாகிய மவுன குருவைப் போன்ற அத்வைத தத்துவ மெய்ஞானிகளின் அனுபவத்தாலும் ''நாம் பெற்ற இன்பயம் இவ்வையகம் பெறுக'' என்னும் உயர் நோக்கத்தால் அவர்கள் அருளிச் செய்த ஞான நூல்களாலும் நன்கு அறியலாம். ஆத்ம ஞானமடைய கேட்டல், சிந்தித்தல், தெளிதலாகிய முச் சாதனங்களை விதித்துளது. இதனால் வேத வாக்கியங்களெல்லாம் நேராகவோ, அன்றி பரம்பரை யாகவோ அவ்வாத்ம ஞானத்தையே நிச்சயிக்கின்றன வென்பது செவ்வனே விளங்கும். கரும காண்டத்திற்கு உட்கரணத் தூய்மை வாயிலாகவும், பக்தி காண்டத்திற்குச் சித்தத்தின் ஒருமை வாயிலாகவும், ஞான காண்டத்திற்கோ நேராகவோ, துன்ப நீக்கமும் இன்ப வடிவமுமாகிய வீட்டினிடத்தே கருத்தாம். இதே கருத்தை மனுபகவான் அருளிய பிரம்ம சூத்திரம். இதி காசம், புராணமாகியவற்றிற்கும். வான்மீகி முனிவர் இயற்றிய ஞானவாசிட்டத்தின் கண்ணும், இவ்வாத்ம ஞானத்தையே நிலை நாட்டியுள்ளனர். உலகியல் வாழ்க்கையே உயிர் வாழ்க்கையெனக் கருதுகின்றவர்க்கு இவ்வாத்ம ஞானக் கருத்து எவ்வாறாயினும் தோன்றாதென வுண்மை யுணர்ந்தோர் கூறுவர். இறைவன் திருவுருவாம் மெய்ஞானிகள் வழிபட்ட தத்துவ நூல்களின் பயிற்சியே இறை வழிபாடு ஆகும் என்பது சான்றோர் கண்ட நெறியாதலின் இவ்வரிய நூலான வேதாந்த சாத்திர நூல் பலவும் அச்சியற்றி ஒரு சேர அன்பர்கட்கு வினா*

விடையாகவும் - உரை நடையாகவும் அளிக்கப்பட்டுள்ளது. இந்நூற்பொருளை ஆர்வத்துடன் சுற்றுணரும் அன்பர்கட்கு குருவருளும் திருவருளும் முன்னிற்குமாக.

" பிறப்பினால் பெற்ற பயனாவ தெல்லாம் துறப்பதாம்

தூநெறிக் கண் சென்று"

பிறப்பினால் உண்டாகும் பயன்தூய வழியில் சென்று பிணைப்புகள் விளைக்கும் உடல் பற்றுக்களினின்றும் நீங்குவதேயாகும். துறவு என்பதற்கு இவ்வாழ்வை ஒழித்து விட்டிருப்பதே என்று தவறாகப் பொருள் கொள்கிறார்கள். இந்த ஒரே காரணத்தால் தான் பிரமவித்தை உலகில் அருகிப் போயின.

ஆன்மநேய ஒருமைப்பாடுடைய ஆத்மஞான ஆனந்த சொரூபிகளாகிய அன்புள்ளம் கொண்டோரே:

1108 - 108 உப நிஷத்துக்களில் துருவி ஆராய்ந்து கடைந்து எடுத்து பத்து உபநிஷத்தாகத் தொகுத்து தந்தவர் வியாச பகவான், உபநிஷத்துக்கள் எல்லாம் சேர்ந்தது வேதம் எனப்படும். படிப்பவர்க்கு எளிய முறையில் நான்காகப் பிரித்து, இருக்கு, யசூர், சாமம், அதர்வண வேதம் எனப் பெயரிட்டு முதற்காரணப் பிரமத்தை (பேரறிவை) தவிர பரிபூரண ஆனந்த தன்மை இல்லை என்று வெளியிட்டவர் வியாசபகவான்.

அரியபொக்கிஷமான வேதாந்த உண்மையை ஒரு மனிதன், இளம் வயதினிலே தெரிந்துக் கொள்வானேயானால் அவன் வாழ் நாளில் ஏற்படும் இன்ப துன்பங்களிலிருந்து விடுதலையடைந்து மரணபயம் நீங்கி ஆனந்த வாழ்க்கை நடத்த முடியும்.

வேதாந்தம் என்பது வயது முதிர்ந்தவர்கள் தான் தெரிந்து கொள்ள வேண்டும், மண், பெண், பொன்னாசை இருக்கக் கூடாது என்றும் துறவிகட்குத்தான் வேதாந்தம் உரிமை என்றும் சொல்லி இன்னமும் மக்களை நம்ப வைத்து பீதியை உண்டாக்குகின்றனர்.

இல்லறத்திலிருந்து வேதாந்த, உண்மையை வாரி இறை ஆத்மஞான்களாக்ய யாக்ஞவல்லியர், ஜனகர்த், வசிஷ்டர், வியாசர், கண்ணபிரான், ஆதிசங்கரர், திருவள்ளுவர், இராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர், இராமதீர்த்தர், பாரதியார், ஸ்ரீலஸ்ரீ, மவுனகுரு சுவாமிகள் மற்றும் உண்மையை

உணர்ந்த பெங்களூர் மவுனசுவாமிகள், கொடைக்கல் சுப்பிரமணிய சுவாமி, அகஸ்தியர், அத்திரி, காசிபர் கம்மணார் புதூர் (கரிகரி) நாகரத்தினம் அம்மையார், சாது லட்சுமி யம்மையார் கந்தணர் அண்ணாமலை அடிகளார் குகையநல்லூர் கருணானந்த சுவாமிகள், அச்சுததாசர், ஆலங்காயம் நரசிம்ம அம்மையார், சந்நியாசியாகவும், மனைவி மக்களுடனும் இராசயோகத் துடனும் இருந்து வேதாந்த உண்மையை வயது, சாதி, மதம் வேறுபாடின்றி போதித்து வந்துள்ளனர். போதிக்கினறனர் கேட்டு ஆனந்த வாழ்வடைய பிராத்திக்கின்றனம்.

பிரம்மச்சாரி என்பவன் பிரம்மத்தை அறிந்து அதற்குரிய செயல்களைச் செய்துக் கொண்டிருப்பவன், இல் வாழ்வான் என்பவன் பத்தினியோடு கூடி, பயன் கருதாச் செயலைச் செய்து ஞானத்தை அடைபவன்.

வானப்ரஸ்தன் என்பவன் பத்தினியோடு கூடி, யோகம், போகம் இவற்றுடன் பயன் கருதாச் செயலைச் செய்து ஞானத்தையடைபவன்.

சந்நியாசி என்பவன் எல்லாச் சேர்க்கைகளையும் விட்டவனாகையால் மனத்தை வசம் செய்து துரியம் (வேகம்) துரியாதீதம் (அதிவேகம்) என்ற பதங்களை அடைகிறவன் அதனால் உயிருள்ளபோதே ச்வன் முத்திப் பதம் அடைகின்ற இந்நூலை மவுன குரு சுவாமிகட்கு சமர்ப்பணம் செய்கின்றனம்

**பிரம்மஸ்ரீ அண்ணாமலையார் ஆசிரியர் அம்மையார் குப்பம்**



ஓம் தத் சத்

ஸ்ரீ நித்ய பிரகாசானந்த சுவாமிகள்
கீதா ஆசிரமம் , துணைத் தலைவர்,
எலமண்டியம், பில்லபாளையம் (போஸ்ட்)
சித்தூர் மாவட்டம், ஆந்திரப் பிரதேசம் 517520
தொலைபேசி 75027

## அற்புதப் படைப்பு

புண்ணியம் மிகுந்த பாரத நாட்டின் கண்ணிண் சாதி மத்பேதமின்றி எல்லோருக்கும் வேதாந்த பாடங்களை இலவசமாக போதித்து வருகின்ற ஒரே ஸ்தாபனம் தென் இந்திய ஆன்மீக வளர்ச்சிக் கழகம்'' பல ஆண்டுகளாக செவி வாழியாகவே சுமார் 200. மாணவர்களை உருவாக்கிய இக்கழகத்தி தொன்னுடில் அடியேதும் பங்கேற்று போதித்து வருகின்றேன். சுமார் 75 ஆண்டுகளாக தமிழ்நாட்டில் வேதாந்த நூல்கள் வெளியிடாததால் மாணவர்களும் வேதாந்தம் கற்க விரும்புவோரும் மிகுந்த சிரமப்பட்டனர்.

இந்த குறையைப் போக்க முதல் வெளியீடாக வேதாந்தஞானமலர் நூல் வெளியிடச் செய்யும் முயற்சி பாராட்டத்தக்கது. குருசீடர் முறைப் படிவழி வழியாக வந்து இலக்கியங்கள் சுலோகங்களாக இருந்ததை வசன ரூபமாக விரித்து எழுதம் முயற்சி எல்லா காலத்திற்கும் பொருத்தமான அரிய நூலான '' வேதாந்த ஞான மலர் சமஸ்கிருதம் படிக்காதவர்களும், தமிழ் கற்றவர்களும் கற்க வசதியாக வேதாந்த நூல்களையெல்லாம் திரட்டி தெளிவாகத் தொகுத்துள்ளனர். இந்நூல் ஓர்அரிய அற்புதப் படைப்பு இதைக் கற்றுணர்ந்தோர் பக்தி யோகம், ஞானம் கைவரப் பெற்யறுரயகவல்ய முக்தியடை துணையாகும். இந்நூல் வெளிவர ஆசி கூறி மகிழ்கின்றேன்.

ஸ்ரீ நித்ய பிரகாசானந்தா



## 'அருளாசி''

## தவயோகி சச்சிதானந்தா

*அருள்திரு கமலக் கண்ணி அம்மன் திருக்கோயில்,*
*கலவை 632 506 வேலூர் மாவட்டம் தமிழ்நாடு*

*அன்புடையீர்:*

*அருளாசி! தாங்கள் வேதாந்தத்தின் உட் பொருளை எல்லாம் தொகுத்து வேதாந்த ஞானமலர் என்ற நூலை வெளியிடும் செய்தியறிந்து மனம் மிகவும் மகிழ்கிறது.*

*வேதாந்தம் தான் வாழ்க்கையின் நெறியாக இருந்தது. மனிதப் பிறவி என்பதே தன்னை உணர்ந்து இறைநிலை எய்த ஏற்பட்டது. ஆனால் காலப் போக்கில் வேதாந்தம் என்பது தனிமைப் படுத்தப்பட்டு துறவிகளுக்கு மட்டும் உரித்தான விஷயமாகிவிட்டது. இதனால் வேதாந்தம் ஒரு குறுகிய வட்டத்திற்குள். சிக்கி சிதைந்து இன்று குணப்படுத்தவே முடியாத அளவு பலவீனமாகிவிட்டது. வேதாந்த நூல்களும் இன்னும் கடும் நடையுடன் கூடிய மணிபிரவாள நடையில் இருப்பதால் இன்றைய இளைஞர்களுக்கு வேதாந்தம் பற்றி அறிய ஆர்வம் இருந்தும், படித்து எளிதில் புரித்துக் கொள்ள இயலாத நிலை உள்ளது. எனவே இந்தக் குறையை நீக்கும் பொருட்டு வேதாந்த வித்தகர் பிரம்மஸ்ரீ அண்ணாமலை அடிகளாரும் அவர்களைச் சார்ந்தவர்களும் வேதாந்தக் கருத்துக்களை தற்காலத் தமிழ் நடையாக்கி அருமையாக பல நூல்களாக வெளியிட இருக்கிறார்கள் இது மிகவும் பாராட்டி ஊக்குவிக்க வேண்டிய விஷயம் ஆகும்.*

*இவர்களின் இந்த சீரிய முயற்சி நிறைவுற்ற மக்களுக்கு பயன் நல்க வேண்டும் என்று எல்லாம் வல்ல அருள் தரும் கமலக் கண்ணி அம்மன் கழல்களைப் பற்றி இறைஞ்சும்.*

*அருளாசியுடன்,*
*சச்சிதானந்தா*

## வாழ்க ஆன்மீகம்

துரை நைனியப்பா,
உதவி தலைமை ஆசிரியர் ரெண்டாடி உயர்நிலைப் பள்ளி.''
வேதாந்தப் பேராசிரியர்

ஆன்மீக உலகிற்கு இந்து மதம் ஆணிவேர் போன்றது. அந்த இந்து மதம் நால்மறைகள் ஊற்று. அந்த மறைகளின் முடிவு தான் வேதாந்தம். அந்த வேதாந்தக் கருத்துக்கள் பின்னால் பல்லாயிரம் நூல்களாக மலர்ந்தன. அத்தனை நூல்களையும் கற்றுணர வாழ்நாளே போதாது. இதைக் கருத்தில் கொண்ட, மகாத்மா காந்தி, திரு.வி.க., மு.வ. போன்ற ஆன்றோர்களால் போற்றி வள ர்க்கப்பட்ட ஸ்ரீ ஸ்ரீ கரிகிரி மௌன குரு சுவாமிகளின் மாணவரும். வேதாந்த வித்தகரும், தென்னிந்திய ஆன்மீக வளர்ச்சிக் கழகத்தின் தலைவரும் ஞானியுமான தவத்திரு. அண்ணாமலை அடிகளார் வேதாந்தக் கருத்துக்களை முழுவதும் ஒருவர் வளர்க்கும் வகையில் உபநிடதடம் போன்ற உன்னதமான எட்டு நூல்களை தொகுத்து எளிய நடையில் பாமரரும் உணரும் வண்ணம் ''வேதாந்த ஞானமலர்'' என்ற பெயருடன் எட்டு நூலை வழங்கியுள்ளார். ஆன்மீக உலகம் இந்நூல் மூலம் பெரும் பயன் அடையுமென்பதில் சிறிதும் ஐயமில்லை. வாழ்க இவர் தொண்டு. வளர்க ஆன்மீகம்

அன்புடன்
துரை, நைனப்பா,
ரெண்டாடி.

*ஓம் சக்தி நாராயணி சித்தர்பீடம்*
*மலைக்கோடி அரியூர் 10.6.99*
*வேலூர் 632055*
*தமிழ் நாடு*

## *வாழ்த்து நல் ஆசி*

*ஓம் சக்தி நாராயணி சித்தர் பீடம்*
*மலைக்கோடி அரியூர் 10.6.99*
*வேலூர் 632055 தமிழ்நாடு*

*அதர்மம் அழியும் போதெல்லாம் தர்மத்தை நிலைநாட்ட அன்னையானவள் மனித உருவில் மட்டுமல்லாமல் நல்ல எழுத்துக்களின் வடிவிலும் தர்ம நூல்களின் வாயிலாகவும் வெளிப்படுகின்றாள். அதன் அடிப்படையில் தற்பொழுது மக்களின் மனதில் தர்ம நெறி, இறைவழிபாடு, போன்ற நற்பண்புகளை வளர்க்க ''வேதாந்த ஞான மலர்'' என்னும் இப்புனித நூல் வெளியிட்டுள்ளதில் மிகவும் மகிழ்ச்சி அடைகின்றோம். இந்நூலின் மூலம் மக்களுக்கு ஆன்மீக அறிவும், நல்ல எண்ணங்களும் உதயமாக எல்லாம் வல்ல அன்னை நாராயணியை பிரார்த்தித்து வாழ்த்தி ஆசிர்வதிக்கின்றோம்.*

*ஓம் சக்தி நாராயணியே போற்றி ஓம்*

## ஓம் தத் சத்



புலவர் மணி எழிலன், எம்.ஏ

முதல்வர் எம்.டி.சி.வேலூர்

### வாழ்த்துக்கவி / புதுக்கவிதை

1. ஆல்போல் நிழல் தந்து ஆன்மீகத்தை வளர்ப்போன்,
பால்போல் உள்ளம் கொண்டோன் பண்பாளன் பாவலன்
நூல் ஒன்று தமிழில் தொகுத்தான், நுண்ணறிவாளன்
அண்ணாமலையான்
ஏல்பல்கலைக் கழகம்போல் இயல் இசை நாடகமாய்
என்றும் வாழ்கவே!

2. தஞ்சை மாநகரத்துக் கோபுரம்போல்,
தமிழ்ப் பணிசிறந்தோங்கி நிற்கவேண்டும்
நெஞ்சை அள்ளும் தாஜ் மகால்போல் நாடெல்லாம்
இருள்நீங்க பேரொளி வீசவே
கங்கைபோல் காவிரி போல் கருத்தாழம் கொண்டே
கலை உலகைக் காணவேண்டும்
எங்கும் நிறை ஆன்மீகம் எத்திசையும் தழைத்தோங்க
இமயமலை போல் நிலைத்து என்றும் வாழியவே!

3. நற்பணிகள் ஏராளம் நாட்டில் தினம் தினம்
தற்பெருமை ஏதுமின்றி தமிழ் நாட்டில் தொண்டாற்றும்
அலைகடல்சூழ் தமிழ்நாட்டில் அருள்தமிழ்வாணன் அண்ணா,
மலைஅடிகள் தமிழ்த்தொண்டு மேதினியில் ஓங்குகவே!

4. கந்தனேரி தன்னில் கன்னித் தமிழப் பேரால்
வேதாந்தக் கல்லூரி வேகமாய் நடத்திடவே
பண்புடன் உழைக்கும் பேராசிரியன் அண்ணாமலை
எண்ணங்கள் யாவும் எத்திசையும் வெல்லட்டும்.

5. நூறாவது எழுச்சிமிகுவிழா நுண்ணறிவாளர்கள் காணும்
சீரான ஆண்டுவிழா சிறப்பாக நடக்கட்டும்,
ஆன்மீகம் ஆட்சி செய்ய அகிலமெலாம் ஓங்கி!
வான்மழை என்றும் பொழிய ஞாயிறு திங்கள் உலவ
வேதாந்தக் கல்லூரி வாழ்க வெல்கவே!

**புலவர் - மணிஎழிலன் எம்.ஏ**

*சிவத்திரு ஆத்ம ஞான சிகாமணி முதுபெரும் புலவர்*
*மேலூர் திரு . என். சிவாஜி*
*60 பி, செங்கழுநீர் ஓடை வீதி,*
*பெரிய காஞ்சிபுரம் - 631 502.*

## நல் வாழ்த்து

### குருவாழ்க குருவே துணை

*வேதாந்த ஞான மலர் என்னும் எட்டுத் தொகுப்பு நூல்களையு ம் அரிய வேதாந்த இரகசியங்களைப் படித்தோரும் , மற்றும் பாமரரும் எளிதில் விளங்கும் வண்ணம் என் பெறலரும் நண்பர் வேதாந்தப் பேராசிரியர் தமிழ் அறிஞர் அண்ணாமலை அடிகளார் , அரிதின் முயன்று உரைநடை வாயிலாகவும் , வினாவிடை வாயிலாகவும் , பொழிப்புரை முறையாலும் ,நன்கு விளக்கம் செய்து தமிழ்கூறு நல்லுலகத் திற்குத் தொண்டு செய்துள்ளனர். கடல் போன்ற இந்நூல்களைப் படித்தோரும் அறிவது மிக மிகக் கடினம் . அத்தகு முயற்சியில் தமிழ் மக்கள் உய்வான் வேண்டி ,பலகாலம் சிந்தித்து, அறிஞர்களுடன் கலந்து ஐயந்தேளிந்து விளக்கியுள்ள பான்மை மிகவும் கடினம் . அத்தகு முயற்சியில் தமிழ் மக்கள் உய்வான் வேண்டி , பலகாலம் சிந்தித்து, அறிஞர்களுடன் கலந்து ஐயந்தெளிந்து விளக்கியுள்ள பான்மை மிகவும் போற்றப்பாலதே. அடியேனைக் காணுந்தோறும் மேற்படி நூல்களைக் குறித்தே பேசுவர் . அவர் எழுதிய கைப்பிரதிகளைப் படித்துப் பார்த்தேன் . ஆசிரியர்கள் எவ்வளவு பாராட்டினாலும் தகும். எல்லா வற்றிற்கும் மேலாக இறைவன் திருவருளைப் பெற்று மேலும் இதுபோன்ற ஆன்மீக நூல்களை வெளியிட அருள்புரிவானாகுக. திரி கீதை , ஞானவாசிட்டம் ,அச்சுததாசர் கீர்த்தனை போன்ற எழுத சங்கற்பம் செய்துள்ளனர். தமிழ் கூறு நல்லுலகம் இந்நூலை வாங்கிப்படிதது விளக்கம் அளிப்பாகுக . ஆசிரியர் படித்த தமிழ்ப் புலமை பாலித்தவர்கள் . அவர்கள் வாழ்த்துகிறேன். வணங்குகிறேன்.*

*அன்பன்,*
*சி. சிவாஜி*

சுதந்திரத் தியாகி . ஆர் . வெங்கிடாசலம்
பழைய கிருஷ்ணாபுரம் , வேலூர் மாவட்டம் தமிழ்நாடு

## சுதந்திர வாழ்த்து

அன்புடையீர்:

தாங்கள் நடத்திவரும் தென் இந்திய ஆன்மீக வளர்ச்சிக் கழகம் மேன்மேலும் வளர்ச்சியடைய சுதந்திர போராட்ட வீரர்களின் சார்பாக என்னுடைய மனம் கனிந்த நல் வாழ்த்துக்கள் .

ஆன்மீக ப் பற்றின் றி சீரழிந்து வரும் நம் நாட்டின் நிலை உணர்ந்து அற்புதமான "வேதாந்த ஞான மலர் " வெளியீடுவதைக் கண்டு நாங்கள் பெருமகிழ்ச்சி யடைகின்றோம்.

தங்களின் வேதாந்த நூல் வெளியீடும் தொண்டானது மேலும் சிறப்பாக பல நல்ல நூல்களை வெளியிட்டு மக்கள் நல்வாழ்வு வாழவும் ,சுதந்திரமாக வாழவும் பேரறிவோடு வாழவும் , வாழ இம்மலர் பூத்து குலுங்க சுதந்திர வாழ்த்துக் களை தெரிவித்துக் கொள்ளுகின்றோம் .

அன்பன்,
சுதந்திரத்தியாகி ,ஆர் . வெங்கிடாசலம்



# முன்னுரை

## வேலவனார்

தத்துவ பேராசிரியர், பள்ளிகொண்டான்

பஜகோவிந்தம் மூலம் புகழ் பெற இந்த நூல் ஒப்புயர்வற்ற ஒரு சிறிய கரந்தம். இதை ஸ்தோத்ரம் என்று சொல்வதைவிட உபதேச நூல் என்றே சொலாம். இது தமிழில் ஆக்கப்பட்டு கோவிந்தனை நாடு என்னும் உரைநூல் இயற்றப்பட்டது.

உலகத்தில் மண் ஆசை, பெண் ஆசை, பொன் ஆசை என்கிற தீமை எக்காலத்திலும் உள்ளது. மண் ஆசையால் துரியோதனனும், பெண் ஆசையால் இராவணனும் அழிந்தனர். பொன் ஆசை நம்மில் பலருக்கும் உள்ளது. இதை வேதம் ஈஷ்ணாத்ரயம் என்று பேசும், இவற்றை விலக்கி பேராசை ஒழித்து ஆத்மஞானம் பெற்றாலன்றி ஒருவர் முக்தி அடைய முடியாது. ஏனெனில் ஒருவன் கடைசி காலத்தில் எதை நினைத்து உயிர் நீக்குகிறானோ அதே எண்ணத்துடன் தான் மீண்டும் பிறக்கிறான். ஆகையால் கடைசியல் என்னையே நினைத்து உயிர் நீப்பவன் என்னையே (என் நிலையையே) அடைகிறான் இதில் சற்று "சந்தேகமில்லை" என்கிறான் கண்ணன் கீதையில்"

மனைவி, மக்கள், தாய், தந்தை, சுற்றத்தார், நண்பர் என்பவரிடமும் தாமரைஇலை நீர்போல், பட்டும் படாமலும் நடந்துக் கொள்ள வேண்டும் "மாத்ருதேவோபவ பித்ருதேவோ பவரி என்கிறது வேதம். நம் சரீரம் அவர்கள் மூலம் தான் கிடைத்தது. மேலும் அவர்கள் நமக்காக ஆற்றிய அரும் பெரும்பாட்டை நாம் மறத்தலாகாது. அவர்களை தேவர் போல் மதித்து உபசரிக்க வேணும். ஆனால் அவர்கள் உயிர் பிரிந்தால்

நாம் துக்கத்தால் இடிந்து விடலாகாது ஏன்? அவர்கள் இறந்தனர் என்பதென்ன உடல் தானே போயிற்று ஆன்மாவிற்கு அழிவில்லையே, இந்த அரிய பெரிய உண்மைகளை எல்லாம் விளக்கி ''மறுபடியும் கருவடையும் குழியில் தள்ளி வருதப்படுத்த வேண்டாம்'' என்று ஆடிப்பாடி அகம் கரைந்து இசை பாடிப் பாடிக் கண்ணீர் மல்கி கோவிந்தனைத்துதித்தால கோவிந்தனை நாடினால் மறுபிறவியற்ற பேரின்பம் மோட்ச நிலை கிட்டும் என்று இது விளக்குகிறது. கற்பயனடைய விரும்புகிறேன்.

வேலவனார்

***

ஓம் தத் சத்

# வேதாந்த ஞானமலர்

## அத்தியாயம் ஒன்று

### 1. கோவிந்தனை நாடு

வாழிகோ விந்தன் வாழி கோவிந்தன் என்பதல்லால்
மதிகெட்ட மனமே! வேறு வழியில்லை; வாய்மை சொன்னேன்
ஏழையே! மரணம் வந்து உன்னுயிர் ஏகும்போது
ஏதுஉனைக் காக்கும் அந்த கோவிந்தன் சரணம் இன்றேல்?
கோழையே! காலன்வந்து வாவெனக் கூவும்போது
கோ! என அழுதுநொந்து ஆ! என அலறுவாயே!
காளையே! கற்றதொன்றும் கவைக்குத வாதுகண்டாய்
காத்திடும் பஜகோவிந்தம்? கதிதரும் பஜகோவிந்தம். 1

### பொன் ஆசை ஒழி

செல்வ மே செல்வம் என்னும் தீயபேய்த் தேர்தாகத்தை
வெல்வதே வேண்டும் இன்றேல் வேதனைமிகுந்த நோயாம்;
ஒல்வதோர் தொழிலில் சொந்த உழைப்பினால் உரிமையாகும்
நல்லதோர் பொருளே போதும் எனுமன நிறைவேநன்று. 2

### பெண் ஆசை விடு

மாதர்தம் உடலைக்கண்டு மதிமோசம் போகவேண்டாம்;
ஓதிடும் அழகும் மார்பும் ஒய்யார இடையும் எல்லாம்
பேதுறும் தசையேயன்றிப் பிறிதொன்றும் இல்லை; இந்த
தீதறும் உண்மை ஓர்ந்து தீர்மானத் தெளிவு கொள்வாய். 3

### வாழ்க்கையே நிலையில்லாதது

பிறந்தன உயிர்களெல்லாம் நிச்சயம் பிணமாய்ப்போகும்;
உறைந்துதா மரைஇலைமேல் உருளும்நீர்த் துளியேபோல
நிறைந்துள உலகஜாலம் நிலையற்ற நீர்மைத்தாகும்;
வெறுந்துயர், பற்றும் நோயும் வினைவன்றிவேறொன்றில்லை 4

### சுற்றம் சுயநலத்துடன் கூடியது

*வருமானம் உள்ளமட்டே பரிவாரம் வந்துசேரும்.*
*விரிவாகும் க்ஷேமலாப விசாரணை வெளிவேஷம்தான்.*
*பருமானப் பலமுண்டாகில் பந்துபாத் தியமும் உண்டு*
*உருமாறிக்கிழமாய்விட்டால்உன்னையார்கேட்போர்பின்னை? 5*

### உயிர் உள்ளவரைதான் உறவு

*பேச்செல்லாம் பேசிமிக்கப் பெருமிதம் அடைவதெல்லாம்*
*மூச்சுள்ள வரையே; தேகம் முடங்கிய பிணமாய் விட்டால்*
*கூச்சின்றி உன்னைமுன்னே சுயம்வரம் கொண்டகாதல்*
*நாச்சியும் அச்சங்கொள்வாள் நாறுடல் அதனைக்கண்டு. 6*

### எவனும் தெய்வத்தை நினைப்பதில்லை

*விளையாடித் த்ரும்வேறு வினையிலாக் குழந்தைக்காலம்:*
*வளையாடும் கையார்மையல் வாலிபப் பருவம் எண்ணும்*
*திளைவாடித் தீர்ந்தபின்னும் தீராது சிந்தாக்ரந்தம்;*
*களையாமெய்ப் பொருளைச்சற்றே கருதுவார் ஒருவரில்லை. 7*

### நீ யார்?

*மனைவி என்பது யார்? மற்றும் மக்களென் பவர்தாம் யாவர்?*
*வினைதரும் உலகம் முற்றும் விசித்திரம்; சொந்தம், பந்தம்*
*அனையன யாவை? நீதான் யார்? இங்கு எதனின் வந்தாய்?*
*இனியும் நீ எங்கே போவாய்? எண்ணிப்பார் அண்ணே இன்னே. 8*

### நல்லோருடன் இணங்கு

*நல்லவர் தமையேநாடி நல்லவர் உறவேகூடு,*
*அல்லலை வளர்க்கும்பற்றை அறுத்திட அதுவே மார்க்கம்;*
*மொல்லையாம் பற்றுவிட்டால் மோகமே தீர்ந்துசித்தம்*
*ஒல்லையில்நிலைத்துவீட்டை உயிருடன்அடைவாய்நெஞ்சே 9*

### அசையும் பொருளும் அழிந்துபோடும்

*நீரற்றுப் போனபின்பு நீர்நிலை உருவம் நீங்கும்;*
*வீரற்றுப் போயும்காம விசாரங்கள் விடாததேனோ!*
*சீருற்ற செல்வம் போனால் சேர்ந்த சுற்றத்தார் எங்கே?*
*தேர்வுற்று ஞானம்பெற்றால் தீர்ந்திடும் உலகமாயை 10*

## கர்வப்படாதே

செருக்கடை யாதேஉன்னைச் சேர்ந்துள சுற்றத்தாரின்
பெருக்கமும் பணமும் தேகப் பெலமெனும் மோகமெல்லாம்
பொருக்கன மறையும்; வாழ்வு பொய்ம்மானின் வேட்டை
போலும்;
ச நக்கென மடநெஞ்சே!நீ மெய்ஞான மார்க்கம் சூழ்வாய். 11

## காலத்தின் விளையாட்டு

காலையும் சந்தியென்றும் கடும்பகல் உச்சியென்றும்
மாலையும் மறைவு என்றும் மதிமீனின் இரவு என்றும்
கோலமாம் கோடைஎன்றும் குளிர்என்றும் காலதேவி
வேலையால்ஆயுள்தேய்ந்தும் தணிந்திலைஆசைவேட்கை. 12

## ஆசையை அறவே ஒழி

புத்திகெட்ட மூடா! _ன்றன் புகலிடம் நாதன் அன்றோ?
சொத்துசுகம் ம ாவிசாரம் சூழ்ந்திருக்க இதுவோ காலம்?
செத்துவிடும் பொழுதிலேனும் அறத்தவர் சேர்க்கைகொண்டால்
தத்துகடல் பிறவிநீந்தத் தக்கதொரு நாவாய் ஆமே! 13

## எல்லாம் ஒரு அரைவயிற்றுச் சோறு

மயிர்ச்சடை முடியும் முற்றும் மழித்ததாம் தலையும்மற்றும்
பயிற்சிகொள் காவிஆடை பலவேறு வேஷமெல்லாம்
வயிற்றினை வளர்ப்பதற்கே வழியெனக் கண்டும்ஞான
முயற்சிமேற் கொள்ளமாட்டாய் முழுமட மதியே! நீதான். 14

## ஆசைவிடுவதில்லை

நரம்பெலாம் தளர்ந்துநைந்தும் மயிரெல்லாம் நரைத்தபின்னும்
குரங்குபோல் முகமும் பற்கள் குடிபோன மடிவாயோடும்
கரங்களால் கோலைஊன்றி கால்கள் தள்ளாடினாலும்
நிரம்பிய பழைய ஆசை ஆண்டவர் நெகிழவில்லை. 15

## துன்பத்திலும் ஆசை விடுவதில்லை

குளிர்தனைப் பொறுக்கமாட்டான் கூனுடைக் கிழவன்நொந்து
குறுகியே இரவுமுற்றும் மறுகியே குளிரைத்தாங்க
தளர்வுடன் மோவாய்க்கட்டைத் தன்முழங் காலில்முட்ட
தரைதனில் சுருண்டுதூங்கித் தள்ளிய இரவுநீங்க.

வெளியிடை வெயிலிற் காய்ந்து விருப்புடன்கால்கள்நீட்டி
விறகிடை தீயிற்காய்ந்து? விருந்தெனப் பிச்சைச் சோற்றை
அளிமர நிழலில் உண்பான்: அம்மரத் தடியே வாசம்;
அந்நிலை அவனும்கூட விட்டிலன் ஆசாபாசம். 16

## ஞானம் இல்லையேல் மோட்சமில்லை

கங்கையில் குளித்திட்டாலும்? கதிபெற விரும்பிச் சேது
கடலிடை முழுகினாலும்? கருதிய படிக்குவேறு
எங்குபோய் எந்தநோன்பை எப்படி நோற்றிட்டாலும்
என்னென்ன தானம் ஈந்து புண்ணியம் எய்தினாலும்
துங்கமாம் ஞானமின்றி விடுதலை வழிதோன்றாது.
தூய்மையாம் பக்திஒன்றே துலங்கிடும் ஞான மூட்டும்
இங்கிதை நன்குதேர்வாய்; இசைத்திடும் மார்க்கமெல்லாம்
இதுஒன்றை அன்றி'வேறு, எதுஒன்றும்சொன்னதில்லை.
17

## நித்யானந்தர் வைராக்கியமே சுகம்

ஆசையாம் ராகமோகம் அழித்தலே சிறந்தபோகம்;
அமளிபுல்தரை; மெய்போர்த்த ஆவதுமான்தோல்; கோயில்
மாசிலா மண்டபம்தான் மனக்குறை மாற்றும் இல்லம்
மாயத்தைத் தீர்க்க அங்கோர் மரத்தடி விடுதியாகும்.
தேசுலாம் செல்வத்தாலும் தேடரும் சுகம்யாதென்றால்
தீர்க்கமாய் 'வேண்டாம்' என்னும்திடமனம்; மகனே! தேர்வாய்
நீசமாம் ராகம் என்னும் மனவிகாரத்தை நீக்கின்
நிலவிடும் சுகத்தின் இன்பம் நிகரற்ற இன்பமாகும். 18

## பிரமானந்தமே ஆனந்தம்

யோகத்தில் இருந்திட்டாலும். ஒருசுக உலகஇன்ப
போகத்தில் இருந்திட்டாலும். கூட்டத்தில் உறைந்திட்டாலும்
ஏகத்தில் தனியனாக இருந்திடும்போதும் எங்கும்
எப்பொருள் எதற்கும்எட்டா மெய்ப்பொருள் என்பதோர்ந்து
தேகத்தைக் கடந்தஞானத் தெளிவுகண் டதிலேநின்று
திளைத்திடும் மகிழ்ச்சிஒன்றே தெவிட்டாத மகிழ்ச்சியென்ற
பாகத்தை அறிந்துநெஞ்சே! பாடுக பஜகோவிந்தம்
பயனுற பஜகோவிந்தம் பற்றுக பஜகோவிந்தம். 19

## யமன் அருகில் வராத உபாயம்

கண்ணனின் கீதைச்சாரம் கங்கைநீர்த் துளியோடுண்டு
எண்ணிஓர் கணப்போதேனும் அப்பனைத் துதிப்பாய் என்னில்
திண்ணிய எருமைஏறி திசைவரும் காலன் உன்னை
பண்ணுவ தொன்றுமில்லை பகர்ந்திடப் பேச்சுமில்லை. 20

## இறைவா என்னைக் காத்தருள்

மறுபடி ஜனனம் கொண்டு மறுபடி மரணம் கண்டு
மறுதர மாறிமாறி மாதாவின் வயிற்றில் தோன்றி
துறுதர வளர்தல் துக்கம்; துயர்க்கடல் கடக்கச் செய்யும்
திறமுற திருமாலேநீ திருவருள் புரிய வேண்டும். 21

## யோகி பித்தன் போலிருப்பான்

இவன்உடை குப்பைக்கந்தல் துணியன்றி இல்லைவேறு
பவவினை நன்மைதீமை பற்றறவிட்ட பண்பன்.
கவல்அறக் கண்ணனோடு கலந்துநிற்கின்ற சித்தம்?
அவன் உள்ளம் குழந்தை உள்ளம் ஆனந்தவெறியாட்டம்தான். 22

## நான் யார்

அன்னையார்? அப்பனும்யார்? அவைவிட்டு நீதான்யாவன்?
என்னும் ஈதெல்லாம் எண்ணி எந்தநாள் சிந்தைசெய்வாய்
மன்னிய பொருள் ஒன்றில்லா உலகினை மகனே! விட்டு
துன்னியகனவின்துன்பம்துடைத்தெழுந்து அறிவைத்தேடு. 23

## எல்லாம் விஷ்ணு மயம்

என்மேல் உன்கோபம் வீணாம்; இகழ்வதேன் தன்னைத்தானே?
எவ்வுயிர் எதுவும் ஈசன் கோயிலாம் என்பதோர்வாய்
என்மேனி மூச்சும்ஈசன்; எதிராம் உன் உயிர்க்குயிராய்
எல்லாம் ஓர் உயிராய்நிற்கும் இறைவனே உறைவான் உன்னுள்,
பின்னே என்? நீயும்நானும் பிரிந்திடமுடியா ஒன்றே;
பேதமாம் மருளைநீக்கிப் பிறிதுள உயிரில் எல்லாம்
அன்னானே இருக்கும் உண்மை அண்ணே! நீ அறிந்துவிட்டால்
அந்நாளே அப்போதங்கே அஞ்ஞானம் அற்றுப்போகும். 24

## எல்லோரையும் சமமாகக் காப்பார்

பகையென்றும் நட்புஎன்றும் பார்க்காதே; மகனே! யாதும்
மிகைசெய்யும் மோகங் கொள்ளேல்; சிவனடி விரைவின்மேவ
தகையென்றும் சேர்க்கவேண்டாம்; தள்ளென்றும்விலகவேண்டாம்
நிகரென்று யாவர் மாட்டும் ஒன்றேபோல் நிற்கவேண்டும். 25

## ஆன்மாவை உயர்த்தும் வழி

க்ஷேமமே உனக்கு வேண்டின் சேர்ந்தஉட் பகைவரான
காமமே க்ரோதலோப மோகாதி கடிந்துநீக்கி,
நேமமாய் உள்ளே நோக்கி? 'நான்' எது ?நினைத்துப்பார்ப்பாய்
பூமியே நரகம் ஆன்மப் பொருள் பெறா மடையர் வாழ்க்கை. 26

## நாம் என்ன செய்யவேண்டும்

பாடுவாய் கீதையோடு பரமன் ஆயிரநாமங்கள்
தேடுவாய் இடையறாமல் ஈசனார் இருக்கைதேர;
கூடுவாய் நல்லோர்மாட்டு குலையாத நிலையில் நிற்க;
வாடுவோர் வறியோர்க்கீய வருமெனில் செல்வம் நன்றே. 27

## யாரும் செய்வதை விடுவதில்லை

தொடங்கலில் சுகமாய்த் தோன்றும் தீநெறிச்சுக போகங்கள்
அடங்கலும் பின்னால் துன்பம்; ஆறாத துயரம். ரோகம்;
ஒடுங்கிஇத் தேகம்சாகும் என்பதை உணர்ந்து நெஞ்சம்
நடுங்கியும் பாவச்செய்கை நம்மைவிட் டகலாதேயோ? 28

## பணம் என்பது துன்பமே

நன்றிது தேர்வாய் நெஞ்சே! நலமெதும் பணத்தில் இல்லை,
ஒன்றியது சத்யம் இன்பம் ஒருதுளி பணத்தில் இல்லை;
தன்றுனை மகனைக்கூட கள்ளனாய் தனவான் அஞ்சும்
என்றிடும் இயல்பே எந்த ஊரிலும்; ஐயம் இல்லை. 29

## மனத்தைக் கட்டுப்படுத்து

*மெய்ப்பொருள் யாது? மாயப்பொய்ப்பொருள் யாது?*
*மேதுறப் பிரித்து, ஓர்ந்து மீதுறும் அமைதிமேவி.*
*செப்பிய தியானத்தோடு ஜெபமுறை ப்ராணயாமம்*
*செய்துபின் சித்தம் ஒய்ந்து? மெய்ப்பொருள் அதனைச்சேர*
*பைப்பயப் பயின்று வந்த பலத்துடன் புலன்களென்ற*
*பயங்கர மூர்க்கர் உன்னைப் பணிந்திட அடக்கி ஆள்வாய்;*
*கைப்பொருள் காப்பதேபோல் மனமெனும் கோயில் தன்னை*
*காப்பதில்கவனம்வைப்பாய்; மிகமிகக்கவனம்வேண்டும். 30*

## குருவின் திருவடிகளே சரணம்

*குருவுடை கமலத்தாளில் குறையாத பக்தி பூண்டால்*
*துருசிறைப் பிறவிநீங்கித் துரிதமாய் மீள்வாம் திண்ணம்*
*உருபுலன் மனஒழுங்கால் உன்னுளே உலகாள் தேவன்*
*வரும் வரும் பஜகோவிந்தம்; வலியவே பஜகோவிந்தம். 31*

# கருத்துரை

## 1. கோவிந்தனை நாடு

கோவிந்தனை நாடு, கோவிந்தனை நாடு! ஏ மூடனே கோவிந்தனை நாடு, விதித்த காலம் (மரணம்) வரும்போது இலக்கண விதிகள் உன்னை நிச்சயம் காப்பாற்றமாட்டா.

(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)

## 2. பொன்னாசையை ஒழி

ஓ மூடனே! தனம் அடைய வேண்டுமென்ற தாகத்தை விட்டுவிடு! மனத்தில் ஆசைகளைத் துடைத்தெறிந்து, உ ண்மை பற்றிய சிந்தனைகளை ஏற்படுத்திக் கொள். எது உனக்கு கிடைத்தாலும் (கடந்த காலத்தின் வெகுமதியாக) மனத்தைக் குதூ கலப்படுத்து, (திருப்தியடை)

(கோவிந்தனை நாடு, கோவிந்தனை ப் பாடு)

## 3. பெண் ஆசையை விடு

இளமங்கையரின் கனதனங்களையும், அவர்களது இடையையும் கண்டு, பித்தம் கொள்ள வைக்கும் மோகத்துக்கு இரையாகாதே. மாமிசத்தின், கொழுப்பின் ஓர் உருதான் இது. இவ்வாறு மனத்தினுள் மீண்டும் மீண்டும் நன்கு சிந்தனை செய்.

(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)

## 4. வாழ்க்கையே நிலையில்லாதது

தாமரை இலையின் மீது விளையாடும் தண்ணீர்த் துளி மிக மிக நிலையற்றதான வாழ்வு வாழ்கிறது. அதேபோன்றுதான் வாழ்க்கை என்றும் நிலையற்றது. இவ்வுலகம் நோயினாலும் அபிமானத்தினாலும் விழுங்கப்படுகிறது என்பதையும் , வேதனைகளினால் துளைக்கப்படுகிறது. என்பதையும் அறிந்துக்கொள்.

(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)

### 5. சுற்றம் சுயநலத்துடன் கூடியது

உன்னால் பொருளீட்டவும் சேமிக்கவும் முடிகின்ற வரையில் உன் மக்கள் உன்னோடு ஒட்டிக் கொண்டிருப்பார்கள். பிற்பாடு, தேகம் மூப்புற்று தளர்வடையும் போது, வீட்டிலுள்ளோர் ஒருவார்த்தை கூட உன்னிடம் பேச மாட்டார்கள்.

(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)

### 6. உயிர் உள்ளவரைதான் உறவு

சரீரத்திலே மூச்சு உள்ளவரையில்தான் வீட்டிலுள்ளோர் உன்னை நலம் விசாரிக்கிறார்கள். மூச்சுப் போய்விட்டால் சரீரம் அழுகுகிறது. அதே சரீரத்தைக் கண்டு மனைவியே கூட அஞ்சுகிறாள்.

(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)

### 7. எவனும் தெய்வத்தை நினைப்பதில்லை

பிள்ளைப் பிராயத்திலே இருக்கும் வரையில் ஒருவன் விளையாட்டிலே ஈடுபாடு கொண்டவனாயிருக்கிறான்; வாலிபப் பருவத்திலேயிருக்கும் வரையில் ஒருவன் யௌவனப் பெண்ணிடம் நாட்டம் கொண்டவனாயிருக்கிறான், வயோதிகப் பிராயத்திலே இருக்கும் வரையிலே ஒருவன் கவலைகளிலே மூழ்கியிருக் கிறான். எனினும், அந்தோ; ஒருவன் கூட மேலான பிரமத்திடம் பற்றுக் கொண்டவனாயிருப்பதில்லையே.

(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)

### 8. நீ யார் என்பதைக் கவனி

யார் உன் மனைவி? யார் உன் மகன்? உண்மையில் இந்த சம்சாரம் மிக மிக விசித்திரமானதே. எங்கிருந்து நீ வந்தாய்? சகோதரனே, அந்த உண்மையைக் குறித்து இங்கு சிந்தனை செய்.

(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)

## 9. நல்லோருடன் இணங்கியிரு

நல்லோர்களின் கூட்டுறவால், பற்றின்மை ஏற்படுகிறது; பற்றின்மையால், மாயையினின்றும் விடுதலை ஏற்படுகிறது. மாயையிலிருந்து விடுதலை கிட்டினால், என்றும் மாறாத உண்மை உண்டாகிறது. மாறாத உண்மையை உணரும்போது ஜீவனுக்கு முக்தி ஏற்படுகிறது.

(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)

## 10. ஆசையும் பொருளும் அழிந்து போகும்

பருவம் (வாலிபம்) போன பின்னர் காமமும் அதன் விளையாட்டுகளும் எங்கே போகின்றன? நீர் ஆவியான பின்னர் ஏரி எங்கே போகிறது? ஐசுவரியம் வற்றிய பின்னர் பரிவாரம் எங்கே போகிறது? தத்துவத்தைக் கண்டு கொண்ட பின்னர் சம்சாரம் எங்கே போகிறது?

(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)

## 11. கர்வப்படாதே

உன் உடமையைப் பற்றியோ, (உன் ஆணைக்குட் பட்ட) மக்களைப் பற்றியோ, (உனக்குள்ள) யௌவனத்தைப் பற்றியோ கர்வம் கொள்ளாதே,காலம், ஒரே நிமிடத்தில் இவற்றைச் சூறையாடிவிடும். இவற்றின் மாயையான தன்மையை உணர்ந்து இவைகளை விடுத்து, பிரம்ம நிலையை உய்து, அதனுள் பிரவேசிப்பாயாக.

(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)

## 12. காலத்தின் விளையாட்டு

பகலும், இரவும், அந்தியும், உதயமும் மாரியும், வசந்தமும் மீண்டும் மீண்டும் வருகின்றன. (பிறகு போகின்றன) காலம் விளையாடுகிறது. வாழ்க்கை கழிகிறது அப்படியும் ஒருவன் தன் ஆசைக் காற்றை விட மறுக்கிறான்.

(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)

## 13. ஆசையை அறவே ஒழி

ஓ அலைக்கழியும் மனிதனே! ஏன் மனைவி ஐசுவரியம் முதலிவை பற்றிக் கவலை கொள்கிறாய்? விதிப்பவன் ('ஆள்பவன்' ஆணையிடுபவன்) ஒருவன் உனக்கு இல்லை யா? மூவுலகிலும், நல்லோரின் கூட்டுறவு ஒன்றுதான் (ஜனன மரணம் என்ற) மாறுதலாகிற கடலைக் கடக்க உதவக்கூடிய ஒரே தோணி.

(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)

## 14. எல்லாம் ஒருஅரை வயிற்றுக்காக

ஒரு சன்யாசி ஜடாமுடியுடனும் ஒருவன் மொட்டைத் தலையுடனும், ஒருவன் ரோமங்களைக் கிள்ளியெறிந்து கொண்டும், ஒருவன் காஷாய உடையில் பவனி வருபவர்கள் இவர்கள் மூடர்கள்; பார்த்தும் பாராதவர்கள், உண்மையில் இந்த வேடமும் உடைகளும் அவர்களுடைய வயிற்றுக்காகத்தான்.

(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)

## 15. ஆசைவிடுவதில்லையே

தேகம் தேய்ந்துவிட்டது. தலை நரைத்து விட்டது. வாய் பற்களை இழந்துவிட்டது. தடியைப் பிடித்துக் கொண்டு கிழவன் நடக்கிறான். ஆனாலும் கூட அவன் தனது ஆசை மூட்டைகளை விடுவதில்லை.

(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)

## 16. துன்பத்தினும் ஆசைவிடுவதில்லை

முன்னே நெருப்பு, பின்னே சூரியன், இரவிலே முழந்தாளில் மோவாய் பதித்துக் கொண்டு அவன் உட்கார்ந்திருக்கிறான்; தனது ஏந்திய கைகளில் பிச்சை ஏற்கிறான்; மரத்தின் அடியிலே வாசம் புரிகிறான்; இருந்தும் அவனைக் கூட ஆசைக் கயிறுகள் விட்டபாடில்லை.

(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)

## 17. ஞானமில்லையேல் மோட்சமில்லை

கங்கை சமுத்திரத்திலே சங்கமிக்கும் இடமான கங்கா ஸாகரத்துக்கு ஒருவன் யாத்திரை செல்லலாம். அல்லது விரதங்கள் அனுஷ்டிக்கலாம் அல்லது தானங்கள் செய்யலாம், ஆயினும் அவனிடம் ஞானம் இல்லாது போகுமானால், நூறு பிறவியெடுத்தாலும் அவனுக்கு முக்தி கிட்டாது

(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)

## 18. வைராக்கியமே சுகம்

கோவில்களில் மரத்தின் கீழே வசித்து, வெறும் தரையிலே தூங்கி, மான்தோலை உடுத்து, உடமை உணர்வையும் போக இச்சையையும் துறந்து வாழும் எவனுக்குத்தான் வைராக்கியத்தினால் மகிழ்ச்சி கிட்டாமற் போகும்?

(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)

## 19. பிரம்மானந்தமே ஆனந்தம்

ஒருவன் யோகத்திலே திளைக்கட்டும் அல்லது போகத்திலே திளைக் கட்டும், மற்றவர்களின் கூட்டுறவிலே இன்பத்தை நாடட்டும் அல்லது கூட்டத்தை விடுத்துத் தனிமையில் திளைக்கட்டும், பிரம்மத்திலே எவனுடைய மனம் திளைக்கிறதோ, உண்மையில் அவனே மகிழ்ச்சி துய்ப்பவன்.

(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)

## 20. யமன் அருகில் வராத உபாயம்

பகவத் கீதையைத் துளியேனும் அறிந்திருப்பவனுக்கு சுங்காதீர்த்தத்தை ஒரு துளியேனும் அருந்தியிருப்பவனுக்கு பகவான் முராரியை ஒரு முறையேனும் பூஜித்தவனுக்கு எமனிடம் எவ்வித பூசலும் கிடையாது.

(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)

## *21. இறைவா என்னைக் காத்தருள்*

*மீண்டும் பிறப்பு மீண்டும் இறப்பு, மீண்டும் தாயின் கருப்பையிலே படுக்கை, இந்த சம்சார முறை, கடத்தற்கு வெகு அரியது, ஓ முராரி உனது அருளினால் என்னைக் காப்பாற்று.*

*(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)*

## *22. யோகிபித்தன் போலிருப்பான்*

*ஒட்டுக் கந்தலைத்தவிர வேறு அணியாதவன் புண்ணியம் புண்ணியமல்லாதது ஆகியவைகளுக்கெல்லாம் அப்பாற்பட்ட பாதையில் செல்கின்றவன்; யோகத்திலே ஒன்றிய சித்தத்தை உடையவன், இப்படிப்பட்ட யோகி (தெய்வ உணர்விலே) துள்ளித் திளைக்கிறான். குழந்தையைப் போல அல்லது பைத்தியக்காரனைப் போல.*

*(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)*

## *23. நான் யார் என்று நினைத்துப் பார்*

*நீ யார்? நான் யார்? எங்கிருந்து நான் வந்தேன்? என் அன்னை யார்? என் தந்தை யார்? சத்தற்றதும் வெறும் கனவு போன்றதும், கற்பனையிலே பிறந்ததுமான இந்த அனுபவ உலகத்தை (விசுவம்) முற்ற முழுக்க விட்டுவிட்டு, அந்த வினா ஒன்றையே கேள்.*

*(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)*

## *24. எல்லாம் விஷ்ணுமயம்*

*உன்னிடமும், என்னிடமும் மற்ற எல்லா இடங்களிலும் ஸர்வ வியாபகமான பிரம்மம் (விஷ்ணு) ஒன்றுதான் இருக்கிறது. பொறுமை இல்லாததால் நீ என்னிடம் தேவையற்றுக் கோபம் கொள்கிறாய். விஷ்ணுத்துவத்தை நீ அடைய விரும்பினால், எல்லா சந்தர்ப்பங்களிலும் சமமான மனநிலையுடன் இரு.*

*(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)*

## 25. எல்லோரையும் சமமாகக் காப்பார்

பகைவனிடமோ, நண்பனிடமோ, மகனிடமோ, பந்துவிடமோ, சண்டையிடவோ சி, நேசம்பாராட்டவோ முயற்சி செய்யாதே. தன் ஆத்மாவையே எங்கெங்கும் பார்ப்பதன் மூலம் அறியாமையினின்று பிறக்கும் பேத உணர்வை அகற்று.

(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)

## 26. ஆன்மாவை உயர்த்தும் வழி

காமம், குரோதம், லோபம், மோகம், ஆகியவற்றை விட்டுவிடுகின்ற சாதகன், அவனாக தான் இருக்கிறேன் என்று தன் ஆத்மாவில் காணுகிறான். ஆத்ம ஞானம் பெறாத மூடர்கள் (அதன்விளைவாக) நரகத்தில் அடிமைகளாகச் சித்திரவதை செய்யப்படுகிறார்கள்.

(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)

## 27. நாம் என்ன செய்ய வேண்டும்.

பகவத் கீதையும்,சஹஸ்ர நாமமும், பாராயணம் செய்யப்படட்டும், லட்சுமி நாயகனின் வடிவம் எப்போதும் தியானிக்கப்படட்டும். நன்மக்களின் கூட்டுறவுக்கு (மனம்) கொண்டு செல்லப்படட்டும்; செல்வம், தீன மக்களுக்கு வழங்கப் படட்டும்.

(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)

## 28. பாவம் செய்வதை விடுவதில்லையே

சிற்றின்பங்களில் திளைத்து இன்புறுகிறான், பிற்பாடு தேகத்தில் நோய்கள் தோன்றுகின்றன. உலகத்தில் இறுதியான முடிவு (சரணம்) மரணம் தான் என்றாலும், மனிதன் தனது பாவ நடத்தைகளை விடுகிறானில்லை.

(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)

## 29. பணமென்பது துன்பமே

'செல்வத்தால் அனர்த்தம்தான்' என்று எப்போதும் கருதுவாயாக; அதனின்று பெறக்கூடிய நன்மை துளியுமில்லை என்பதே உண்மை செல்வந்தனுக்கு சொந்தப் புத்திரனிடமும் அச்சம் ஏற்படுகிறது. எங்கும் செல்வத்தின் வழி இவ்வாறுதான்.

(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)

## 30. மனத்தைக் கட்டுப்படுத்து

எல்லாச் செயல்களையும் (ஜீவன் உங்களிடம் வெளிப்படுத்தும் தோற்றங்கள்) கட்டுப்படுத்துவது; இந்திரியங்களை அவைகளுக்குரிய இந்திய விஷயங்களி லிருந்து) உள்ளுக்கிழுப்பது; நிலையானதற்கும் நிலையற்ற தற்கும் இடையே உள்ள பாகுபாடுகளைப் பற்றிய சிந்தனை ஜபமும் (உள்ளமைதியாக) சமாதி நிலையை எய்துவதற்கான அனுஷ்டானமும் இவற்றைக் கவனத்துடன் மாபெறும் கவனத்துடன் கடைப்பிடி.

(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)

## 31. குருவின் திருவடிகளே சரணம்

குருவின் தாமரைத் திருவடிகளில் பக்தி கொண்டவனே! மனத்தையும் இந்திரியங்களையும் கட்டுப்படுத்துவதன் மூலம் ஸம்ஸாரத்திலிருந்து விரைவில் விடுதலை பெறுவாயாக. உன் இருதயத்தில் உறைகின்ற ஈசனை இவ்வாறு காண்பாயாக.

(கோவிந்தனை நாடு, கோவிந்தனைப் பாடு)

திருமலை வாசன் வாழ்க தேவாதிதேவன் வாழ்க
பெரியதோர் ஈசன்வாழ்க. பிரம்மாண்டசோதிவாழ்க
துரியமேலனுவாய்நிற்கும் தூயகோவிந்தன் வாழ்க
திருவடி இணைகள் வாழ்க திவ்யநற்கருணை வாழ்

- வாழ்க வையகம் வளர்க பேரறிவு

### கீதா சாரத் தாலாட்டு

## முன்னுரை

*பிரஸ்தானத் திரயங்களில் ஒன்றாகப் போற்றப் பெறும் ''பகவத் கீதை'' உலகப் புகழ் மிக்கதொரு மெய்ஞ்ஞானக் களஞ்சியமாகும். பகவான் கண்ணனால் அருச்சுனனுக்கு உபதேசிக்கப் பெற்றது ''பகவத் கீதை'' உலகில் பகவத் கீதைக்கு அமைந்துள்ள விரிவுரைகளும் மொழிபெயர்ப்புகளும் கணக்கிலாதனவாகும். இத்தகு மாபெரும் சிறப்பு வாய்ந்த பகவத் கீதையின் மேலாம் தத்துவ உண்மைகளை இன்பத் தமிழில் எளிய முறையில் தாலாட்டுப்பிரபந்த வடிவில் ஆக்கியவர், தொண்டைவள நாட்டில் மாதைப் பதியின் மன்னனாக விளங்கிய திருவேங்கடநாதர் என்னும் மறையோர் ஆவர். இவருக்கு அறிவிலும் அழகிலும் சிறந்த இரு புதல்விகள் இருந்தனர். இவர்களுள் ஒருத்திக்கு மகப்பேறு வாய்க்கப் பெறாமையால் மனம் வருந்தி ஏங்கித் தவித்தனள். அன்பு மகளின் ஏக்கம் காணச் சகியாத திருவேங்கடநாதர், அழகிய கண்ணன் பதுமை ஒன்றைக் கையினில் கொடுத்து ''இதனைத் தொட்டிலில் இட்டு அருமை மைந்தனாகவே கருதித் தாலாட்டிச் சீராட்டிப் பாலூட்டி மகிழ்ச்சி எறுக!'' என ஆசி கூறியதுடன் தாலாட்டும் பொருட்டு பகவத்கீதையின் சாரமான கீதாசாரத்தாலாட்டும் பிரபந்தத்தையும் இயற்றியருளினர். அம்மாது நல்லாள் தந்தையின் அருள் வாக்கிற்கேற்ப பதுமையைத் தொட்டிலில் இட்டுச் சீராட்டித் தாலாட்டி இன்புற்றுவர சில ஆண்டுகளில் சற்புத்திரப்பேறு வாய்த்து அளவிலா ஆனந்தம் அடைந்தனள் என்பது வரலாறு. இத்தாலாட்டு மெய்யுணர்வு ஊட்டக்கூடிய தத்துவச் செல்வங்கள் நிறைந்தது. படிப்பவர்க்கு எளிய முறையில் இனிய தமிழில் அமைந்துள்ளது. ஒலிகள். உணர்ச்சியைத் தூண்டும் ஆற்றல் உடையவை. மந்திர ஒலிகள், வேத ஒலிகள் போன்ற சிறப்பு ஒலிகள் நன்மை பயக்கும் சக்தி வாய்ந்தவை. பொருள் தெரியாத போதிலும் புனிதமான நல்ல ஒலிகள் கேட்பதாலும் மீண்டும் மீண்டும் சிந்திப்பதாலும் நன்மை பெருகும் என்பர் சான்றோர். கொஞ்சும் மழலைச் செல்வங்களின் பிஞ்சு உள்ளங்களில் இந்தத் தத்துவம் நிறைந்த தாலாட்டினைக் கற்றுணர்ந்து புகட்டி சேய்க் குலத்தினைச் சிறப்பிக்கச் செய்து நல் வாழ்வுவாழ வழிகாட்டியாக அமைய வேண்டுமென்று விரும்புகிறோம். மநநம் செய்பவர்களின் சௌகர்யம் கருதி மூலமும் தனியாக வெளியிடப் பெற்றுள்ளது.*

அத்தியாயம் இரண்டு

திருவாமாத்தூர்

ஸ்ரீ திருவேங்கட நாதர் இயற்றிய

# கீதா சாரத் தாலாட்டு

ஸ்ரீ கண்ணபிரான் துதி

ஐவகைப் பொருளும் நான்கு கரணமும் குணங்கள் மூன்றும்
செய்வினை இரண்டும் ஒன்றி யாவரும் திகைப்ப நின்ற
பொய்யிருள் அகல ஞானப் பொருட்கதிர் விரித்த புத்தேள்
கைவளர் ஆழிச் செங்கண் கண்ணனைக் கருத்துள் வைப்பாம்.

ஆக்கியோன் பெயரும்,
முதனூற் பெயரும், நூற்பெயரும்

மாதையர்கோன் வேதநவில் வாய்வேங் கடநாதன்
காதையுறப் பார்த்தனுக்குக் கண்ணனருள் - கீதைக்
கருத்துயர்தா லாட்டாகக் கட்டுரைத்தான் யாரும்
கருத்துயர்தீர்ந் தெய்தக் கதி.

## நூல்

சீராரும் பரமார்த்த தெரிசநத்தை அருள் செய்யப்
பேராரும் தேசிகராய்ப் பெருமானே வந்தவரோ 1

திருத்தேரில் சாரதியாய்ச் சேர்ந்திருந்தும் கீதையினால்
அருச்சுனற்கு மெய்ஞ்ஞானம் அனைத்தும்உரை செய்தவரோ 2

செஞ்சமரில் பந்துசநம் சேதமுறும் என்றிரங்கி
அஞ்சினவன் பயம்தீர்த்தே அமர்செய்யச் சொன்னவரோ 3

சுற்றம் அறில் சோகம்எனச் சொல்லினைசற்று அறிந்தவன்போல்
கற்றுணர்ந்த பேர் அதனால் கலங்கார்காண் என்றவரோ 4

கலங்காரோ இறப்புவரில் கற்றுணர்ந்த பேரேனும்
மலங்காமல் நான் இருக்கும் வகைஉரையும் எனவினவ 5

நீயும்நா னும்புவிமேல் நிருபர்களும் மெய்யுணர்வால்
ஆயுங்கால் பிறந்திறப்பது ஆர்க்கும்இலை என்றவரோ 6

ஈங்குஎவர்க்கும் பிறந்திருப்பது இல்லைஎன்றீர் இவ்வுலகில்
நீங்குபவம் யார்க்கு இதனை நீச்சயமாய்ச் சொல்லுமென 7

இத்தரையில் பிறந்திருப்பது எடுத்தஉடற்கு அடுத்தபொறி
நித்தியமா கியஆந்மா நின் சொரூபம் என்றவரோ 8

அங்கம் உயிர் இந்தியம்நான் அன்றிவேறு எனைக்காணேன்
இங்குயான் வேறுண்டேல் எனக்கும்அறியப் புகலும்என 9

மெய்உயிர்இந் தியங்கள் அல்லால் வேறுஅறியேன் என்றவனைப்
பையஅவை யால்அறியப் படானும்நீ என்றவரோ 10

தேகம்வேறு ஆகில்அதைச் சேர்ந்ததுஇவன் ஏதுஎனவே
சோகமே விளைகருமத் தொடர்ச்சியினால் என்றவரோ 11

தேகம்எடா முன்கருமச் செயல்வரும் ஆறு ஏதுஎனவே
ஏகமாம் மரமும்வித்தும் எனும்முறைபோல் என்றவரோ 12

காயமும்தா னும்பிறிதேல் கன்மம்எவர் செய்ததுஎனத்
தீயஉடற்கு அலதுகன்மச் செயல்தனக்குஏது என்றவரோ 13

படர்கருமம் உடல்செய்யில் பலம்உறுவது யார்க்குஎனவே
அடர்பலமும் உடற்கேயாம் அறிவார்க்குஏது என்றவரோ 14

வெய்யவினை உடற்குஎன்றால் மெய்இங்கே விழஆந்மா
ஐயம்அற நரகசொர்க்கம் அநுபவிப்பது ஏதுஎனவே 15

அநுபவமே இலைஅதுவீண் ஆரோபிதம் நிகழ்த்தில்
தநுகரணச் செயல்தன தாச் சார்வதுபோல் என்றவரோ 16

மற்றுஉடலின் செய்கைதன்மேல் வருமயக்கம் ஏதுஎனவே
முற்றுணர்வுஒன்று இல்லாத மோகம்என்று சொன்னவரோ 17

அறிவுதே கம்தனக்கோ ஆந்மாவிற் கோஎனவே
பிறிவுசெயில் அசித்துஉடலம் பிரம்மம் அறிவு என்றவரோ 18

தேகம்அசித் தாகில் இந்தச் செயல்வருவது ஏதுஎனவே
ஏகபரம் சோதியின்முன் இருக்கையினால் என்றவரோ 19

இருக்கினும் அசேதநத்துக்கு இச்செயல்உண் டோஎனவே
உருக்குபடாக் காந்தம்முன்னில் ஊசிநிகர் என்றவரோ 20

சொன்னசெயல் உடற்குஆனால் சுகதுக்கம் யார்க்குஎனவே
அன்னசுக துக்கமும் தான் அவ்வுடற்கே என்றவரோ 21

சேதநமாம் ஆந்மாவைச் சேராத துக்கசுகம்
ஓதுசட மாம்உடலை உற்றிடுமோ சொல்லும்என 22

பூதம்ஐந்தோடு ஐந்துயிர்கள் புலன்கள்பத்துமநம்முதல் நான்கு
ஈதுஇருமெய் இதில்மநத்துக்கு இன்பதுன்பம் என்றவரோ 23

இந்தஇரு வகைத்தநுவிற்கு ஏதுஏது எனவினவ
முந்தியகா ரணம் அதனால் மூன்றுதநு என்றவரோ 24

மநம்அறியும் துக்கசுக வரவுஎன்றீர் அம்மநமும்
வினவில்அசே தநம்அலவோ விரித்துஎனக்கு விளம்பும்என 25

அம்மநத்தில் ஆந்மா அபேதம்போல் தோன்றுதலால்
விம்முதுக்க சுகத்தைமநம் மேவும் என்று சொன்னவரோ 26

அந்தமநோ துக்கசுகம் அதனிடத்து நில்லாமல்
வந்திலங்கும் ஆந்மாவை மருவியதுஎன் சொல்லும்என 27

வெய்யகன லின்சூடு மேல்வைத்த சட்டியினூடு
உய்யபுன லூடுவந்து அங்கு ஒன்றுதல்போல் என்றவரோ 28.

சித்தாகும் ஆந்மாவும் செடமாகும் சித்தமும்தான்
ஒத்தாங்கு இரண்டும்ஒன்றாய் உற்றவகை சாற்றும்என 29

வல்லிரும்பு கனலுடனே மருவியது போல்மநமும்
ஒல்லையில்ஆந் மாவுடனே உற்றதுகாண் என்றவரோ 30

உற்றதுஎத னால்எனவே உள்ளம் அவி வேகம்உறப்
பற்றியதன் மேலும்அதன் பண்புவந்தது என்றவரோ 31

அடுத்தகுணம் போமோபின் ஆந்மாவை விட்டெனவே
எடுத்தசெம்பூ நிறம்படிகத்து ஏறுதல்போல் என்றவரோ 32

சுத்தபடி கம்போல் சொரூபமாய்த் தானிருக்க
மெத்தவும்ஆசா மலிநம் மேவியதுஎன் சொல்லும்என 33

அநாதியாம் வாசனையால் அடைந்ததுஆ சாமலிநம்
மநோபந்தம் இருக்கில்முத்தி வாராதுஎன்று உரைத்தவரோ 34

பந்தம்எது முத்திஎது பகுத்துரைக்க வேண்டும்என்றன்
சிந்தை தெளியஎன்று திருத்தா ளினைவணங்க 35

தேகாதி தான்எனவே சேர்அபிமா நங்கள்பந்தம்
ஆகாத மாநம்விடில் அரியமுத்தி ன்றவரோ 36

அபிமாநம் வரும்வகையும் ஆங்குஅதுதான் தீர்வகையும்
தபியாமல் நான் அறியத் தயவாகக் கூறும்என 37

மறந்திடும் அஞ் ஞாநத்தால் மாநம்வந்தது அஞ்ஞாநம்
இறந்துவிடின் மாநமும்போம் என்னஉரை செய்தவரோ 38

அந்தமுறை அஞ்ஞாநம் அணுகுவதும் போவதுவும்
சந்தயம் இல் லாது அறியத் தயவாகக் கூறும்என 39

அஞ்ஞாநம் வந்தது அநாதிஅது சொல்வதல்ல
மெய்ஞ்ஞானத் தாலே விடுமென்று உரைத்தவரோ 40

இரவிஎதிர் அடுத்துவந்த இருள்போல அஞ்ஞாநம்
வரவிதியோ சோதிதன்பால் வந்தவகை ஏதுஎனவே 41

அந்தஅறிவு வந்தால் அஞ்ஞாநம் இல்லைஅப்பால்
சந்ததமும் ஆநந்த சாகரம்காண் என்றவரோ 42

வேதாந்தத் தால்குருவால் மெய்ஞ்ஞாநம் வந்தவுடன்
தீதுஆன துக்கசுகம் தீராதது ஏதுஎனவே 43

பற்றுஅறுமோ துக்கசுகம் பரோக்ஷஞா நத்தாலே
அற்றமாம் அவ்விரண்டும் அபரோக்ஷத்து என்றவரோ 44

பரோக்ஷம் அப ரோக்ஷம்எது பகுத்துரைக்க வேண்டும்என்றன்
தீரோதமாம் புத்திநன்றாய்த் தெளிவுபெறும் ஆறு எனவே 45

பகர்ந்தசத்த ஞாநம் பரோக்ஷம் அநுபவத்தால்
அகம்பிரமம் எனும்ஞாநம் அபரோக்ஷம் என்றவரோ 46

தான்பிரமம் என்றுஅறிந்தும் தநுவைத்தான் என்றபுத்தி
ஏன்போக வில்லைஅதை எனக்குஅறியப் புகலும்என 47

கேள்வியினால் மநநத்தால் கிளர்ந்தயோ கங்களினால்
ஆள்பிரமத்து அநுபவம்வந்து அதுதீரும் என்றவரோ 48

ஆதியாம் சிற்சொரூபம் ஆகாததான் இனிமேல்
சோதிமநந ஆதியினால் சொரூபம்ஆ மோஎனவே 49

எப்போதும் சிந்மயம்தான் எனல்மறந்து தேடுவது
செப்பும்மிடற்ற அணிஇருக்கத் தேடுதல்போல் என்றவரோ 50

தேடியபின் தேகபுத்தி தீர்ந்துபோய்ச் சிற்சொரூபம்
கூடுவனோ யான்என் குறைதீரச் சொல்லும்என 51

*வந்தஉடல் வேறாயும் வாசனையால் தான்எனலால்*
*சந்தயம்என் தற்சொரூபம் தான்ஆதற்கு என்றவரோ* 52

*தநுவைத்தான் எனும்பிரமை சத்தஞா நத்தில் அறாது*
*அநுபவமெய்ஞ் ஞாநத்தால் அறும்வகைஎது உரையும்என* 53

*விளக்குவிளக்கு எனும்அதனால் வெய்யஇருள் போய்விடுமோ*
*துளக்கம்இலா விளக்குஏற்றில் தொலையும் இருள் என்றவரோ* 54

*நெடுங்காலம் ஆந்மாவை நீங்காத அஞ்ஞாநம்*
*விடுங்காலம் எந்நாளோ மெய்ஞ்ஞாநத் தால்எனவே* 55

*அந்தகா ரம்குகையில் ஆயிரம்நாள் இருந்தாலும்*
*செந்தீபம் கண்டவுடன் தீர்வதுபோல் என்றவரோ* 56

*கருமம்யோ கம்தவமே காரணமாய் நீங்காமல்*
*அருமையாய் ஞாநம்வந்தோ அஞ்ஞாநம் போம்எனவே* 57

*குத்தும்வெட்டும் படைகளினால் கூடுமோ இருள்துரக்க*
*உத்தமமாம் ரவிஉதித்தால் ஓடும்இருள் என்றவரோ* 58

*அஞ்ஞாந இருள்துரக்க அறியாத நல்லகன்மம்*
*மெய்ஞாலம் தனைப்பரிக்கும் விதம்எவ்வாறு எனவினவ* 59

*இந்திரஜா லம்போல இவ்வுலகை நம்மிடத்தில்*
*தந்திரமாய்த் தோற்றுவித்தோம் சத்தியம்அல என்றவரோ* 60

*மித்தை எனும் சகத்துநின்பால் விளங்குமோ எனவினவ*
*சுத்திதனி லேரசதம் தோன்றுதல்போல் என்றவரோ* 61

*அயல்வெள்ளி சுத்தியின்மேல் ஆரோபி தம்கூடும்*
*இயலுள்ள சகமும்முன்வேறு இருந்ததும்உண் டோஎனவே* 62

*மநமயக்கம் பிடிக்கில் இல்லா வஸ்துவும் தோன் றிடும் அதுவோ*
*கனவில்விண்ணில் தான்பறக்கக் கண்டதுபோல் என்றவரோ*

63

கனவுபோல் பிர பஞ்சம் என்றீர் கண்விழித்தால் கனவுபொய்யாம்
வினவுசகம் திநமும்மெய்யாய் விளங்குவதுஎன் சொல்லும்என
64

மெய்யாக விளங்குவது மெய்ஞ்ஞாநம் வரும் அளவும்
பொய்யாம்பின் கனவதுபோல் போதம்வரில் என்றவரோ 65

முன்புகண்ட கனவுபொய்யாம் முழிசாக்கிரம் போலஎன்றீர்
பின்புமுத்தித் தசை அடைந்தும் பிரபஞ்சம்நிற்பது ஏதுஎனவே
66

தெரிந்தவர்க்குத் தோற்றுவது தெத்தபடம் போல்வதுஅல்லால்
பரந்தசகம் காரியத்தில் பயன்படாது என்றவரோ 67

கனமம்வினை அஞ்ஞாநம் கடந்தும் அதன் காரியமாம்
புன்மைஉறு மெய்உடனே போகாதது ஏதுஎனவே 68

வெட்டவிழும் மரம்பசந்து விளங்குதல்போல் சிலகாலம்
நட்டகன்மம் மாய்ந்தும்அங்கம் நடித்திடுங்காண் என்றவரோ
69

சென்மம்போய் முத்தியினைச் சேரச் சிலர் இருக்கத்
தொன்மைஆந் மாபலவோ சொரூபம் பகரும்என 70

பிரமம்என்றும் ஈசன்என்றும் பெருகுபல சீவர்என்றும்
உரைமயக்கம் அலது ஆந்மா ஒருவனே என்றவரோ 71

ஏகம்தான் ஆந்மா எனும்வகையே மெய்யானால்
ஆகம்தோ றும்பலவாய் அமர்ந்தது என்னோ சொல்லும்என
72

பலகடத்தில் சலத்தூடு பாநுவிம்பம் தோன்றுதல்போல்
தொலைவில்புத்தி தொறும் ஆந்மாத் தோன்றுதல்காண்
என்றவரோ 73

ஆதித்தன் போல்ஆந்மா அளவில்புத்தி தொறும்தோன்றில்
சாதிக்கும் முத்திஎவர் தமக்குஅதனைச் சாற்றும்என 74

*பந்தம்முத்தி தானும்அந்தப் பாந்தபுத்தி தனக்கே ஆம்*
*அந்தவிம்பம் தனக்குஇலைஎன்று அறிவுவரச் சொன்னவரோ* 75

*பரம்ஏகம் ஆயும்அதில் பலசீவர் ஏதுஎனவே*
*ஒருகடலில் பலகுமிழி உதிப்பதுபோல் என்றவரோ* 76

*சீவன் அது தான்என்றும் சேரும் பிரமம்என்றும்*
*ஆவதுவோ பேரின்பம் ஆங்குஅதுஎனக்கு ஓதும்என* 77

*ஏகம் பிரமம் இரண்டுஇலைநீ வேறும் அல*
*சோகம்உறும் பேதம்அறில் தோன்றும்இன்பம் என்றவரோ* 78

*சீவபே தம்போமோ சித்துஒன்றா மோஎனவே*
*ஆவல்மநம் அறும்சுழுத்தி அவத்தையில்பார் என்றவரோ* 79

*பேதம்அல இவ்வுலகம் பிரமமயம் என்றுஅறிந்தும்*
*பூதமய மாய்த்தோற்றல் போகாதது ஏதுஎனவே* 80

*கானலைநீர் என்றுஓடிக் கண்டவர்க்குத் தீர்ந்தபின்னும்*
*வான்உலவு நீராகி வயங்குதல்போல் என்றவரோ* 81

*அறிவானும் நல்லறிவும் அறியப் படும்பொருளும்*
*பிறிவாய்மூன் றாய்இருத்தல் பேதம்அல வோஎனவே* 82

*சொப்பநத்தில் தனித்துஒருவன் தோற்றம்வேறு இல்லை அங்கே*
*கற்பனையாம் பொருள்அறிவு காண்பவன்போல் என்றவரோ* 83

*கற்பனையாம் பேதங்கள் காணாமல் போம்வகையை*
*விற்பனமாய் நான் அறிய விளம்புஎன வேவணங்க* 84

*துரியமாம் யோகத்தால் தூயமநம் லயமானால்*
*அரியமூ வகைவிகற்பம் அழியும்என்று சொன்னவரோ* 85

*சிறந்திருக்கும் ஆந்மாவும் செகம்எல்லாம் நிறைந்திருந்தும்*
*மறைந்துஎனக்குத் தோன்றாத வகைஏது சொல்லும்என* 86

சத்துச்சித்து ஆநந்தம் தான்மூன்றும் அதனுடனே
ஒத்துற்று நாம உருவம் சகம் ஆகி 87

இருக்கையினில் தொற்றாது இவைமூன்றும் பிரமம்என
மரிக்கில்வரும் பின்இரண்டும் மறிசகம்என்று உரைத்தவரோ
88

அறிந்துகொள்ஞா நத்தாலே ஆன்மாவை என்றுஉரைத்தீர்
சிறந்து ஒளிறும்ஆன்மாவும் திரிசியம் ஆமோ எனவே
89

முந்தியஞா நத்தாலே முதிரும் அஞ்ஞா நம்துரக்கில்
சிந்தையில்ஆந் மாச்சுயமாய்த் திகழும்என்று சொன்னவரோ
90

இனியமுத்திச் சுகம்இருப்பது எப்படிஎன் றேவினவ
அநுபவத்தில் அறிவிடயா நந்தம்போல் என்றவரோ 91

மநலயம்வந் தவர் அலது மற்றுஇலரோ முத்தர்எனச்
சநகனைப்போல் சீவந்முத்தர் தாமும்உளர் என்றவரோ 92

சீவந்முத்தி அடைந்தோர்கள் செயலும்அவர் தம்குணமும்
நாஉரைக்கும் வாசகமும் நான்அறியச் சொல்லும்என 93

வரும்கருவு பிறப்பினொடு வளர்தல்பருத் தல்குறைதல்
ஒருங்கலும்மெய்க்கு என்றுஅதனை ஒறுத்திருப்பார்
என்றவரோ 94

பார்ப்பதுவும் கேட்பதுவும் பகர்வதுவும் செல்வதுவும்
ஏற்பதுவும் கரணதன்மம் எனத்துணிவார் என்றவரோ 95

பசிதாகம் உயிர்க்குஎனவே பயம்துக்கம் சுகம்காமம்
வசிகோபம் மதிக்குஎனவே மகிழ்ந்திருப்பார் என்றவரோ 96

வீடும்தா ரமும்உறவும் மேவிஎன்றும் இருந்தாலும்
நீடும்தா மரைஇலைநீர் நிகர்ஒப்பார் என்றவரோ 97

பற்றிடும்கா யமும்தானும் பன்னாள்ஒற் றாயினும்பின்
உற்றபுளி யம்பழமும் ஓடும்ஒப்பார் என்றவரோ 98

கூறும்உலக இயற்கையுடன் கூடினும் மெய்ஞ் ஞானம்வந்தோர்
சேறும்பிள்ளைப் பூச்சியும்போல் திரிவார்காண் என்றவரோ 99

ததியூடு கடைந்தவெண்ணெய் தான்மோரில் கிடப்பதுபோல்
மதியோடு கூடினும்பின் மயங்கார்காண் என்றவரோ 100

அருச்சுநன்றன் பொருட்டாக அனைவருக்கும் ஞானம்வரப்
பொருந்தியதே சிகவடிவாம் புண்ணியரே கண்வளரீர் 101

ஆயர்குல மாதர் அளவிலோ ரைப்புணர்ந்தும்
தூயபதி னாறா யிரவருடன் தோய்ந்திருந்தும் 102

பரமமுநி வர்முன்னே பரிச்சித்தைத் தீண்டஅன்று
பிரமசரி யம்செலுத்தும் பேரொளியே கண்வளரீர். 103

ஓம் தத் ஸத்

ஓம் தத்சத்

# கீதாசாரத் தாலாட்டு

## கிருஷ்ணார்ஜுன சம்வாதம்

*(திரு வேங்கடநாதர் இயற்றிய மூலமும், அண்ணாமலை அடிகளார் இயற்றிய உரையும்)*

*ஐவகைப் பொருளான பூதங்கள் ஐந்தும், ஞானேந் திரியம் ஐந்தும், கருமேந்திரியம் ஐந்தும், வாயுக்கள் ஐந்தும், நான்கு கரணங்களும், மூன்று குணங்களும், திரிவித கரணங்களால் செய்யப்படுகின்ற வினைகளான, நல்வினை தீவினைகள் இரண்டும்பொருந்தி, ஞானியும் ஈசனும் தவிர மற்றைய அனைவரும் மயங்கும்படியாக இருக்கின்ற, வாக்குக்கு எட்டாத அஞ்ஞான இருள் நீங்குவதற்கு பிரம்ம வித்தியா பொருள்களாகிய கதிர்களைப் பரப்பிய சூரியனாகிய (கையில் ஒளிவீசுகின்ற) சங்கு சக்கரத்தினையும் சிவந்த கண்களையும் உடைய கண்ணனை மனதில் வைத்துத் தியானிப்பாம். அன்னாருக்கு வணக்கம்.*

*மேன்மையான அழகிய தேரில் சாரதியாய் சேர்ந்திருந்தும் கீதையெனும் தம்வாக்கால் பார்த்தனுக்கு உண்மை ஞானம் அனைத்தினையும் உரைசெய்த பகவானுக்கு வணக்கம்.*

1. *அர்ச்சுனன் வினா:*
   *பகவன்! யுத்தத்தில் உறவினருக்கு நாசம் வரும் என மனமிறங்கி போரிட அஞ்சுகின்றேன், என பகவானிடம் கேட்டான்.*

*பகவான் விடை ; அர்ச்சுனா! உறவினர் நாச மானால் துன்பமென அறிந்தவனைப் போலக் கூறுகிறாய். சுற்றத்தார் நாசமடைவதால் கற்றுத் தெளிந்த ஆத்மானுபவ பெரியோர்கள் கலங்கார்கள் என்றார்.*

2. *அ.வி. குருமுகமாக ஆராய்ந்து பிரமத்தையறிந்த ஞானிகளும் மரணம் வந்தால் கலங்கமாட்டார்களா? அவ்வாறு நான் கலங்காமலிருக்கும் படியான உபாயத்தை உபதேசம் செய்வீர் என அர்ச்சுனன் கேட்டான்.*

   *ப.வி. உண்மை ஞானத்தால் விசாரிக்குமிடத்து நீயும் நானும் இவ்வுலகிலுள்ள அரசர்களும் மற்றுமுள்ள எல்லாரும் பிறப்பதும் இறப்பதுமில்லை என்றார்.*

3. *அ.வி. இவ்வுலகில் பிறந்திறப்பது எல்லா ஜீவர்க்குமில்லை என்றீர். அப்படியானால் இவ்வுலகில் பிறப்பது இறப்பது யாருக்கு உளது? இவ்விஷயத்தை உண்மையாக அடியேனுக்குக் கூறியருளுக என்றார்.*

   *ப.வி. இவ்வுலகில் பிறந்திறப்பது கர்மானுசாரமாக வந்த உடம்புக்குப் பொருந்தியதாம், உனது நிஜசொரூபம் நாசமற்ற ஆத்ம வடிவம் என்றார்.*

4. *அ.வி. எனது சொரூபம் தூல உடம்பும், பிராணனும், இந்திரியங்களும் அல்லாமல், அன்னியமாக ஆத்மாவென்ற ஒன்றை நான் அறியவில்லையே? இங்கு நான் என்னும் ஆத்ம சொரூபம் தூல சூட்சும சரீரங்களுக்கு வேறாய் இருக்குமானால் எனக்குத் தெரியும்படிக் கூறுமென்றான்.*

   *ப.வி. தூல உடம்பும், பிராணனும், இந்திரியங்களுமல்லாமல் இவற்றுக்கு அன்னியமாக என்னை அறியேன் என்ற பார்த்தனைப் பார்த்து 'குழந்தாய்' அச்சரீராதிகளால் உணரப்படாதவனும் அவற்றை அறிபவனும் நீயாவாய் என்றார்.*

5. *அ.வி. சரீரம் வேறானால் அந்த இத் தேகத்தை இங்கு ஆத்மா சம்பந்தித்தது எப்படி என்றான்.*

*ப.வி. துன்பமே உண்டாக்கும் பூர்வம் செய்த கர்மங்களின் சம்பந்தத்தால் ஆனது என்றார்.*

6. *அ.வி. தேகம் எடுப்பதற்குமுன் இக்கர்மத் தொழில் வந்தவழி எப்படி? என்று கேட்டான்.*

*ப.வி. விதையும் மரமும் எனப்படும் ஒன்றாகிய கிரமம் (பீஜாங்குர நீயாயம்) போல் கருமத்தால் சரீராதிகளும் அனாதியாக மாறிமாறி வருகின்றதென்றார்.*

7. *அ.வி. சரீரமும் ஆன்மாவும் வெவ்வேறானால் கருமத்தை யார்செய்தது எனக் கேட்டான்?*

*ப.வி. கருமத்தால் ஆகும் நல்வினை தீவினைகள் குற்றமுள்ள உடலுக்கேயன்றி ஆத்மாவுக்கு எப்படி உண்டாகும், உண்டாகாது என்றார்.*

8. *அ.வி. விரிந்தகர்மம் தேகம் செய்தால் அதனால் வரும் பயனையடைவது யாருக்கு என்று கேட்க.*

*ப.வி. நெருங்கிய பயன்களும் சரீரத்துக்கேயாகும். அறிவு சொரூப ஆன்மாவுக்கில்லை என்றார்.*

9. *அ.வி. இக்கொடியகர்ம பலம் உடலுக்கு என்றால் தூலதேகம் இவ்வுலகில் விழுந்திருக்க அந்த ஆத்மா சந்தேகமின்றி நரக துக்கத்தையும் சொர்க்க சுகத்தையும் எப்படி அனுபவிக்கிறது என்றான்?*

*ப.வி. ஆத்மாவுக்கு நரக சொர்க்க சுகானுபவம் சொல்லுமிடத்து அது உண்மை அனுபவமல்ல, தூல சரீரத்தினதும் அகக்கரணங்களினதுமாகிய தொழில்கள், தன்னுடையதாகத் தோன்றுவதுபோல கற்பனைத் தோற்றமேயன்றி உண்மையில்லை.*

10. அ.வி: தனக்கு வேறான சரீரங்களின் தொழில்கள் ஆத்மாவாகிய தன்மீது வந்துதோன்றும் பிராந்தி எப்படி வந்தது என்று கேட்க.

ப.வி: பூரணமான ஞானத்தையடையாத மோகமயக்கத்தால் வந்தது என்றார்.

11. அ.வி.அறிவு வடிவ ஞானமானது தேகத்துக்கா? ஆத்மாவிற்கா? என்று கேட்டான்.

ப.வி.: உடலையும் ஆத்மாவையும் பிரித்துப் பார்த்தால் உடல் ஜடமாம் ஆத்மாவாகிய பிரமம் ஞானசொரூபமாம் என்றார்.

12. அ.வி: உடல் ஜடமானால் போதல் வருதலாகிய தொழில்கள் உண்டாவது எப்படியென்று கேட்டான்?

ப.வி: ஒன்றாயும் வியாபகமாயுள்ள பிரமத்தின் ஒளியின் முன்னே தேகம் இருப்பதால் ஆத்ம சன்னிதானத்தில் தொழில்கள் உண்டாகின்றன என்றார்.

13. அ.வி. சரீரம் ஆத்மாவையடுத்திருந்தாலும் கல்போன்ற இந்த ஜட உடலுக்கு ஈதல், இரத்தல் முதலிய தொழில்கள் உண்டாகுமா? உண்டாகாதோ என்று கேட்டான்?

ப.வி. நெருப்பில் காய்ச்சப்படாத காந்தக்கல்லின் முன் ஜடமாகிய ஊசி ஓட்டுதல்போல ஆத்மாவை அணுகிய உடலும் கர்மத்தைச் செய்யும் என்றார்.

14.அ.வி. மேற்கூறிய நன்மை தீமையைத் தரும் வினைகள் சரீரத்திற்கு. ஆனால் அதன் பயனாகிய இன்பமும் துன்பமும் யாருக்குச் சொந்தமென்று கேட்டான்.

விடை. அத்தகைய இன்பமும் துன்பமும் அவ்வுடலுக்கேயன்றி ஆத்மாவுக்கில்லை என்றார்.

15. அ.வி.: அறிவு வடிவம் ஆன்மாவை அணுகாத துன்பமும் இன்பமும் சொல்லப்பட்ட அறிவற்ற தேகத்தை எப்படி சம்மந்திக்கும் அடியேனுக்கு அருளுக என்றான்.

*விடை: ஸ்தூல பஞ்சபூத அம்சமான தூலசரீரத்தோடு ஐந்து வாயுக்களும் ஞானேந்திரிய கர்மேந்திரியங்கள் பத்தும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆக இந்த இருப்பத்தி நான்கு தத்துவங்களும் ஸ்தூல சூட்சுமம் என்னும் இரண்டு சரீரங்களாம். இவ்விரண்டு உடலுக்குள் மனதிற்குத்தான் இன்பமும் துன்பமும் என்றார்.*

*16. அ.வினா: தூல சூட்சுமமான இரண்டுவித இச்சரீரங்களுக்குக் காரணம் எதுவென்று கேட்க.*

*விடை: முற்பட்ட அஞ்ஞானமே முதல் சரீரமாம் அக்காரண சரீரத்தோடு மேற்கூறிய சரீரமும் சேர்ந்து மூன்று சரீரமாம் என்றார்.*

*17. அ.வினா: இன்பதுன்பங்களின் அடைவு மனமே அறியும் என்று கூறினீர். அந்த மனமும் விசாரிக்கில் ஜடமல்லவா? ஜடம் எப்படி அறிவைப் பெறும் என்பதை விரிவாக அடியேனுக்குக் கூறும் என்று கேட்டான்.*

*விடை: அம்மனத்தில் அறிவு வடிவ ஆத்மா ஒன்று பட்டதுபோல் விளங்குவதால் மிகுந்த சுகதுக்கத்தை மனது பொருந்தும் என்றார்.*

*18. அ.வினா: முன்கூறிய அம்மனத்தினது இன்பதுன்பங்கள் அதனிடத்து இருக்காமல் அணுகி ஒன்றாக விளங்கும் ஆத்மாவை எப்படி தழுவியது? கூறும் என்றான்.*

*விடை: வெப்பம் மிகுந்த நெருப்பின் உஷ்ணம் அதன்மீது வைக்கப்பட்ட பாத்திரத்தின் கண் உள்ள ஜலத்தினிடத்தில் நெருங்கி சேர்தல் போல ஆகுமென்றார்.*

*19.அ.வி. அறிவு சொரூப ஆத்மாவும், ஜடசொரூபமான மனதும் ஆகிய இவ்விரண்டும் வேறுபாடின்றி ஒற்றுமையாய்ச் சேர்ந்த வகையை அடியேனுக்குக் கூற வேண்டும் என்றார்.*

விடை: கடினமான இரும்பு தீயோடு சேர்ந்தது போல் ஜடமான மனதும் சித்தான ஆத்மாவோடு அனாதியாகவே அபேதமாகப் பொருந்தியது என்றார்.

20. வினா: பொருந்திய ஆத்மாவான தன்னிடத்தில் மனத்தின் தர்மங்களாகிய சுகதுக்க இச்சை முதலிய சுபாவம் எக்காரணத்தால் பொருந்தியதென்று கேட்க.

விடை: மனம் விவேகமில்லாமையால் ( ஆராயும் தன்மையில் இல்லாமையால்) பொருந்திய மனனத்தின் தருமம் ஆத்மாவினிடத்துப் பொருந்திய தென்றார்.

21. வினா: அவ்வாத்துமாவை அணுகிய பண்புகள் உண்மை ஞானம் வந்தபின் ஆத்மாவை வீட்டு நீங்குமா? என்று கேட்டான்?

விடை: பறித்த செவ்வரத்தப் புஷ்பத்தின் சிகப்பு நிறம் வெண்மையான படிகத்தில் படிந்து தோன்றுவது போலத் தோன்றும் என்றார்.

22. வினா: களங்கமற்ற பளிங்கைப் போல ஆத்மாவாகிய தான் சச்சிதானந்த வடிவமாயிருக்க ஆசையாதி களங்கம் மிகவும் ஆத்மாவைப் பொருந்தியது என்ன காரணம் என்று கேட்டான்.

விடை: பூர்வஜென்ம சமஸ்காரத்தால் ஆசையாதிய களங்கம் ஆத்மாவைப் பற்றியது மனதில் சம்சாரபந்தமிருக்கு மானால் மோட்சம் சித்திக்காது, என்று உபதேசித்தார்.

23. வினா: வாசனா வடிவ பந்தம் எது? மோட்சம் எது? இவற்றைப் பிரித்து என் மனம் தெளியும்படி உணர்த்தியருளும் என்று அழகிய திருவடிகளை நமஸ்கரித்தான்.

விடை: சரீராதி பஞ்சகோசங்களைத் தன் ஆத்ம சொரூப மென்று வருகின்ற வாசனாவடிவம் பற்றுக்களே பந்தமாகும். மோட்சத்திற்கு அனுகூலமாகாத அவ்வ பிமான

வடிவபந்தம் நீங்கினால் அதற்குரிய மேலான முத்தியாம் என அருளினார்.

24. வினா: தேகாதிகளில் வரும் பற்று வடிவ பந்தம், வருகின்ற தன்மையினையும், அபிமானத்தை அகற்றும் தன்மையினையும் நான் தாபமடையாமல் உணர்தற்பொருட்டு அருளுக என்றான்.

விடை: தன் சொரூபத்தை மறந்த அறியாமையால் தேகாதிகளில் நான் என்னும் அபிமானம் வந்தது. அவ்வறியாமை நாசமானால் அவ்வபிமானமும் நீங்கிப் போம் என்றார்.

25. வினா: முன்கூறிய அப்படியே அவ்வறியாமைப் பொருந்துவதையும், நீங்குவதையும் சந்தேகமின்றி தான் அறியும் பொருட்டு அருளோடு கூறியருளுக என்றான் .

விடை: ஆத்மாவில் அவ்வறியாமை பழமையாக உள்ளது. அவ்வஞ்ஞானம் இடையில் வந்ததாகக் கூறத்தக்கதன்று. சற்குரு உபதேசத்தால் உண்டான தத்துவஞானத்தால் நீங்குமேயன்றி கருமத்தால் நீங்காதென்று உரைத்தார்.

26. வினா: இருள், சூரியன் முன்னே நெருங்கி வந்துள்ளது என்பது சிறிதும் பொருந்தாததுபோல ஒளிவடிவ ஆன்மாவிடத்து இருள் வடிவ அஞ்ஞானம் பொருந்தி வருவது முறையா? முறையல்லவே? அது சுயம்பிரகாச ஆத்மாவைப் பொருந்தியுள்ளது எப்படி என்று அருளுக?

விடை: ஒளிவடிவ ஆன்மாவில் இருள்வடிவ அஞ்ஞானம் அணுகாதென்றும் மெய்யறிவு திடமானால் அறியாமை யென்பது ஆன்மாவில் ஒருபோதும் உண்மையாக இல்லவே, இல்லை. இவ்வதிஷ்டான ஞானம் திடமானால் எப்போதும் இன்பக்கடல் உன் சொரூபம் என்பதை நீ நன்றாய் அறிவாய் என்றார்.

27. வினா: ஞானஆசிரியர் உபதேசத்தாலும் அத்தியாத்ம சாஸ்த்திர சிரவணத்தாலும் மெய்ஞ்ஞானம் அந்த அந்த நேரத்திலேயே அஞ்ஞானம் நாசமானால் கொடிதான இன்பதுன்பங்கள் நீங்காதது என்ன காரணமென்றார்.

விடை: சாஸ்த்திர ஜன்னிய தத்துவஞானத்தால் அஞ்ஞானம் நீங்காதபோது அதன் காரியமான இன்பதுன்பங்களின் சம்பந்தம் நீங்குமோ? நீங்காதே. அபரோட்ச ஞானத்தால் அஞ்ஞானம் நசிக்க அச்சுகதுக்கம் இரண்டும் நாசமாகு மென்றார்.

28. வினா: பரோட்சஞானம் எது? அபேராட்சஞானம் எது? எனது மறைப்புடைய புத்தி தெளிவடையும்படி இவற்றின் தன்மையைப் பிரித்துக் கூறியருளுக என்றான்.

விடை: சப்தரூப சாஸ்திரத்தாலுண்டான அறிவு முன் கூறிய பரோட்ச ஞானமாகும். விசார தியான, ஞான அப்பியாச முதிர்ச்சியால் நான் பிரமம் என்று உண்டாகிய ஞானமே அபரோட்ச ஞானம் என்றார்.

29 வினா: நான் சச்சிதானந்தப் பொருளே என்று அபரோட்சமாய் அறிந்த பிறகும் முன் போலவே சரீரத்தைத்தன் சொரூபம் என்கின்ற விபரீத புத்தி எக்காரணத்தால் நீங்கவில்லை. அதை எனக்குத் தெரியும்படி கூறியருளுக என்றான்.

விடை: தேகாத்ம புத்தி சிரவண மனனத்தால் விளங்கும் விசார நிதித்யாசனங்களாலும் பிரத்யக் அபின்ன பிரம்மத்தினது திடமான அபரோட்ச ஞானம் வந்தால் நிவர்த்தியாம் என்றார்.

30. வினா:முழுமுதற் பொருளாகிய சேதனவடிவ பிரமம் முன்பில்லாத ஆத்மாவாகிய தானே சிரவண மனை

நிதித்யாசனங்களால், இனிமேல் சோதி சொரூப பிரமம் ஆகுமோ என்று வினவினான்? (அதாவது சுபாவசித்தமா அல்லது செயற்கையால் சித்தமா)

விடை: ஆத்மாவாகிய தான் முக்காலத்தும் சிற் சொரூபமே என்பதை மறந்து தான் சின்மயமாவது மறந்து தவறிவிட்டதாக எண்ணி விசாரித்தல் போல ஆகும் என்றார்.

31. வினா: சிரவண மனாதிகளால் விசாரித்த பிறகு தேகாத்ம புத்தி வடிவை விட்டு நீங்கி சேதன பிரம சொரூபத்தை நான் அடைவேனா? எனது குற்றம் நீங்கக் கூறியருளுக என்றான். (ஆண்டான் அடிமையாய் என்ற வினா)

விடை:கர்மத்தால் ஆன உடல் தனக்கன்னியமாயிருந்தும் ஜென்மாந்திர வாசனையால், தன் சொரூபமாகிய ஆத்மா என்று திடமாய்க் கூறுகின்றபடியால் தனது உண்மையான ஆத்ம சொரூபமே தனது சொரூபமாக நிலைத்தற்குச் சந்தேகமா யுள்ளது என்றார்.

32. வினா:சரீரத்தை தன் சொரூபாத்மா வென்று சந்தேக விபரீதமின்றி அறியும் பிராந்தி சாஸ்திர ஜன்னிய ஞானத்தால் நீங்காமல் அனுபவ வடிவமான திட அபரோட்ச ஞானத்தால் நீங்குகின்ற காரணமென்ன? கூறும்? என்று கேட்டார்?

விடை: விளக்கு விளக்கென்று வாயால் கூறுவதால் கொடிய இருள் நீங்குமோ? நீங்காதே, சலனமில்லாத தீபத்தை ஏற்றினால் இருள் நாசமாகும் என்றார்.

33. வினா: ஆத்மாவை நெடுங்காலமாக விட்டுவிலகாது கூடவே இருந்த அறியாமை-யானது அபரோட்ச ஞானத்தால் நீங்கும் காலம் எக்காலமோ! நான் அறிகிலேன் என்று கேட்க,

விடை: மலைக்குகையில் உள்ள இருள் அநேக நாளாக அக்குகையிலிருந்தாலும், சிறந்த விளக்கை கொணர்ந்தவுடன்

*தாமதமின்றி நீங்குவது போல் அனாதியாயுள்ள அஞ்ஞானம் தத்துவ ஞானம் உதயமானவுடன் நீங்கும் என்றார்.*

34. *வினா: மூலாவித்தையானது யாகாதி புண்ணியக் கருமங்கள், யோகம், திருச்சிர சாந்திராயணாதி, தவம் போன்றவற்றைக் காரணமாகக் கொண்டு நீங்காமல் அடைதற்கரிய திட அபரோட்ச ஞானம் உண்டான பின்னரோ நீங்கும்? என்று கேட்டான்.*

*விடை: குத்துகின்ற, வெட்டுகின்ற (ஈட்டி, அறிவாள்) முதலிய படைகளால் இருளை நிவர்த்திக்க முடியுமா? முடியாதே. உலகுக்கு சகல நன்மையும் செய்யும் உயர்வினை சூரியன் உதயமானால் இருள் போகும் என்று கூறினார்.*

35. *வினா: அவித்தையாகிய அந்த இருளை நீக்கத் தெரியாத புண்ணியக்கருமங்கள் சத்தியமான பிரபஞ்சத்தைக் காக்கின்ற விதம் எப்படி? என்றான்.*

*விடை: இந்திர ஜாலக்காரனது வித்தையால் பதார்த்தங்கள் பொய்யாய்த் தோற்றுவதுபோல இது சத்தியமல்ல, மித்தையே என்றார்.*

36. *வினா: பொய்யென்று கூறப்படும் இவ்வுலகம் சத்தியவடிவமாக என்னிடத்து உண்டாகுமோ? என்றான்.*

*விடை: விவகாரீய சத்தான கிளிஞ்சலினிடத்து பிராதிபாசிக மித்தையாகிய வெள்ளிதோன்றுதல் போல சத்தியவடிவான நம்மிடத்தில் இம்மித்தையாகிய ஜகத்து தோன்றுதல் பொருந்தும் என்றார்.*

37. *வினா:ஆரோபிதத்திற்கு அன்னியமான வெள்ளி கிளிஞ்சலின் கண் தோன்றுவது கூடும். அதுபோல உண்மையான இயல்புடைய உலகமும் இவ்வாரோபித ஜகத்திற்கு முன்பு இதற்கு அன்னியமாக சத்தியமாக இருந்ததா? என்று கேட்டான்.*

விடை: மனம் மயக்கமடைந்தால் மூன்று காலத்துமில்லாத பதார்த்தமும் ஆரோபிதமாகத் தோன்றும். எப்படியெனில் கனவு நிலையில் தானே தன்னை ஆகாயத்தில் பறப்பது போல பார்த்தது ஆகும் என்றார்.

38. வினா: சொப்பன உலகம் மித்தையாவது போல சாக்கிர உலகமும் மித்தையென்று கூறினீர். அச்சொப்பன உலகும், சொப்பனமும், சாக்கிரத்தில் மித்தையாய்ப் போய்விடும், நான் வினவும் இவ்வுலகம் நாள்தோறும் சத்தியமாய் விளங்கக் காரணமென்ன?

விடை: திடஞானம் வருகின்ற வரையில் இவ்வுலகம் சத்தியமாய்த் தோற்றும் பின்னர் திடஞானம் வந்தால் சொப்பனமும் சொப்பன உலகம் போல இச்சாக்கிர பிரபஞ்சம் மித்தையாம் என்றார்.

39. வினா : கண்விழித்துக் கொள்ளுகின்ற வியவகாரிக விழிப்பு அவஸ்தையில் பூர்வம் பார்த்த சொப்பனமும், சொப்பன உலகமும் பொய்யாவது போல ஞான தசையில் வியவகாரிசு பிரபஞ்சம் மித்தையாம் என்றீர். ஞானம் வந்தபின்னர் மோட்ச நிலையினை அடைந்தும் இவ்வியவகார உலகம் முன்போலத் தோன்ற யாது காரணம் என்றான்?

விடை: ஆத்ம ஞானிகளுக்கு இவ்வியவகாரிக பிரபஞ்சம் தோற்றுவது நெருப்பால் எரிந்த வஸ்திரம் காரியத்துக்கு உதவாதது போன்று தோற்றல் மாத்திரமேயன்றி ஜனன மரணத்தைக் கொடுத்தல் முதலிய காரியத்திற்குப் பயன்படாது என்றனர்.

40. வினா: தேகாபிமானம் இன்றியும் அதனைக் காத்தலாகிய தொழிலும் அதற்கேற்ற முயற்சியும் அவ்வுடலின் காரணமான அஞ்ஞானமும் நீங்கியும் அஞ்ஞானத்தின் காரியமாகிய இழிவு பொருந்திய உடல் அப்பொழுதே நீங்காதது என்ன காரணம்?

விடை: கோடாரியால் வெட்டி சாய்ந்த மரம் காயாது பசுமையாக சிறிதுகாலம் தோன்றுதல் போல செய்கின்ற அவ்வுடலைக் காக்கும் சஞ்சித-வினை நாசமாகியும் தூலசரீரம் பிராரப்த கருமம் ஒழியும் வரையிலும் சஞ்சரிக்குமென்றார்.

41. வினா: சிறுபான்மையோர் பிறவி நீங்கி மோட்சத்தையடையபலபேர் அதனை அடையாமல் பந்தமுடையோராய் இருப்பதற்கு ஏற்ப அனாதியாயுள்ள ஆன்மா அனேகமா? அன்றா? அவ்வான்மாவின் உண்மை சொரூ பத்தைக் கூறும் என்றான்.

விடை: தற்பத லட்சியம் பிரமம் என்றும், தற்பதவாச்சியம் ஈசனென்றும் தொம்பத வாச்சியம் சீவர் என்றும் தொம்பத லட்சியம் கூடஸ்தர் என்றும் கூறுவது பிராந்தியேயன்றி அதிஷ்டான ஆத்மா ஒன்றே என்று கூறினார்.

42. வினா: ஆத்மா ஒன்றென்று கூறும் தன்மை உண்மையானால் உடல்தோறும் வேறுவேறாய் அனேகமாகப் பொருந்தியது என்ன காரணம்? கூறியருளுக?

விடை: அனேக குடங்களில் உள்ள ஜலத்தில் ஒரே பிம்பமாகிய சூரியன் நாநாவாய்க் காணப்படுதல் போல எண்ணித் தொலையாத அந்தக் கரணங்கள் தோறும் ஏகமான ஆத்மா பலவாகத் தோன்றுவதை நீ அறிவாய் என்றார்.

43. வினா: கரணங்கள் தோறும் பலவாகத் தோன்றுமாயின் சிரவணாதிகளால் சித்திக்கும் மோட்சம் யாவர்க்கு (அந்தக் கரணம் ஆத்மா எனும் இரண்டில் யாவர்க்கு,) அவ்விஷயத்தை அடியேனுக்கு அருளுக எனக் கேட்டான்?

விடை: அஞ்ஞானத்தினையும் மோட்சமும் முன்கூறிய அதாவது விஷயங்களில் வியாபித்த ஆபாச சகித அந்தக் காரணத்துக்கேயாகும். முன்கூறிய பிம்பவடிவ ஆத்மாவிற்கு அப்பந்த மோட்சம் இல்லை என விவேகம் உண்டாகும்படிக் கூறினார்.

44. வினா: பிரம்மம் ஏகமாய் இருந்தும் அப்பிரமத்தின் கண் நாநாவ சேதனங்கள் தோன்றக் காரணம் என்ன என்று கேட்க?

விடை: ஒன்றான கடலில் அனேகக் குமிழிகள் காற்றினால் உண்டாதல் போல ஒரே பிரம சேதனத்தில் பலசீவர் தோன்றினர் என்று அருளினார்.

45. வினா : தன்சொரூபம் ஜீவசொரூப மென்றும் தான் அடையத் தகுந்தது பிரம சொரூபம் என்றம் உள்ள ஆண்டான் அடிமை பேதஞானத்தால் உதிப்பதோ பிரமானந்தம். அதனைக் கூறியருளுக என்றனன்?

விடை: பிரமம் ஒன்றே உளது. இரண்டாவது வந்து இல்லவே இல்லை. அதற்கு நீயும் அன்னியமல்லா துக்கம் வருவதற்க ஏதுவான பேதபுத்தி நீங்குமானால் பிரமானாந்தம் உண்டாகு மென்றார்.

46. வினா: ஜீவர்களது வேற்றுமை நீங்குமா? பேதம் ஒழிந்து சேதனம் ஏகமாக விளங்குமா என்று கேட்டனர்?

விடை: விஷய ஆவலையுடைய அந்தக் கரணம் ஒழிந்துள்ள சுழுத்தி அவஸ்தையில் அப்பேதம் ஒழிந்து சேதனமாக விளங்குவதை உணர்வாயாக என்றார்.

47. வினா: உண்மையாகத் தோற்றும் இவ்வுலகம் பிரமத்திற்கு அன்னியமன்று, பிரம சொரூபமே என உணர்ந்தும் பஞ்சபூத வடிவமாய்த் தோன்றவது போகாதது யாது காரணம்?

விடை : உஷ்ண கிரணத்தை உண்மையாக ஜலமெனக் கருதி உணர்ந்தவர்க்கு இது கானலே நீரல்ல வென பிரத்தியட்சமாக உணர்ந்தவர்க்கு மயக்கம் நீங்கிய பின்னரும் வெளியில் செல்லுகின்ற ஆற்றச் சலமாக அறிந்த பின்னரும் பூதமயமாய் தோற்றும் எனக் கூறினார்.

48. வினா: ஞாதுரு, ஞானம்,ஞேயம் என்ற மூன்றும் பிரிவாய் இருத்தல் பேதமல்லவா?

விடை: கனவில் ஒருவன் தனியனாய்க் கண்ட காட்சியன்றி வேறு காட்சிகள் அங்கில்லை, ஆதலின் ஞாதுரு, ஞான, ஞேயம் என்ற மூன்றும் கற்பனையே அன்றி முடிவில் பேதமில்லை என்று அறிவாயாக.

49. வினா: கற்பனை என்னும் பொய்ப் பேதங்கள் எவ்வாறு தோன்றாமல் போகும்? தெளிவாக அதனை நான் உணர்ந்து கொள்ள கூறியருளும் என்று கேட்க.

விடை: துரியம் (வேகம்) என்று சொல்லப்படும் ஞான நிட்டையால் தூயமனம் பிரமாகார விருத்தியில் ஒடுங்க, நீங்குதற்கு அரிய இம் மூவகை வேறுபாடுகளும் இல்லாதொழியும் என்று அறிக என்றார்.

50. வினா: சிறப்பியல்பு பொருந்திய ஆன்மாவும், உலகமும் முழுவதுமாய் நிறைந்திருந்தும், எனக்குத் தோன்றாமல் இருப்பது ஏன்? கூறியருளுக?

விடை: சத்து, சித்து, ஆனந்தம் என்னும் பரம்பொருள் இலட்சணத்தோடு பெயர், வடிவமாகிய மாயா காரியமும் பொருந்தி இருப்பதால் உனக்குத் தோன்றவில்லை. மாயா உபாதி நீங்கின் தோற்றும் என்று பகவான் கூறினார்.

51. வினா: ஞானத்தால் ஆன்மாவை அறிந்துகொள் என்றீர் சச்சிதானந்தமாய் ஒளிவீசித் திகழுகின்ற ஆன்மாவும் காட்சிப் பொருளா? என்று அர்ஜுனன் கேட்க?

விடை: சிறப்புற்ற ஞானத்தாலே பல பிறவிகளில் தொடருகின்ற கடினமய அஞ்ஞானம் அழிந்தால் உனது மனதிலே ஆன்மா சுயமாகத் தோற்றும் என்றார்.

52. வினா: இனிமை பொருந்திய முக்தியானந்தம் இருக்கும் வகை எப்படி? என்று கேட்க?

விடை: தனது அனுபவத்தினால் அறியப்படுகின்ற விடய ஆனந்தத்தை அனுபவித்து அறிவதுபோல அனுபவ ஞானத்தால் ஆத்மானந்தத்தை உணர்ந்து கொள்வாயாக என்றார்.

53. வினா: மன அடக்கம் பெற்றவர்களன்றி முக்தி பெற்றோர் வேறு எவரும் இல்லையா என்று அர்ச்சுனன் கேட்க?

விடை: வியவகாரக நிலையில் பற்றற்று செயல்படுகின்ற சனகனைப் போல சீவன் முத்தர் உளர் என்றார்.

54. வினா: சீவன் முக்தி அடைந்தவர் செயலும், அவரது குணமும், அவர்தம் வாக்கும் எவ்வாறு இருக்கும் என்பதனை நான் அறியச் சொல்லும் என்று கேட்க?

விடை: கர்மவினைப் பயனால் வரக்கூடிய தாயின் கருவினின்று வருகின்ற பிறத்தல், இருத்தல், வளர்தல், உருமாறல், தேய்தல், அழிதல் ஆகிய இவ்வாறும் தூலதேகத்திற்கேயன்றி தமக்கு இல்லை என அதனை நீக்கி இருப்பர்.

மேலும் கண்ணினால் காண்டல் நிகழ்ச்சிகள், காதினால் கேட்டல் நிகழ்ச்சிகள், வாக்கினால் கூறும் நிகழ்ச்சிகள், பாதத்தினால் நடக்கும் நிகழ்ச்சிகள், கையினால் கொடுக்கல் வாங்கல் போன்றவையும் கூட ஞானேந்திரிய கர்மேந்திரியத்தின் தொழிலேயன்றி தம் தொழில் அல்ல என்று அதனை விட்டும் நீங்கி இருப்பர் முத்தர்கள் மேலும் பசி, தாகம் உயிருக்கு, பயம், துக்கம், சுகம், காமம் தீயதான கோபமும் மனதிற்கேயன்றி தமக்கில்லை என்று துணிவர் சீவன் முத்தர்.

மனை, மனைவி, சுற்றத்தார் போன்றவைகளில் சதா காலமும் பொருந்தியிருந்தாலும் தாமரையிலைத் தண்ணீர் போல பட்டும் படாமலும் இருப்பர் சீவன்முத்தர். கர்மத்தின் பலனாய்ப் பற்றிடும் தேகமும் தானும் பலகாலம் தொடர்ந்து வந்து, ஞானம் கைவரும் வரை ஐக்கியமாய் இருப்பினும் ஞானம் வந்த பின்னர் புளியும் அதன் ஓடும் போன்று இருப்பார்.

அசத்து, சட, துக்கமயத்துடன் கூடியிருந்தாலும் கூட மெய்ஞ்ஞானம் கைவரப் பெற்றவர்கள் சேற்றிலுள்ள

பிள்ளைப் பூச்சி சேற்றுடன் ஒட்டாததுபோன்று இவ்வுலகில் ஒட்டாமல் திரிவர் சீவன்முத்தர். வேறுபாடின்றி இருந்த தயிரினைக் கடைந்து எடுக்கப்பட்ட வெண்ணை மோரினிடத்தில், சேர்க்கப்படினும் அதனோடு கலவாது இருப்பதுபோல் ஞானம் வந்தபின்னர் ஞானிகள் அந்தக்கரண விவகாரத்தோடு காணும் மயக்கத்தை அடையமாட்டார்கள் என்றார்.

பொது: அர்ச்சுனன் பொருட்டு, அனைவரும் ஞானம் பெற உபதேசம் செய்ய குருவடிவாய் விளங்கி உபதேசம் செய்த புண்ணிய வடிவினரே கண் துயில்வீர். இடையர்குலப் பெண்டிரில் அளவற்றோரைப் புணர்ந்தும், தேவமகளிர் பதினாறாயிரம் பேரோடு பொருந்தியிருந்தும் கூடி மேலான ஞானிகள் முன்னிலையில் பரிட்சித்து மஹாராஜாவைக் கையால் தீண்டியும், பிரமச்சரியம் நடாத்திய பரிபூரண ஒளியே கண்துயில்வீர்.

முடிவு: மூலகாரணனாகிய பகவான் அர்ச்சுனனுக்கு முதன்மையான வேதத்தின் பொருளை, விருப்பம் கொண்டு கற்பவரும், கேட்பவரும், இவ்வுலகில் நீண்ட நாள் வாழ்ந்து ஞானிகளடைந்த முத்திபேறு அனைவரும் அடையக் கடவதாக.

கீதாசாரத் தாலாட்டு முற்றிற்று.

ஓம் தத் சத்

அத்தியாயம் மூன்று

# 3. சசிவன்னபோதம்

## சசிவன்னபோதம் அருளிய, தத்துவராயர் சரிதம்

பதினாறாம் நூற்றாண்டின் இறுதியில் தமிழ்நாட்டைச் சேர்ந்த "வீரமா நகர்" என்னுந் திருத்தலத்தில் ஸ்ரீ சொரூபா நந்தர், ஸ்ரீ தத்துவராயர் என்னும் இரு மஹநீயர்கள் வாழ்ந்து வந்தனர். இவருள் பின்னவர் முன்னவருடைய சகோதரியின் புதல்வர். இவ்விருவரும் வடமொழியிலும் தென்மொழியிலும் வல்லுநர்; சகல சாஸ்திர விற்பந்நர். எனினும் "இந்த அபரவித்தையாற் பெறும் பயன் எத்துணைதான் சிறப்பின தென்றாலும் , இது பரவித்தைபோற் பிறவிப் பேறளிக்க வல்லதன்று, "என்றும் நல்லறிவும் வாய்க்கப் பெற்றிருந்த மையால், இனியும் இம்மை நலந்தரும் இவ்வபர வித்தையிலேயே காலத்தை விரயம் செய்து பெறவரும் மனிதப் பிறவியை வீணாக்குவது விவேகமன்று என்றும் வைராக்கியம் மேலிட்டு, ஞான சற்குருவை நாடும் நன்முயற்சியில் ஈடுபடத்துணிந்தனர். இவ்வாறு துணிந்த இவ்விருவரும் இருப்பிடத்தை விட்டுப் புறப்படு முன் தம்மிடையே ஒரு ஏற்பாடு செய்து கொண்டனர். "நம்மில் எவருக்கு முதலில் குருதரிசன பாக்யம் கிட்டுகின்றதோ, அவர் மற்றவருக்குக் குருஸ்தானம் வகிக்க வேண்டும்" என்பதே அந்த ஏற்பாடு. அதன்படி சொரூபானந்தர் தென்திசையிலும், தத்துவராயர் வட திசையிலும் யாத்திரை தொடங்கினர். காவேரிக் கரையிலுள்ள "கோவர்த்தம்" என்னும் திவ்ய க்ஷேத்திரத்தையடைந்த சொரூபானந்தர் அதுவரையில் கண்டறியாத மனவமைதி தானாகவே வாய்க்கும் அதிசய

அனுபவத்தை யுணர்ந்து "இங்குள்ள யாரோ ஒரு மஹாத்மாவின் சாந்நித்ய விசேடமே இது என்னும் முடிவுடையவராய், அதைப்பற்றி ஆங்கிருந்த அறிஞர்களை விசாரித்ததில் அங்குள்ள நாணற்புதரின் மறைவில்" சிவப்பிரகாச சுவாமி என்னும் மஹான் சதா சமாதியில் மூழ்கியிருப்பார் என்றும், சில மாலை நேரங்களில் வெளிவருவதும் உண்டு" என்றும் கேள்விப்பட்டு, அக்கணமே சற்குருவின் சந்நிதியை யடைந்து ஸ்ரீ சிவப்பிரகாசர் நிட்டை கலையும் வரையில் காத்திருந்து பகிர்முகப் பட்டவுடன் முறைப்படி வணங்கித் தம்மை ஆட்கொள்ள வேண்டினர். இவ்வாறு குறுவனுக்கிரகம் பெற்ற சொரூபானந்தர், தத்துவராயரை எதிர்பார்த்து நின்றனர்.

வட திசைக்குச் சென்ற தத்துவராயருக்கு அதுவரையில் குருதரிசனம் கிடைக்காமையாலும், இனி கிடைக்குமென்ற நம்பிக்கையின்மையாலும் மீண்டும் தென்திசை நோக்கித் திரும்பி ஸ்ரீ சொரூபாநந்தரைக் காணும் பேறு பெற்றதுடன், அன்னாரால் அநுக்கிரகிக்கவும் பெற்றார். இங்ஙனம் அவ்விருவரும் குருசிஷ்யர்களாய் அமைதியுடன் காலங்கழிக்கையில் குரு ஓர் நாள் தைலமுழுக்கின் நிமித்தம் எண்ணெய் கொண்டு வரப் பணித்தார். அன்று அமாவாசை யாதலால், "பித்ருக்கள் தினத்தன்று எண்ணெய் ஸ்நாநம் கூடாது" என்னும் சாஸ்திர விதியை நினைவுகூர்ந்த சீடர்' "இன்று அமாவாசையாயிற்றே" என்றார். இதனைச் செவிமடுத்த சொரூபானந்தர்". இத்தகை விதிவிலக்கு களெல்லாம் சாதுக்களுக்கு ஏது? இவ்வளவு நாள் நமது சந்நிதியிலிருந்தும் சாத்திரக் கட்டுகளி னின்றே விடுபடாத நீ இனியும் இங்குறைவதால் பெறப்போகும் புருஷார்த்தம் என்ன?" என்னும் வினாக்களின் மூலம் தத்துவராயரின்

ஜென்ம சாபல்யத்தில தமக்குள்ள அவநம்பிக்கையை வெளியிட்டனர். குருவின் இரக்கக் குறிப்பைக் கேட்டுத் துணுக்குற்ற தத்துவராயர், தமக்கு இன்னும் வாசனாக்ஷயம் சித்திக்காததை யுணர்ந்து கழிவிரக்கமுற்றவராய்' மேலும் ஈண்டிருந்து சற்குருவின் புனித சாந்நித்யத்தை மாசுபடுதது வதிலும் இப்பாவக் கட்டையைக் கீழைக் கடலில் ஆழ்த்திவிடுவதே என்று எண்ணுந் துணிவுடையராகக் குருவுக்குப் புறங் காட்டக்கூடாதென பின்புறமாகவே நகர்ந்து சென்றனர். குருவைத் தியானித்துக் கொண்டே அங்ஙனம் செல்கையில், அன்னார் திருவாக்காக வெளிவந்த தத்துவ ரத்தினங்களையெல்லாம் உடன் சென்ற அன்பர்கள் குறிப்பெடுத்து அவற்றைச் சொரூபானந்தரின் திருமுன் சமர்ப்பித்தனர் சிவப்பிரகாச வெண்பா- தத்து வாமிர்தம் - திருத்தாலாட்டு - அஞ்ஞவதைப்பரணி - மோகவதைப்பரணி முதலிய 18 ஞான நூல்களாக இன்று போற்றப் பெறுபவையே அவை.

அவற்றைக் கண்ணுற்ற சொரூபானந்தர் அவற்றின் பொருட்செறிவை வியந்து இப்படிப்பட்ட கலைக்கடல் ஜலக்கடலில் கலத்தல் நன்றன்று எனத் திருவுளங்கூர்ந்து. தத்துவராயரைத் திரும்பிவரப் பணித்தார். அவர் வந்தவுடன் "இவ்வரிய கிரந்தங்கள் உனக்குப் பயன்படுவதுபோல் உலகுக்கு எளிதிற் பயன்படுவதன்று. ஆதலால் எல்லோரும் உணர்ந்துய்யுமாறு எளிய நூலொன்று செய்" என்று ஆக்ஞாபித்து உணவருந்தச் சென்றனர் குருவாணையைச் சிரமேற்கொண்ட தத்துவராயர் நமது குரு உண்டுவருமுன் "சசிவன்னபோதம்" என்னும் மோகவதைப் பரணியின் பகுதியையும் பாடி முடித்து குரு காணிக்கையாகச் சமர்ப்பித்துச் சொரூபானந்தரைப் பிரஸந்ந மூர்த்தியாக விளங்கச் செய்தனர்.

அவ்வூரிலுள்ள சில சாஸ்திரப் பண்டிதர்கள் தத்துவராயரை நோக்கி, "ஓராயிரம் யானைகளைத் தனியொருவனாக நின்று தகர்த்துக் கொல்லும் அசகாய வீரனன்றோ பரணி நூற்குரியவன்?

உமது குரு இதுகாறும் என்ன வீர சாகசம் புரிந்துள்ளார்? அவர்மீது பரணி பாடல் எங்ஙனம் பொருந்தும்?'' என்று வாதாடத் தொடங்கினர். உடனே தத்துவராயர்'' ஏககாலத்தில் அசுர மதங்கொண்ட ஆயிரம் அலங்கார யானைகளை அடக்க வல்லவர் எமது குரு. ஆதலால் நீங்கள் கூறும் சாதாரண வீரர்களுக் கெல்லாம் மேலானவரான அசாதாரண வீரர் சொரூபானந்தர்'' என்று சூளுரைத்தனர். அவ்வமயம் ஆங்கெழுந்தருளிய சொரூபானந்தர் அவன் குழமியிருந்த அனைவர்மீதும் கடைக்கண் வீசினார். அக்கணமே அனைவரும் மனமிறக்கப் பெற்றவராய் அவச நிலையிற் சமாதியில் மூழ்கினர். சமாதிகலைந்து வெளிப்பட்டவுடன் தமது தவற்றை மன்னித் தருளுமாறு சொரூபானனந்தரை வேண்டிக் கொண்டதுடன் பரணிபாடிய தத்துவராயரை அவர்கள் பாராட்டினர்.

இறுதிக் காலம் நெருங்குவதைக்கண்ட சொரூபானந்தர், எவ்வித சலனமுமின்றி கால்சென்றவழி காடு மலைகளைக் கடந்தும், நீர்நிலைகளில் ஊர்ந்தும், பிறர் கண்ணுக்குத் தெரியாது மறைந்தருளினர். தனிப்பட்ட தத்துவராயரும் உரிய காலத்தில் வீடு பெற்றனர்.

அத்வைத பரரான ஸ்ரீ சொரூபானந்தர் ஆஜாதசித்தாந்தர் என்பதை அவரருளிய

''என்னைத் தவிரமருந்திங்கேதுமில்லை என் ஆணை!
பொன்னைத் தவிரவிலாப் பூடணம்போல்-பொன்னைஉரு
வேராக்கிப்பேருரைத்த வேற்றுமைபோல், நம்மையும்அவ்
வாறாப் பகுத்துரைத்தோமால்.''

''தன்னிடத்திலே தோற்றித் தன்னிடத்திலேயிருந்து
தன்னிடத்தே கூடுஞ்சகத்தெல்லாம்-தன்னை விட
வேறன் றெனக்காண்பா ரல்லால் இவ்வீடுபெற்றார்
மாறென்று காண்பரோ? மற்று!.''

# ஸ்ரீ தத்துவராய சுவாமிகள் இயற்றிய சசிவன்ன போதம்

*பொழிப்புரை அண்ணாமலை அடிகளார்*

*1. சந்திரன், சூரியன், நெருப்பு, நீர், காற்று, ஆகாயம், மண், சீவான்மா என்னும் எட்டு மங்கள வடிவாயும் எல்லாவற்றிற்கும் தலைவனாயும் எல்லாவற்றிற்கும் உள்ளீடாய் உண்மையில் யாவும் தானாகாத ஞான சொரூப பரமாத்மாவை மனத்தில் தியானிப்போம்.*

*2. வேதம் வேதாங்கம், புராணம், இத்காசம், நல்லோர் நல் உரைகளாலும் தமது புத்திசாமர்த்தியத்தாலும், நமது மதமே பரிசுத்தமானது மற்ற மதங்கள் த்யது என்று கூறும் மக்கள் அனைவருக்கும் அந்தந்த மதத்திற்கேற்ற வடிவாய் இறைவன் இருக்கும் தன்மையைப் போல நாமும் இருப்போம் என நினைத்து மனதில் யாமும் தியானிப்போம்.*

*3. பேய்கள் தாகமோக முதலியவற்றால் துன்புற்று காளிதேவியிடம் பலவாறு முறையிட அவற்றுள் ஒரு பேய் தீபம் விளங்க ஒருபுருடன் வரக்கனவு கண்டேன் பயனைக் கூற வேண்டும் என, அதற்குத் தேவி, இறைவன் உன்னை ஆள அவ்வாறு வந்தான் என்று கூற மனமொழிக்கு எட்டாத, பிறப்பிறப்பற்ற இறைவன் எப்படி வடிவுகொண்டு வருவான் என்பது வேதத்திற்கு விரோதமல்லவா என்று கேட்க இறைவனே இந்நூலுக்கு முன் தொடர்ச்சி விஷயமாகும்.*

*அதற்குத் தேவியானவள், இறைவன் வடிவு நாமம் அற்றவனாயினும் பக்தர்கள் பொருட்டு உருவனாய் வருவான் என்றும், பக்தி வலையிற்படுவான் என்றும் கூற அதற்கு*

அப்பேய் இத்தகைய திருவருள். பாவியான எனக்குக் கிடைக்குமோ, என்று பதைப்புற தேவி இப்படிப்பதைத்த பேய்க்கு பயமகற்ற முத்தியைப் பெறும் உபாயம் கூறத் தொடங்கினாள்.

1. பேயே இறைவன் பிறப்பு இறப்பு அற்றவனாயினும் பக்தர்கள் பொருட்டு உருவனாய் வருவான் என்றும், பக்தி வலையிற்படுவான் என்றும் கூற அதற்கு அப்பேய் இத்தகைய திருவருள், ''பாவியான எனக்குக் கிடைக்குமோ? என்று பதைப்புற'' தேவி இப்படிப் பதைத்த பேய்க்கு பயமகற்ற முத்தியைப் பெறும் உபாயம் கூறத் தொடங்கினாள்.

2. மனம் வாக்கு காயங்களால் செய்யப்பட்டு உள்ளத்தே பொருந்தியுள்ள பாவங்கள் அனைத்தும் பரிபூரணபரப் பிரமத்தைத் தன் வடிவாய் உணர்ந்த ஞானியின் கருணை விழிபட்ட அக்கணமே நீங்கும், பார்வையால் பாவம் அனைத்தும் போக்கத் தக்க மகிமை என்ன உளது என்று பேய் கேட்க தேவி கூறல்.

3. பரிபூரணம் உணர்ந்த ஞானியானவன் கூறியபடி செய்யும் ஏவலாளர்கள் அடைவது எதுவெனின் சிறந்த வீடுபேறு ஆகும். எனின் அழகுநிறைந்த ஞானியின் புகழை எப்படி கூறமுடியும்? ஆயிரம் நாவுடைய ஆதிசேடனாலும் கூற முடியாது என, அதற்குப் பேய் ஞானியின் சேவையால் வீடு பெற்றோர் சரிதம் உளதோ? என்று கேட்க தேவியானவள் பூர்வம் ஞானிக்குப் பணிவுடை செய்து வீடுபேறுற்ற பெரியார் சரிதம் ஒன்றை நான் கூற நீ அதனைச் சிரத்தையுடன் கேட்பாயாக என்றாள்.

இவ்விதிகாசம் யாருக்கு யார் சொன்னது என்று பேய் கேட்க தேவி கூறல்

4. இவ்விதிகாசம் தனது தாபத்திரயங்கள் நீங்கிய ஞானியின் ஏவல் பணிவிடைகளைத் தவறாது இயற்றிய அச்சீடன் அடைந்த பயனை ஆதியில் செந்தாமரைக்

கண்ணனான திருமாலுக்கு எம் தலைவரான சிவபெருமான் கூறிய கதையாகும்.

இறைவன் திருமாலுக்கு யாருடைய சரித்திரத்தைக் கூறினான் என்று பேய் கேட்க தேவி கூறல்.

5. இது இவ்வுலகில் தவச்செயலே இல்லாத தீயகர்மத்தையே செய்த சசிவர்ணன் ஒப்புயர்வற்ற ஞானியின் கருணை விழிபட்டதால் அப்போதே பழைய சஞ்சித கர்மம் நீங்கி வீடுபேற்றை அடைந்த சரித்திரமாகும்.

6. சசிவர்ணன் சாமான்ய பாவம் உடையவனா எனப்பேய் கேட்க தேவி அதை நீக்குமுன் நரகத்தையடையும் பாவியரனைவரினும் இவன் மிகச் சிரேஷ்டன் நரகத்தை அடையும் வண்ணம் நடந்தான்.

இவன் பிதிர்க்கள் அடைந்த கதியைத் தேவி கூறல்.

7. மும்மலத்தால் அமைந்த தீய கர்மத்தின் வன்மையால் மகிழும் தேவ பதவியில் இருந்த இவன் வம்சத்தில் பொருந்திய பிதிரர்களும் மிகக் கொடியதான நரகத்தைத் தமக்கு இடமாகக்கொண்டனர்.

பிதிர்கள் கதியே இப்படி எனின் சசிவர்ணன் கதி என்ன எனப் பேய் கேட்க தேவி கூறல்.

8. மிகுதியாக அமைந்த தர்மாதர்மம் எனும் கர்மத்தின் பயன், பின் ஒரு சன்மத்தில் வந்து பொருந்தாமல் இச்சன்மத்திலேயே தொடரும் என்று சாத்திரம் கூறுவதால் ஆயுள் வேதத்தில் கூறிய நாலாயிரத்து நானூற்று நாற்பத்தெட்டு வியாதிகள் எல்லாம் இச்சசிவர்ணனைக் கொல்ல வந்து சூழ்ந்து கொண்டன.

மகன்துயர்கண்ட தந்தையின் துயரைக்கூறல்

9. சாத்திர விரோதமான குற்றம், அமைந்துள்ள இச்சசிவர்ணனைப் பெற்ற பிதாவான பாக எக்யன் தனது புத்திரவாஞ்சை விட்டு நீங்காமையால் மனவருத்தமுற்று புத்திரனது துன்ப நீக்கத்திற்கு உரிய உபாயம் மேல் என்னவாகும்

*என்று கலக்கமுற்றாள்.*

*பாகஎக்யன் யாது செய்தான் எனப் பேய் கேட்கத் தேவி கூறல்.*

*10. சசிவர்ணன் தானியற்றிய தீவினையின் பயனாகிய துன்பத்தை அனுபவித்து ஒழிக்க வேண்டுமேயன்றி மணிமந்திர அவுடதம் ஒன்றாலும் நீக்கும் உபாயம் உனக்கில்லையே என்று பெரியோர் கூறினும் அவ்வாறே தானும் உணர்ந்தவன் ஆகிய அப்பாக எக்கியன் புத்திரவாஞ்சை விட்டு நீங்காமையால் இவனைத் தலைமீது சுமந்து கொண்டு சர்வபுண்ணியத் தலங்கள்தோறும் திரிந்தனன்.*

*தந்தை பல தலங்களில் சஞ்சரித்தலின் பயன் யாது? எனப்பேய் கேட்க தேவி கூறல்.*

*11. ஒரு சிறந்த தவசிரேஷ்டமுனிவர் இச்சசிவர்ணன் தந்தை படும் துன்பத்தைக் கண்டு எங்கும் நிறைந்த அத்துவிதப் பிரமத்தை தன் அகத்தே தானாகக் கண்ட மேலான ஞானிகளின் கருணை விழியின் நோக்கமே இந்நோய்க்கு மேலான அமிர்தம் என்று பாகஎக்யனுக்குக் கூறியருளினார்.*

*முன் கூறியதையே விரித்துக் கூறல்:-*

*12. தேசத்தாலும் காலத்தாலும் வஸ்துவாலும் அந்தமின்றிய தனது யதார்த்த சொரூபத்தைக் காக்கும் பொருட்டு கோகுலாபுரம் எனும் தலத்தில் வாழும் மகாநந்தி பராயணர் என்னும் (பெயர் உடைய முனிவரே உமது புத்திரனைப் பொருந்திய வியாதிக்கு அமிழ்தமாவார் என்று கூற (அடுத்த கவியில் முடியும்)*

*மாதவர் மொழிகேட்ட பாகஎக்யன் செயல் யாது என்று பேய் கேட்க தேவி கூறல்.*

*13.14. இம்மாதவரது உரையே முடிபோன்ற உயர்ந்த உபதேசமாகும். என்றுணர்ந்து அப் பாகஎக்யன் சத்ச்சரம் எனும் தலத்திற்குச் சென்று ஈசானகங்கையில் குளித்து சத்தீசுரனை வணங்கி மகாநந்தபராயணரின் சந்நிதியை அடைந்து*

இக்கொடிய பாவியானவன் சிறிதும் அஞ்சாமல் செய்த துன்பத்தைத் தரும் கொடிய செயல்கள் சொல்லற்கரியவை, அன்றியும் இச்சசிவர்ணன் செய்த வினைகள் தேவரீர் சந்நிதானத்தில் சொல்லத்தக்கதல்ல என்று விண்ணப்பித்த அளவில் மகாநந்தி பராயணர் நோய்கட்கு காரணமான சகலதீவினைகளும் நீங்கும்படி அனுபவத்தில் விளங்கும் கடைக்கண் நோக்கத்தை வைத்தனர்.

15. அளவிடமுடியாத பிறவிநோய்க்கு விஷம் போன்ற தன் கருணை விழிபட்டவுடனே இவனைக் கொல்லச் சூழ்ந்த கொடியநோய் அனைத்தும் விட்டு நீங்கின. இதைக்கண்ட பாக எக்யன் தலைவன் திருவடிகள மனமொழிமெய்களால் சிரத்தையோடு வழிபட்டுக் கடைத்தேகறு என்று கூறி தனதிடம் சென்றான்.

சசிவன்னன் செய்த பணிவிடையைத் தேவி கூறல்.

16. இச்சசிவர்ணனும் மனமகிழ்ந்து தம்குருவால் ஏவப்பட்ட ஆத்தம், அங்கம், தானம், சற்பாவம் எனும் நால்வகைப் பணிவிடைகளைக் குறைவறச் செய்து சிலநாளிலேயே இச்சசிவன்னன் குருவின் திருமேனியைப் பாதுகாத்தற்கு உரிய சீடன் என உலகம் கொண்டாடும்படி ஆசிரியரான குருவோடு நிழல்போல் விட்டு நீங்காது இருந்தான்.

சசிவன்னன் ஆசிரியரிடம் தனது குறையைக் கூற அவரது அனுமதி பெற விரும்பல்.

17. சசிவன்னன் ஆசிரியர்க்கு மகிழ்ச்சி உண்டாகும்படி வழிபட்டு வந்ததால் எழுவகைப் பிறப்புக்களையும் நீக்க அத்வைதமுத்தியடைய எண்ணும் உத்தம அதிகாரியான சீடர்க்கு உள்ள விவேகம். வைராக்கியம், சமாதிசட்கசம்பத்தி முமுட்சத்துவம் ஆகிய நான்கு சாதனங்களும் அவனுக்கு உண்டாயின.

சசிவன்னன் ஆசிரியரிடம் தனது குறையைக்கூற அவரது அனுமதி பெற விரும்பல்.

18. தன்பால் உள்ள சில குறைகளை ஆசிரியர் முன்னே

சசிவன்னன் கூறும் பொருட்டு தலைமேல் குவித்தகையோடும் இரு கண்களிலும் தாரைதாரையாய் நீர்பெருக பலமுறை வலம் வந்து அவரது திருவடிகளில் விதிப்படி வணங்கினான்.

ஆசிரியர் உன் துயருக்குக் காரணமென்ன என்று கேட்க அதற்குச் சசிவன்னன் பிறவிக்கடலைக் கடப்பது எப்படி என வருந்தினேன் எனல்.

19. கருணையே வடிவாய் விளங்கும் சிறந்த மகானந்த பராயணமுனிவர் அனைத்தும் அறிந்திருந்தும் அறியாதவர்போல் சசிவன்னனே? நீ வருந்துவதற்குக் காரணமென்ன என்று கேட்கச், சசிவன்னன் குருதேவா, இக்கொடிய பிறவிக் கடலுக்குப் பயந்தேன் அதனை நீக்கும் உபாயத்தை அருளவேண்டும் என்று விண்ணப்பித்தான்.

ஆசிரியர் பிறவிக்கடலின் அகலத்தைக் கூறல்.

20. வீட்டையும் விருப்புடையோர் அஞ்சத்தக்க பிறவிக் கடலின் விரிவை முன்வேதம், ஆகமம், கீதை முதலியவை கூறியுள்ளன. அதன் விரிவை ஆசிரியரும் தனதன்பனான சீடனது மனதின் சக்தியளவில் அவன் ஏற்றுக் கொள்ளுமாறு சுருக்கி இவற்றைக் கூறுகின்றார்.

பிறவியைக் கடல் வடிவாக உருவகம் செய்தல்.

21. பிறப்பு இறப்பு ஆகிய நீரையுடையது, புத்தி எனும் சந்திரனை விழுங்குகிற ஆசை எனும் பாம்புகளையுடையது தத்தம் முறைதவறாது விஷமாகிய உணவைப் புசிக்கின்றதும், கூட்டம் கூட்டமாகச் சஞ்சரிப்பதுமாக பொறிகள் என்னும் மீன்கள் மிகவும் குதிக்கப் பெறுவது.

22. கர்வம் என்று கூறும் பெருமையுடையது. நோய்கள் எனும் நீங்காத புலால் நாற்றம் வீசப்பெறுவது இருவினையால் வரும் இன்பதுன்பங்களாகிய அலைகள் மோதுதலையுடையது. மனமெனும் வஞ்சனையுள்ள இராசமகரமச்சம் வசிக்கப்பெறுவது.

23. ஒரு வரையறை இல்லாத அகங்காரம் என்னும் ஆமைகள் அநேகம் இருக்கப் பெறுவது, இச்சை என்னும் மிகுந்த

ஆழத்தை அறியமுடியாத தன்மை உடையது. திருடுஎனும் நெருங்கிய பூமிகளையும் அலைகளையும் உடையது. கலகம் செய்பவர் எனும் விஷமுடைய புழுக்கள் நெளிறப் பெறுவது.

24. பஞ்சதீட்டு என்னும் நலமற்ற துறைகளைக் கொடுப்பது இன்பத்திற்கு ஏதுவான சந்நியாசம் எனும் கரையை அடையாதபடி செய்யும் பெண்கள் எனப்படும். கெடாததும். அகன்றதும், வலியதுமான சுழியை உடையது, என்னும் அஞ்சத்தக்க கோபம் எனும் வடவாமுகாக்னி எரிவது.

25. முத்திவிருப்பமுள்ளோர் அஞ்சத்தக்க இகபர விஷயமான போகம் எனும் முதலைகளையுடையது. நானாவிதமாயும் அநேகமாயும் உள்ள மார்க்கங்களை, எழுவகைப் பிறப்பென்று பெருமையை எடுத்துச் சொல்ல இவ்வுலகத்தின் கண் அறிஞர் யாவருளர் ஒருவருமில்லை.

புறச்சமயவாதிகள் தாண்டாராயினும் அகச்சமயத்தோர் தாண்டாரோ எனும் சீடனுக்கு ஆசிரியர் கூறல்.

26. ஐம்புலன் வழியாகப் பஞ்சவிஷயங்களில் சென்று மொத்துண்டு, திரும்புகின்ற அறியாமை என்னும் குற்றம் நிறைந்த புத்தியைக் கொண்டு, துவிதவாதம் செய்யும் அறுசமயவாதிகளும் இப்பிறவிக் கடலில் தலைகீழாக விழுவார்கள். அவத்தைக்கும் சாட்சிவடிவப் பிரத்யக் ஆத்மாவானது நாசமற்ற பிரம்மமாம் என்னும் சுவானுபவக் கப்பலில் ஏறுகின்ற ஞானிகள் பிறவிக் கடலைக் கடப்பார்கள்.

27. பிறவிப் பெருங்கடலைத் தாண்டிச் செல்ல ஆற்றலில்லை என்று ஆசிரியர் சொன்னவுடனே, சசிவன்னன் பலமதத்தவரும் தாண்டமுடியாத பிறவிக்கடலை நான் எப்படி தாண்டுவேன் என்று அழுது பிராணன் நீங்குமுன்னே பிரமஞானம் எனும் கப்பலில் ஏறிய மகான்கள் பிறவிக் கடலைத் தாண்டுவர் என்ற மொழியைக் கூறி குருவானவர் சசிவன்னனுக்கு மகிழ்ச்சி உண்டுபண்ண சசிவன்னன் பிறவித்துன்பம் நீங்க ஞானத்தை உபதேசிக்க வேண்டல்.

28.சசிவண்ணன் குருவின் திருவடி நீடுழி வாழி எனத் துதித்து வணங்கித்தொன்று தொட்டு தொடர்ந்து வரும் பிறவிப்

பெருங்கடலைக் கடக்க ஏதுவான ஞானத்தை அருளுக என வேண்ட குருநாதரும் கூறியருளினார்.

29. அரியகர்ம காண்டமயான வேதமுதலிய சர்வகலைகளும் அபரவித்தையாகும் சித்த சாந்தியை மிகுதியாகத் தரும் ஞானவித்தையே பரவித்தையாகும்.

30. வித்தையை பரவித்தை எனவும் அபரவித்தை எனவும் இருவகையாக சொரூப ஞானத்தை அறிந்த பெரியார் சந்தேகம் விபரீதமின்றிக் கூறுவார்.

பரஅபர வித்தையை-யுடையர் இவர் எனல்

31. நானாவித கர்ம காண்டமயமான வேதம் அங்கம் முதலியவற்றை அறிபவர்கள் அபரத்தை உணர்பவர் ஆவார். சிறந்த மன அக்கவடிவயோகத்தோடு மித்யாவடிவ பிரபஞ்ச விஷயத்தில் நித்திரையுற்றிருப்போரே பரத்தை உணர்ப ராவார்.

அபரவித்தையை நிந்தித்தல்

32. புராணம் இதிகாசம் இவையனைத்தையும் கற்று அவற்றின் பொருளை அறிவதும் சகல பொருள்களின் பிராணமயமான பரமாத்மாவை உணராதபோது பிதற்றலாய் முடியும்.

33. இயல் தமிழையறிவதும் இசைத்தமிழை அறிவதும் நாடகத்தமிழை அறிவதும் உள்ளனவாம், அவற்றின் ஞானம் அனாத்ம ஞானமாம், உண்மை ஞானமென்று ஆத்மாவை அறிவதே எதார்த்த ஞானமாம்.

34. சொல்லப்படும் அறுபத்துநாலு கலைகளையும் உணர்ந்தவரும் உற்பத்தி நாசமின்றிய பரிசுத்த பரமாத்வாவை அறியமாட்டார்.

35.அறுபத்துநாலு கலைகளாயுள்ள இவை அனைத்தையும் தேகாத்மபுத்தியை உடையவர் அறிவார். அத்துவிதஞானம் உடையவர் இவ்வனாத்ம கலைகளை உணரார்.

36. ஐந்தாகிய ஞானேந்திரிய சுபாவங்களை அறிந்து பஞ்ச விஷயங்களில் செல்லாதபடி அவற்றை அடக்கியவராயிருப்

பினும் உண்மையான ஆத்ம ஞானம் இல்லாதவர் வீடுபேற்றை அடையார்.

37. தம்மினும் வேறான அனான்மப்பொருளை அறியும் அறிவனைத்தும் உண்மை ஞானமல்ல. உள் உணர்வான தம்மையறியும் அறிவே உண்மை ஞானமாகும்.

38. ஆராதனையும் அவ்வாராதனைக்கு உரிய சகலபொருள் களும், பூஜை விதிகளைத் தெரிந்து பூஜகனான சீவனையும் பூச்சியனாகிய இறைவனையும் ஒன்றாக அறிவதே உண்மை ஞானமாகும் என்று மகாநந்தபராயணர் கூறினார்.

சசிவன்னன் வினா?

39. நான் என விவரிக்கும் துல உடலைத் தவிர இதற்கு வேறாக யான் எனக் கூறப்படும் ஆன்மப் பொருள் உண்டோ அப்படி இருந்தால் அதனைக் கூறியருள வேண்டும் என்று சசிவன்னன் கேட்டான்.

தேகம் ஆத்மா அன்று என குருநாதர் விடைகூறல்?

40. உலகில் புருடன் எனது ஆடை, எனது பொன், எனது பூமி, எனது மனைவி, எனது குதிரை, எனது யானை என அறிவது போல் தேகத்திற்கு வேறான தேகியானவன் எனது கண். எனது முகம்.எனது கால். எனது கை. எனது தேகம் என்று இந்த மாமிசம் பொருந்திய உடலை வேறுபிரித்து எப்போதும் தனதாகக் கூறுவான். எப்படித் தனதாகக் கூறப்பட்ட ஆடைமுதலிய பொருளைக் காட்டிலும் அவற்றை உடைய புருஷன் வேறோ அப்படி உடைமைப் பொருளாகக் கூறப்பட்ட கண் முதலிய அவயவமுடைய தேகத்தைக் காட்டிலும் அதனுடைய தேகிவேறே என்று நிச்சயம் செய்தல்.

41. பாதங்கள் ஊர்ந்து செல்லும் சக்கரமாகவும் முதுகிலுள்ள வீணாத்தண்டு அஞ்ஞரு ஆணியாகவும், வலிமையுள்ள மார்பானது தேர்த்தட்டாகவும், அன்றலர்ந்த மாலை யணிந்த சிரசானது மொட்டாகவும், கூந்தலானது கொடியாகவும் இருக்கின்ற இச்சரீர வடிவரதம் எப்போதும் செலுத்தும் புருடனைக் காட்டிலும் அந்நியமாக எண்ணுவாயாக.

42. ஒருபுருடன் மூங்கில் முதலானவைகளால் மதஜலத்தை உடைய யானையைப் போல் ஓர் உருவம் அமைத்து அதனுள்ளே புகுந்து நின்று துதிக்கை, கால்கள் காதுகள் ஆகியவற்றை உண்மையான யானையின் இயக்கம் போல இயக்குவான். இயக்காவிடின் சட்டையற்றுக் கிடக்கும்.

43. உண்டு சீரணித்த உணவானது ஜாடராக்கினியினால் மூன்று பகுதியாம் அவற்றுள் ஒரு பகுதி மலமாகும். ஒரு பகுதி உடலாகும். ஒரு பகுதி மனமாகும். அவற்றுள் மலம் மனம் எனும் இரு பகுதி நீயானால் வேதம் பெரியோர்களால் நிந்திக்கும் மலம் கசியும் தூல உடலாகிய ஒரு பகுதியும் நீயாவாய்.

44. மிகுந்த ஆசையோடு உண்ணும் உணவானது சுடும்படி கையானது அதனைப் பொறுக்காமல் இருந்து கோபித்தவர் யார்? கைகால் முதலிய உறுப்புகள் ஒன்றும் குறைவுபடாமல் பிராணன் நீங்க அக்கணமே நெருப்பாகிய படுக்கையின்மீது பொறுத்துக் கொண்டு துயின்றவர் எவர்?

45. உடலின் நிழல்வடிவ சாயையும் கண்ணாடியில் தோன்றும் பிரதி பிம்பமும் கை கால்களை நீட்டும் முடக்கும் அத்தொழில் எல்லாம் அதிட்டானமும், பிம்பமுமாகிய இப் புருடன் செய்யும் தொழிலாகும். அதுபோல இவ்வுடல் செய்கின்ற தொழில் எல்லாம் சுயம்பிரகாச சேதன வடிவ ஆன்மா செய்யும் தொழிலாகும்.

46. அறியப்படும் குடம்படம் முதலிய பொருள்யாவும் எப்போதும் அறிபவனைக் காட்டிலும் வேறேயானால் இவ்வுடலை நான் எனக் கூறலாமா! கூறத்தகாது மற்றும் நெருங்கிய கூண்டுப் பறவையல்லவே இவ்வாறு அறிவற்ற தேகமானது அறிவான உன்னைக் காட்டிலும் வேறேயாகும் என்று தெளிவடைவாயாக.

47. இத்தூல உடலில் கடினமான எலும்பு மாமிசம், நரம்பு தோல், மயிர் என்னும் இவ்வைந்தும் மண்ணின் கூறு ஆகும். நெகிழ்ச்சியுடைய வீரியம், உதிரம், வாய்நீர், மூத்திரம், வியர்வை எனும் இவ்வைந்தும் நீரின் கூறும். உஷ்ணமுடைய பசி, தாகம், சோம்பல், நித்திரை, காந்தி (ஒளி) அல்லது மைதுனம் இவ்வைந்தும் தீயின் கூறாம். சலன வடிவான நடத்தல்

இருத்தல், ஓடல், விரிதல், சுருங்குதல் எனும் இவ்வைந்தும் காற்றின் கூறாம். சிரம், கண்டம், இதயம், வயிறு இடை எனும் உள் துறைகளான இவ்வைந்தும் ஆகாயத்தின் கூறாம் ஆதலால் இவ்வுடல் சடமான ஐம்பூத சொரூபமேயாகும்.

ஞானேந்திரியம் ஆன்மா அன்று எனில்,

48. அக்னி-புசிக்கும் பொருள்களுள் உயிர்களால் உண்ணப்படுபவை ஜாடராக்னியால் மூன்று பகுதிகளாகும். அவற்றில் முதல் பகுதி அடுக்காக உள்ள எலும்பாகும். நடுப்பகுதி எலும்பிலுள்ள கொழுப்பாகும், அழகுவாய்ந்த கடைப்பகுதி வாக்கு இந்திரியமாய்த் தோன்றும் என்று அனாதியான உபநிடதங்கள் கூறுகின்றன. வாக்கு இந்திரியம் ஆன்மா அன்று என்றதால் அதன் பிரிவான கை, கால், உபத்தம் பாதமும் ஆன்மா அன்று என்பதை உணர்த்தினார்.

பிராணன் ஆன்மா அன்று என்ல்

49. நாள்தோறும் உயிர்கள் உண்ணும் ஜலம் ஜாடாரக்னியால் மூன்று பகுதிகளாகும். அவற்றுள் முதல் பகுதி மூத்திரமாம், நடுப்பகுதி இரத்தமாம் கடைப்பகுதி பிராண வாயுவாம். மூன்றாகக் கணக்கிடும் இவற்றில் இரு கூறாயுள்ள மூத்திரமும், ரத்தமும் நீயானால் அல்லவா. நாசமாகும் பிராணவாயுவான அதுவும் நீயாவாய் நன்கு ஆராய்ந்து கூறு.

50. சுழுத்தி அவத்தையில் உணரும் தன்மை இல்லாமையாலும் பிராணவாயு எனும் சப்தார்த்த மன்று சுழுத்தியில் அவ் உணர்வு இல்லாமை ஞானந்திரியங்களின் நீக்கத்தாலாம். அவை இருந்தால் பிராணன் உணரும் ஆதலின் பிராணவாயுவே ஆத்மா எனின் அரசன் பவனி வரும்போது அரசனை நால்வகைச் சேனையும் விட்டு நீங்கா அதுபோல பிராணன் ஆத்மாவானால் இதனைவிட்டு ஞானேந்திரியங்கள் நீங்காது இருக்க வேண்டும் அவ்வாறில்லாததால் பிராணன் ஆத்மா வன்று.

51. பிராணன் ஆத்மா அன்றாயின் உறக்கத்தில் செவிமுதலிய சர்வ கருவிகளும் அடங்க உசுவாச நிசுவாசத்தால்

பிராணவாயுவின் தோற்றம் எதனால் என்றால் அது உறக்கத்தில் உனக்குக் காவலாகும். இன்றேல் அவ்வுடலே மரணம் அடைந்துவிட்டதென்று சுற்றத்தார் தகனம் செய்வதற்கு முன்பே வளைந்த வாலையுடைய நாய் உட்கொள்ளும்.

மனம் புத்திகள் ஆன்மா அன்றெனல்,

52. கூட்டமாகவும் உறவாகவும் உள்ள நான்காக எண்ணப்பட்ட அந்தக்கரணங்களுள் இம்மனமும் ஒன்றென்பதாலும் இம்மனம் எனது என்று சொல்லப்படுவதாலும், இம்மனம் முன்பு (43-ல்) அன்னத்தின் காரியம் எனக் கூறப்பட்டதாலும், இம்மனமும் ஆத்மாவன்று. இதுபோல சூக்கும புத்தியும் ஆத்மாவன்று.

அகங்காரம் ஆத்மா அன்று எனல்,

53. இன்பதுன்பமுடையதாய் நிலையற்றதாய் சகடமாய், நானென்று எண்ணப்படுகின்ற அந்தக் கரணங்களில் ஒன்றாய் நெருங்கிய பிறப்புக்கு ஏதுவாய் யாவராலும் அறியப்படும் அகங்காரத்துவமும் நீயல்ல.

சித்தம் ஆத்மா அன்றெனல்

54. சந்தேகத்திற்கு விஷயமான ஒரு பொருளையும், உறுதியாய் அறிவதற்கு விஷயமான ஒரு பொருளையும் யான் எனது என அபிமானத்திற்கு விஷயமான ஒரு பொருளையும் சிந்திப்பது சித்தமாம் ஆதலால் அச்சித்தம் ஆன்மா அன்றென்று நீ தெளிவாயாக.

55. தூல உடல் முதலாகச் சித்தம் ஈறாகக் கூறிய தத்துவக் கூட்டங்கள் உன்னால் அறியப்படும் பொருளாய் விளங்குவதால் அவை உனது உண்மை வடிவம் அல்ல என்று மகாநந்திபராயனர் கூறினார்.

சசி வன்னன் சங்கை

56. உன்னால் அறியப்படும் பொருள் அனைத்தும் உனது உண்மை வடிவம் அல்ல என்று தாங்கள் கூறினீர் அது எனக்கு சம்மதம் ஆனால் என்னால் அறியப்படாது நீங்கியுள்ள பொருள் அறியப்படாத வஸ்துவோ?

அறியப்படும் பொருளும் அறியப்படாப் பொருளும் ஆத்மா அன்று எனல்

57. இதுவென்று சுட்டியறியப்படாத பொருள் உலக காரணமான மாயையாகும் இதுவென்று சுட்டியறியப்படும் பொருள் மாயையின் காரியமான உலகமாகும் காரணமான மாயையும் காரியமான உலகமும் அறியாப்பொருளாகவும், அறியும் பொருளாகவும் இருக்கும், இம் முறைமையால் விளங்கும், நான்கு வேதங்களின் முடிவான உபநிடதம் அனைத்தும் அவை ஆத்மாவாகிய நீயல்ல என்று இடைவிடாமல் கூறுகின்றது.

வேதத்தின் உண்மை கருத்தைக் கூறல்

58. ஆதலால் அறிபடும் பொருள் எப்படி நீயன்றோ அப்படி அறிபடாப் பொருளும் நீயல்ல பின் நான் எத்தகையேன் என்றால் சேதனமான ஆத்மவஸ்துவே ஆத்மாவாகிய நீ என்று வேதங்கள் கூறும், அப்படியானால் எனக்கு ஏன் விளங்கவில்லை என்றால் அவ்வாத்ம வஸ்துவானது இந்திரிய வழிநின்று அறியும் பொருளா? அன்று மற்றெப்படியறிவது எனின் ஞானக் கண்ணைத் திறந்து அறியத்தக்கபொருளாகும்.

தத்துவமசிமகாவாக்கியத்தின் முப்பதப் பொருளைக் கூறல்.

59. அம்மகாவாக்யத்திலுள்ள ''தத்'' எனும் சொல்லின் பொருள் நிர்மலமாயுள்ள மற்றறிவு முதலிய குணமுடைய ஈசனாகும், அவ்வாக்கியத்தில் ''துவம்'' எனும் சொல்லின் பொருள் மலசகிதமான சிற்றறிவாதி குணமுடைய சீவான்மாவாகும். அவ்வாக்கியத்தின் ''அசி'' என்னும் சொல்லின் பொருள். நிர்மலமான இவ்விருபொருள்களின் ஏகத்துவமாம் (ஐக்யமாம்) என்றார்.

விருத்ததர்மமுடைய இரண்டுக்கும் ஏகத்தும் எவ்வாறு கூடும் என சங்கித்தல்

60.அறிதற்கரிய பிரமன் எதிரில் இல்லாதது (பரோட்சம்) ஆகும். தேகாதிகளில் அபேதமாயுள்ள சீவன் எதிரில் உள்ளது

(அபரோட்சம்) ஆகும். இவ்வாறு முரண்பாடுகள் இவ்விரண்டின் ஏகத்துவம் (ஐக்யம்) எப்படிப் பொருந்தும் என்று கேட்க,

சீவேசுவரபேதம் உபாதியாலானது உண்மையன்று எனல்

61. சீவேசுவரபேதம் உபாதியாலான பேதமேயாகும், சொருபத்தாலானதன்று. சீவனுக்குக் கூபமுதலிய குற்றங்களுடைய உடலாதி உபாதி இருப்பதுபோல ஈசனுக்கும் சர்வகாரணத்துவ முதலான உபாதிகள் உண்டு.

ஈசுவர உபாதிகளைக் கூறல்

62. சர்வேஸ்வரத்துவம் சர்வஞ்ஞத்துவம், சர்வ வியாபகத்துவம், சர்வ காரணத்துவம் சர்வ சிருஷ்ட்டித்துவம், சர்வ ஸ்தித்துவம், சர்வா சம்மாரத்துவம் ஆகிய இவைகளே ஈஸ்வரனது எழுவகையான உபாதிகளாம்.

உபாதிகளை நீக்க மகாவாக்கியமான தத்துவப் பதங்கட்கு சுத்தம் அசுத்தம் எனும் இருவகைப் பொருள்களைக் கூறல்

63. நூல் முறைப்படி அவ்விருவகை உபாதிகளையும் நீக்கத் துவம்பதத்திற்கும் முதலாவதான தத்பதத்திற்கும் அசுத்தம் சுத்தம் என்றும் இருவகைப் பொருளையும் கூறுகின்றார்.

துவம்பத சுத்த அசுத்த அர்த்தம் கூறல்

64. நான் என்பதற்கு விஷயமான உடல் முதல் சித்தம் முடிவாக விளங்கும் ஏழுஉபாதிகளும் இவற்றையறியும் சேதனமும் சேர்ந்து துவம்பதத்தின் அசுத்தார்த்தமாம். நான் என்பதற்கு விஷயமான துன்பமற்ற சாட்சியே துவம்பதத்தின் சுத்தார்த்தமாகும்.

தத்பதத்தின் சுத்த அசுத்த பொருள் கூறல்

65. நான் என்பதற்கு விஷயமான சர்வகாரணத்துவ முதலான ஏழு உபாதிகளும் அவற்றின் அதிஷ்டான சேதனமும் சேர்ந்த தத்பதத்தின் அசுத்தார்த்தமாம், நான் என்பதற்கு விஷயமான இவ்வேழு உபாதிகட்குச் சாட்சியான பிரமமே தத்பதத்தின் சுத்தார்த்தமாகும்.

சுத்தசேதனத்தின் ஏகத்துவமே அசிபதப்பொருளாம் எனல்.

66. நெருங்கிய காரண காரியம் எனும் இருவகை உபாதிகளும் விசாரணையால் அவ்வுபாதிகட்கு அதீதமான சைதன்யவடிவ கூடத்த பிரமங்களாய் அறிந்ததாலாகிய அப்பேதவாசனையும் நீங்கியதே அவ்"அசி" எனும் பதத்தின் அர்த்தமாகும்.

பிற ஆசிரியர் முக்கியம் லட்சியம் என்று கூறியிருக்க தாங்கள் சுத்தம்அசுத்தம் எனக் கூறுவது விரோதமல்லவா என்ற வினைவைநீக்கல்

"துவம் " "தத்" எனும் இருபதத்தினுக்கும் நாம் கூறிய அசுத்தார்த்த மாகிய இதுவே பிறர் கூறும் முக்கியப் பொருளாகும். அவ்விரு பதத்திற்கும் நம்மால் கூறப்பட்ட சுத்தார்த்தமாகிய இதனையே இலட்சியார்த்தம் என்று குற்றமற்ற பெரியோர் கூறுவார் எனல்.

முக்கியம் இலட்சியம் எனும் இருவகைப் பொருளைக் கூறல்

68. உபாதிகளால் முரண்பாடுள்ள சீவப்பிரமங்கள் முக்கியார்த்தமாகும், சீவபிரமங்களிடத்து அபேதமாகிய சித்சொரூபமே இலட்யார்த்தமாகும்.

ஏசுத்துவம் பொருந்தும் விதத்தைக் கூறல்.

69. உயர்வு தாழ்வாகப் பொருந்திய சிவேஸ்வர உபாதிகள் இரண்டையும் இலட்சணா வாக்குப்படி நீக்கினால் எஞ்சிய சேதன வடிவமேலான வஸ்து ஏகவடிவமாகும்.

இலக்கணையின் வகையைக் கூறல்

70. அறிவுடைய பண்டிதர்கள் சுருதியாதி வாக்கியங்களை ஆராயின் அர்த்த மிகாமல் ஒன்றற்கொன்று விரோதமானால் அவ்விரோதத்தை நீக்கத் தெளிவான இலக்கணையை விட் டது, விடாதது, விட்டுவிடாதது என மூவகையாகக் கூறுவர் அம்மூவகை இலக்கணைக்கும் உதாரணங்களைக் கூறுவோம்.

விட்ட இலக்கணையின் உதாரணம் கூறல்

71.விட்ட இலக்கணையைக் கூறல், கட்டில் கூப்பிடுகிறது என்பதும் வடக்கே உள்ள பெரிய கங்கையினிடத்து பெரிய

இடைச்சேரி உள்ளது என்பது விட்டலக்கணை என்பதன் உதாரணமாகும்.

விடா இலக்கணையின் உதாரணம் கூறல்.

72. சிவப்பு நின்றது. வெள்ளை போயிற்று என்று கூறுதல் போலவும் இருப்பது யாதொரு துன்பமும் இன்றி விடாத இலக்கணையின் உதாரணமென்று உனது மனத்தின்கண் உறுதி செய்துக் கொள்வாயாக.

விட்டுவிடாத இலக்கணைக்கு உதாரணம் கூறல்.

73. மூன்றுவதான விட்டுவிடாத இலக்கணையின் சொரூபம் யாதென்றால் அது அவனே இந்த தேவதத்தன் எனும் வாக்கியத்தைப் போலாகும் என இதனை உறுதியாக மவுனம். செய்வாயாக.

மகாவாக்கியத்தில் விட்டு விடாத இலக்கணையே உபயோகம் எனல்.

74. மகாவாக்கியத்தில் உபயோகப் படாமையால் விட்ட இலக்கணையையும் விட்டு, அவ்வாறே விடாத இலக்கணை யையும் விட்டு, மகாவாக்கியத்திற்கு உபயோகமான விட்டு விடாத இலக்கணையால் உன்சொரூபம் விளங்கும்படி நீ விசாரம் செய்க.

விட்டுவிடாத இலக்கணையும் அகண்டார்த்தத்தை விளக்கல்.

75. அவனே இத்தேவதத்தன் எனும் வாக்கியத்தில் அவன் இவன் என்னும் பதங்களில் விரோதமான இறந்த காலம், நிகழ்காலம், தூரதேசம் சமீபதேசம், எனும் விசேடணத்தை விட்டு விரோதமில்லாத ஒரேபுருடனை அவ்வாக்கிய அர்த்தமாகக் கொள்வது போல "தத்துவம்" எனும் பதங்களின் விரோத பாகமான காரண காரிய உபாதிகளை நீக்க அவ்வுபாதிகளின் உள்ளீடான விரோதமற்ற சொரூபத்தைக் காண விசாரம் செய்.

மீண்டும் தெளிவு பெறக்கூறல்

76. சீவனைவிட்டு நீங்காதிருக்கின்ற காரிய சப்த உபாதியும் ஈசனது காரணசப்த உபாதியும் இவ்விரண்டிற்கும் சாட்சியான

தடத்த பிரமங்களை சீவேஸ்வரரது உண்மை சொரூபமாக உணர்ந்ததாலான அந்த பேதவாசனையும் நீங்க நாம் உணர்த்தியபடியே அபரோட்சமாக (பிரதியட்சமாக) தெரிந்துகொள்வாய்.

நனவாதி அவத்தையில் காணமுடியாதெனல்.

77. அக, புறக்கரணமுமான தத்துவக் கூட்டங்கள் செயல்படும் போதும் அவ்வகண்டார்த்தத்தைக் காணமுடியாது, அத்தத்துவக் கூட்டங்கள் யாதொரு செயலுமின்றி ஒடுங்கிய போதம் அவ்வகண்டார்த்தத்தைக் காணும் மார்கம் இல்லை என்பதை நீ தெரிந்து கொள்வாய்.

விழிப்பு (சாக்கிர) முதலிய அவத்தைகளைக் கூறல்

78. அகப்புறமுள்ள சகல கரணங்களும் பொருந்தி விவகாரம் செய்யும் அவத்தை (நனவு) விழிப்பவத்தையாகும், இச்சாக்ராவத்தையின் வாசனையால் தோன்றிய மனைவி முதலிய விஷயங்களோடு மனமுதலிய அகக் கரணங்கள் மாத்திரம் கூடி வ்வகர்க்கும் அவத்தை நனவாகும்., அகக்கரணமும் புறக்கரணமும் அவித்தையில் ஒடுங்கிய அவத்தை சுமுத்தியவத்தையாம்.

பிரமத்தைக் காணும் அவத்தையைக் கூறல்.

79. மேல் கூறிய சாக்கிரம் முதலான மூன்று அவத்தைகளும் ஆத்மதரிசனத்திற்கு உரியன. அன்றாயின் அவ்வாத் மதரிசனத்திற்கு உரிய அவத்தை எது என்று கேட்பாயானால் அகக்கரண புறக்கரணவியாபாரங்கள் நீங்கிய சாக்கிர அவத்தையிலேயே சுழுத்தி நிலைவரின் அவ்வாத்ம தரிசனமும் நன்கு விளங்கும். ஆதலால் இந்நனவில் சுழுத்தியே பிரம தரிசனத்திற்கு உரிய அவத்தையாகும்.இப்படியேஅவ்வீசனது சிருட்டி முதலான மூன்று அவத்தைகளை உதாசீனமாக அறியப்படும் அத்துரியம் என்னும் பிரம சொரூபமே ஈசனது உண்மை வடிவமாகும்.

80. சீவனதுசாக்கிர முதலான மூன்று அவத்தைகளை உதாசீனமாக அறிதலைப் பொருந்திய அத்துரியமெனும் பிரத்யக்

*ஆத்மவடிவமே சீவனது உண்மைவடிவமாகும்.*

*81. மூன்று அவத்தையின் சாட்சிவடிவ பிரத்யக் ஆத்மாவானது சகல சாட்சியான ஈஸ்வரத்துரியரூபமாக இருத்தலே சாமவேதத்திலுள்ள சாந்தோக்ய உபநிடதத்தில் ஆறாவது அத்தியாயத்தில் சுவேதகேதுவிற்கு உத்தாலகமுனிவர் அருளிய தத்துவமசி எனும் மூன்று சொற்களின் முடிந்த பொருளாகும்.*

*இந்நிலை அடையும் வலிமையின்மையை சசிவன்னன் கூறல்*

*82. கருணைக் கடலான ஆசிரியர் வேதவாக்கிய விசாரவாயிலாக நின்மலமான பிரமதரிசனம் பெற உபதேசிக்கச் சசிவன்னன் பிரத்யக் ஆத்மபரப்பிரமத்தை என் போன்ற மந்த அதிகாரிகளால் அடைதல் மிக அரியதாம் என்று கூறி அவரது திருவடியில் வீழ்ந்து வணங்கினான்.*

*பிரதிபந்த நீக்கத்திற்கு தீட்சை செய்து அனுபவம் கூறல்*

*83. சப்தவடிவமான வேதசாத்திரங்களுக்கும் அளவிட்டு அறிதற்குஅரிய தத்பதார்த்த மான பிரமத்தை உள்ளங்கை நெல்லிக்கனிபோல நேராக அளிக்கும் பொருட்டு தேவர்களுக்கும் அளவிட்டுக் கூறற்கரிய தனது நல்ல திருவடிதீர்த்தத்தால் சீடனாகிய சசிவன்னனுக்கு அபிடேகம் செய்து,*

*84. உடலாதிகாரிய சப்த உபாதிகளான பகைகள் தலைசாய்ந்து ஓடும்படி பெருமை மிக்க வெண்மையான விபூதியை வச்சிரகவசம் போலத்தரித்து இனிய அன்பினால் பவளம் போன்ற தன் வாயில் வைத்திருவமுது செய்த அமுதம் போன்ற தன் எச்சில் உணவைக் கொடுத்தருளி,*

*85. ஜலபூர்வமாய் உடல் பொருள் ஆவி என்னும் மூன்றையும் தான் பெற்றுக் கொண்டு ஒரு கண நேரத்திலேயே அஞ்ஞானசப்த பூமியினின்றும் நீங்கி ஞானபூமியின் அனுபவத்தைப் பெறும்படி தலையின்மேல் இருகரங்களுடன் இரண்டு திருவடிகளையும் வைத்து (திருவடி தீட்சை தந்து).*

*86. விடநோக்கு நீங்குதற்கும் உபநிடதங்களின் உண்மைப் பொருளான பிரமாபின்ன பிரத்யக் ஆன்மசொரூபம்*

விளங்குதற்கும் காரணமான ஞானக்கண்ணைத் தந்து சசிவன்னனே தத்துவ்ம மகாவாக்கியத்திலுள்ள தத், துவம், அசி, என்னும் மூன்று பதங்களின் பொருளையும் நாம் உபதேசித்த படியே நீயும் அனுபவித்த வண்ணம் விளக்கமாகக் கூறு என்று கட்டளையிட,

சீடன் தன் அனுபவம் கூறல்

87. சீவ சாக்கிரம் முதலாக சிவதுரியம் முடிவாக ஆசிரியர் கூறியபடியேதான் அடைந்த மனாதிகரணக் கூட்டமற்ற பிரமானுபவத்தை சசிவன்னன் கூறுவான்.

சீவசாக்கிரம்

88. வெளியே பூரணமாயுள்ள கரணங்களும், மனாதி அந்தக் கரணங்களும் ஆகிய அனைத்தும் விஷயங்களோடு பொருந்தி தம் விவகாரங்களைச் செய்யும் அவத்தையும் ச்வசாக்கிரம் என்று நான் அறிந்தேன்.

ச்வ சொப்பனம்

89. வெளியே உள்ள சகல கரணங்களும் ஒடுங்கி மன முதலிய அந்தக்கரணம் அனைத்தும் சாக்கிரவாசனையால் கற்பிக்கப்பட்ட நிலையில்லாத விஷயங்களோடு பொருந்தித் தம்தம் விகாரங்களைச் செய்யும் அவத்தையைச் சீவசொப்பனம் என்று நான் அறிந்தேன்.

சீவசுமுத்தி

90. மரணம் போன்ற காலம் இவ் அவத்தையாகும் என்று அனைவரும் கூறும்படி மனம் முதலான கரணங்களும் அவத்தையில் ஒடுங்கிய சீவ சுமுத்தியையும் நான் அறிந்தேன்.

சீவ(துரியம்)வேகம்

91. குறைவின்றி அகக்கரணம் புறக்கரணம் ஆகிய எல்லாக் கரண அச்சுமுத்தி அவத்தையை அவ்வித்தையில் அறிந்துக் கொண்டுள்ள சேதனரூபப் பிரத்யக்காத்மாவை உணர்வதான சீவதுரியத்தையும் நான் அறிந்தேன்.

ஈசுவரசாக்கிரம் (வேகத்தையும்)

92. சீவதுரியத்தில் விளங்கிய பிரதியக் ஆத்மாவானது யாதொரு சலனமுமின்றி சர்வபிர பஞ்சத்திற்கும் சாட்சி ரூபமாக உள்ளதை உணர்ந்த அவத்தையை ஈசுவர சாக்கிரம் என்று நான் அறிந்தேன்.

93. பொருந்திய இச்சர்வ பிரபஞ்சத்திற்கும் சாட்சிவடிவப் பிரமமாய் நான் இருக்கிறேன் எனும் பாவனை விட்டுச் சாட்சி சேதனமான தன்னையே அறிந்து நின்ற அவத்தையை ஈஸ்வர சொப்பனம் என்று சொல்லும்படி நான் உணர்ந்தேன்.

ஈஸ்வரசுமுத்தி

94. சாட்சிவடிவ சகல பிரபஞ்சத்திற்கும் சாட்சி வடிவபிரமம் நான் எனும் ஈஸ்வர சாக்கிரம், கெட, சாட்சி, வடிவபிரமமாக நான் இருக்கிறேன் என்று இருந்த ஈஸ்வர சொப்பனமும் தோன்றாத அவத்தையை ஈஸ்வரசுமுத்தி என்று நான் நிச்சியித்தேன்.

ஈஸ்வரதுரியம்

95.ஈஸ்வர சாக்கிரம் நசித்தது என்று அறிந்து சொல்லத்தக்க ஈஸ்வர சொப்பனமும் நீங்கிய ஈஸ்வரசுமுத்தி அவத்தையில் அச்சுமுத்தியை விளக்குவதான சேதனத்தை உணரும் அவத்தை எதுவோ அதனை ஈஸ்வர (துரியமாய்) வேகமாய்த் தெளிந்தேன்.

சீவசாக்கிரம்

96. நாயினும் கடைய என்னைத் தடுத்தாட்கொண்ட திருவே ஈஸ்வரதுரியத்தையே வேதத்தின் முடிவான நல்ல "அசி பதத்தின் பொருளான சீவசாக்கிரமென நான் நிச்சயித்தேன்."

சீவசொப்பனம்

97. முன் இருந்த உலக வாசனையின் குற்றம் நீங்க காணப்பட சகலதிரிசியங்களையும் திருக்கு வடிவமாக அறிந்த சீவசொப்பனத்தையும் நான் பார்த்தேன்.

சீவ சுமுத்தி

98. காணும் பொருளனைத்தும் திருக்கு வடிவமாய் அறிய அத்திருக்கு ரூப உணர்வும் நசித்த மாண்புடைய வாக்கு

மனத்திற்கு எட்டாத நிலைமையைசீவ சுமுத்தி என நான் நிச்சியித்தேன்.

சீவ(துரியம்) வேகம்

99. அருந்தவமுடையவரே! வேதத்தின் முடிவான வாக்குமனத்திற்கு எட்டாத சீவதுரிய நிலையில் நீர் இருந்த நிலையையும் எனக்கு அறிவித்த விதத்தையும் எவ்வாறு கூறுவேன்.

யாவும் நீயே ஆதலால் உனது நிலையைக்கூற அறியேன் எனல்

100. திருக்கூட்டத்தலைவரும் எனது இறைவருமான தேவரீர் சீவசாக்கிரம் முதலாக துரியம் ஈறாக உள்ள அவத்தைகள் தோறும் அவ்வவ் அவத்தைக் கேற்ற பொருள் வடிவாய் நடம் செய்யும் விதத்தையும் கூறும் விதத்தை நான் அறியேன்.

கைம்மாறு காணேன் எனல்

101. என் ஆத்மசொரூபமானவரே! தாங்கள் முத்தியை அளித்த பேருபகாரத்திற்கு அடியேன் செய்யும் பிரதி உபகாரம் தங்கட்கு என்ன என்றால் என்னை அடிமை கொண்ட அன்றே பாவியான எனது உடல் பொருள் ஆவிமூன்றும் உம்முடையதாம். ஆதலால் இப்போது செய்யத்தக்க கைம்மாறு ஒன்றையும் காணேன்.

குரு சேவையைக் கைம்மாறாக வேண்டும் எனல்

102. என் உடல் இருக்கும் வரையும் உமது தொண்டர்களுக்கு அன்புகொண்டு ஏவல் பணிவிடை செய்வதே கைம்மாறு அன்றி வேறொன்றையும் கைம்மாறாக நான் அறியேன். ஆதலால் இதையே கைம்மாறாகக் கொள்ள வேண்டும்.

குரு பணிவிடையைப் போற்றல்

103. உமது சிறந்த பணிவிடைகளைச் செய்யப்பெறின் அழிவற்ற எந்த முத்தியும் பெறவிரும்பேன். எப்பொழுதும் பிறவியை விரும்புவேன்.

சசிவன்னன் என்ன செய்தான் எனப்பேய் கேட்க தேவி கூறல்

*104. ஆசாரியர் சந்நிதானத்தில் நின்று இப்படிப் பலவிதமாகக் கூறிய அச்சசிவன்னன் அன்பினால் மனமுருகி இனிமேல் நான் செய்யத்தக்கது யாதுளது ஒன்றுமில்லை என்று கூறி பலமுறை நமஸ்கரிப்பன். எழுந்து நிற்பான். மீண்டும் நமஸ்கரிப்பான் அழுவான்.*

*சீவிதகாலத்தே முத்தியிலுள்ள அவனுக்கு மீண்டும் முத்தி கூற வேண்டுவதில்லை.*

*105. சாத்திரத்தாலான பரோட்சஞான மின்றி பரமசாட்சாத்கார அபரோட்சஞானமும் இன்றி இவ்வுடலுடனே சர்வதுக்க நிவர்த்தியும் பரமானந்தப் பிராப்திவடிவ மோட்சம் பெற்ற சசிவன்னனை இனிதேகம் நீங்கிய பிறகு முத்தியைப் பெறுவான் என்பதைக் கூறுகின்றேன்.*

*பிரம்மஞானத்தின் சிறப்பினைத் தேவிகூறல்*

*106. சசிவன்னன் முன்பு செய்த இச்செருக்கோடு கூடிய பாவத்தின் பலத்தால் நரகில் வீழ்ந்த அவனது குலத்திற்குரிய பிதிர்கள் யாவரும் குற்றமற்ற இப்போது சசிவன்னன் பெற்ற பிரமஞான பலத்தினால் அந்நரகமும் சூன்யபாவம் பெற தேவர் தலைவரான இந்திராதியர் உலகத்தை அடைந்தனர்.*

*தேவரும் மூவரும் வழிபடும் வியப்பினைக் கூறல்*

*107. மும்மூர்த்திகளும் தம் தலையால் வணங்கி அச்சசிவன்னன் சேவையைச் செய்யும் பொருட்டு யான் முன்னே என முந்துறுவர் என்றால் இந்திராதி தேவரும் மனிதரும் இவனுக்குச் சேவை செய்வதை வியந்து கூறத்தக்கதா? அன்றெனல்.*

*ஆரம்பத்தை முடித்தல்*

*108. உலகம் கடைத்தேற இறைவனே கருணையால் திருமேனி தாங்கி வந்து பரிபூரண பிரமமான தன்னை பக்குவர்க்கு அளிக்க வருவான் என்பதாக உபநிடதம் கூறும் ஆதலால் ஞானியை மனிதனெனவும் தேவன் எனவும் கூறாது ஒழிக.*

*சசிவன்னபோதம் முற்றுபெற்றது*

அத்தியாயம் நான்கு

## நாநா சீவ வாதக் கட்டளை

### பொருளடக்கம்.

1. ஆத்மவடிவசிவம் உபாதியினால் ஐந்துவகை
2. பிரகிருதி தோற்றமும் ஈசுவரத் தோற்றமும்
3. முக்குணம் மும்மூர்த்திகளாக விளங்குதல்
4. சீவர்களின் தோற்றமும் அவர்களின் பேதமும்
5. ஆவரணத்தின் தன்மையைக் கூறல்
6. தோற்றல் சக்தியின் தன்மை
7. அந்தக் கரணத்தின் தன்மை
8. ஞானேந்திரியத்தின் தன்மை
9. வியானாதி வாயுக்களின் தன்மை
10. கர்மேந்திரியங்களின் தன்மை
11. சூக்கும-சரீரத்தின் தன்மை
12. தூல பூதம்
13. தூல சரீரம்
14. கோசம்
15. தூல சரீரத்தில் சூக்கும சரீரமிருக்கும் வகை
16. சிவபரியாய நாமமும் பிரமபரியாய நாமமும்
17. ஈசுவரனது சரீராதிகளைக் கூறல்
18. தத்துவங்களின் ஒடுக்கம்
19. தத்துவம் உணர்ந்தோர் தன்மை
20. பந்த மோட்சங்களின் காரணம்

ஓம் தத் சத்

# நாநாசீவ வாதக் கட்டளை

*முகவுரை*

*சர்வதுக்க நிவர்த்தியும்,பரமாநந்தப் பிராப்தியும் முறையே நித்திய நிவர்த்தியாயும், நித்தியப் பிராப்தியாயும் பொருந்தியுள்ள சுத்தப்பிரம சைதன்யமே தனக்கு நிஜஸ்வரூபமாயிருக்க மனமுண்டாவதற்கு மூலமான அவிசாரப் பகையால் சம்பவித்த தன்னுடைய ஸ்வரூப ஸ்மரண மறதியே மாயை என்றும், அவித்தைஎனறும், பிரதிருதி என்றும் சொல்லப்படுகின்ற அனாதி அஞ்ஞான சத்தியாகி மனதாகப் பரிணமித்து, அஞ்ஞான மோக நித்திரையை உண்டுபண்ணி, மித்தையான ஜீவேசுர ஜகத்துக்கள், ஜன்ம ஜராமரணங்கள், தாபத்திரயங்கள் ஆதிவியாதி முதலான கோர சொற்பனங்களைக் காட்டுதலினால் இப்பவதுக்க சாகரத்தில் மூழ்கித் தவிக்கின்ற ஜீவர்களில் சாதன சம்பன்னாளான உத்தம அதிகாரிகள் சற்குரு சத் சாத்திரங்களின் உதவியால் சர்வ அனர்த்தங்களுக்கும் காரணமான அவித்தையின் நிவர்த்திக்கு வித்தையின் உதயமே காரணமென்றும், அவ்வித்தை உதயத்திற்குப் பிரமவிசாரமே காரணமென்றும் தெளிந்து, ஜீவப் பிரம ஐக்கிய ஞானத்தை நேரே தெரிவிக்கின்ற நான்கு மகா வாக்கிய அர்த்த சார சுருதி சப்தத் தொனி முழக்கங்களால் அதாவது . சிரவண, மனன, நிதித்தியாசன சமாதி, சாட்சாத்கார அப்பியாசங்களினால் மேற்கண்ட அஞ்ஞான நித்திரையைக் கலைத்து, பவதுக்க சமுத்திரத்தைத் தாண்டி, முன் மறந்த தன் நிஜஸ்வரூபமான பிரமதீரத்தில் விழித்து, ஞான சாக்கிரத்தை (விழிப்பை) அடைகிறார்கள்.*

*2. இப்படி குரு சாஸ்திர உதவியால் நீடித்த காலம் செய்துவரும் பிரம விசாரத்தால் பிரம ஸ்வரூபமே ஆன்மாவென்றும்,அவ்வான்ம ஸ்வரூபமே பிரமமென்றும் பிரிவற்ற இவ்வாக்கியமே வேதாந்த மகாவாக்கியங்கள் ஒருமித்துத் தெரிவிக்கின்ற அகண்டார்த் தமென முமூட்சுக்க ளெல்லாம் அகம்பிரமநிச்சயம் செய்ய வேண்டு மென்றும் கற்பித்த தோற்றமெல்லாம் அதிஷ்டானமான பிரம்மன்றி அற்பமும் அயலாக இல்லை என்றும்*

*சுருதியுக்தியால் நேதிசெய்து நிதம் அகம்பிரம்மம் பிரமமகமென்று சந்தேகமின்றி அறியவேண்டுமென்றும், சர்வஜெகத்தும் வேறு, நான் வேறு, பிரமம் வேறு என்னும் பேதபுத்தி , சர்வஜெகத்தும் பிரமமென்றும், அது நானென்றும், நானதுவென்றும், வெகு திடமான பிரம நிச்சயத்தால் நீங்குமன்றி, கர்மம், உபாசனை யாதொன்றினாலும் நீங்காதென்றும் ஆதலால் முமுட்சுக்களெல்லாம் அகண்டபரநிச்சயம் அடைந்து, அதனால் மரண முதலான அனந்தவித பயதுக்கங்களுக்கு உற்பத்தி ஸ்தானமான பேதபுத்தியை எவ்விதமும் நீக்கவேண்டுமென்றும் தெரிந்து கொள்ள வேண்டும். ஆதலினால் அகம் பிரம நிச்சயத்துக்கு அன்னியமாம் உபாயமெலாம் தூரத்தள்ளி, பேதமான மன விகற்பங்கள் தோன்றாது தீர்ந்து போகும் வரை பிரியமுடன் அனவரதம் இடைவிடாமல், சாதகமான அகம்பிரம நிச்சயத்தைச் சலியாது முமுட்சுக்களெல்லாம் பழகவேண்டும். இதையன்றி மோட்சநிலை பெறுவதற்கு எளிதான உபாயந்தான் எவையுமில்லை.*

*3. பிரம விசாரத்தால் ஞானம் உண்டாகாத மந்த அதிகாரிக்குச் சுருதி, கிரம சிருஷ்டியைச் சொல்லி ஆரோப அபவாத யுக்தியால் பிரமத்தில் மனம் நிலைக்கச் செய்யும் உபாயத்தைக் காட்டியிருக்கின்றது. அதை அனுசரித்து, ஸ்ரீசேஷாத்திரி சிவனாரென்னும் மஹான் பிரம சூத்திர முதலிய விரிந்த நூல்களைப் பார்க்கச் சக்தியில்லாத மந்த அதிகாரிகளும் பிரமானுபவம் அடையும் வண்ணம் நாநாஜீவவாதக் கட்டளை என்னும் இந்நூலில் இனியவசன ரூபமாய்ப் பிரமஸ்வரூபத்தில் மனம் உபசாந்தி அடையச்செய்யும் உபாயமான பெரிய விஷயத்தையடக்கி வெளியிட்டருளினார்.*

*4. அதில் அபின்னசத்தி அவிகிருத முக்குணங்களால் பிரமாப்பியாசிகளுக்குச் சாதகமாகக் குணங்குறியற்ற சுத்தப்பிரமத்திற்குச் சிறந்த லெட்சணமாகச் சச்சிதானந்த லெட்சணங்களைப் பிரமத்தின் லெட்சணமாகக் காட்டியும், அப்பிரமத்தில் பின்னாசத்தியான மூலப்பிரகிருதி விகிர்த முக்குணங்களால் கற்பித்த ஜீவேசுர ஜெகத்துக்களைக் காட்டும் 35 தத்துவங்களை ஆரோபக் கிரமங்களால் காட்டி,*

அவைகளை அதிஷ்டானத்துக்கு அன்னியமாய் ஆரோபமில்லை என்றும் அவ்வாரோபத்திற்கு நிஜஸ்வரூபம் அதிஷ்டானத்துக்கு அன்னியமாய் ஆரோபமில்லை என்றும் அவ்வாரோபத்திற்கு நிஜஸ்வரூபம் அதிஷ்டானமே என்னும் நியாயப்படி அபவாதம் செய்யச் சாதகமான லயசிந்தனை காட்டியும் இருக்கிறது.

5. இந்த லயசிந்தனையால் பிரமஸ் வரூபத்தில் மனம் ஸ்திரப்படுகிறது. அப்போது திரிசியங்களான பொய்யெல் லாம் பிரம்ம சொரூபமாய் விளங்குவதால் இது மந்த அதிகாரிகளுக்குச் சுருதிகூறும் மோக்ஷ உபாயம். அப்படி லயசிந்தனை செய்வதற்கு மேற்கண்ட ஆரோபக் கிரமங்கள் நூலிற் சொல்லியபடி மனதில் அழுத்தமாய்ப் பதிந்தாலொழிய லயசிந்தனை பிரமசித்தியைக் காட்டாது. ஆகையால் மேற்கண்ட ஆரோபங்களை நூலிற் காட்டியபடி மனதில் செவ்வையாய்ப் பதியச்செய்தற்குச் சாதனமாக இந்நூலிற்கிணங்க அடியிற்கண்ட ஆரோப சித்திரப்படத்தை வரைந்து, அனேக சாதுக்கள் அதை அங்கீகரித்தபடியால் அப்படத்தை இத்துடன் வெளியிடலானேன். வேதாந்தத்தில் மனது நசித்த பிரதம அப்பியாசிகளான இளம் பக்குவர்கள் நூலுடன் படம்சேர்ந்த புஸ்தகத்தை வாங்கி, அப்பியாசிப்பார்களானால் நூலின் ஞானம் அனாயாசமாய் மனதில் போதப்படும்.

அத்தியாயம் நான்கு

## 'நாநா சீவ வாதக் கட்டளைச் சுருக்கம்'
## நூன் முகம்

ஸ்ரீ சேஷாத்திரி சிவனார் என்னும் அடிகளால் தைத்திரீய உபநிடதத்தினைத் தழுவி இயற்றப்பட்ட இந்நூல் வேதாந்த நூல்களை எளிதில் கற்றுணர்ந்து பேரறிவு வீடுபேறு அடைதற்குப் பயனளிக்கத்தக்க பெருமையுளதாகலின் ஆன்மிக அன்பர்கள் இதனைப் பயின்று தெளிவடையுமாறு கேட்டுக் கொள்ளுகின்றோம்.

'நூல்'

*1. ஆத்ம வடிவம் சிவம் உபாதையினால் - ஐந்து வகையாக விளங்குதலை உத்தம அதிகாரிக்குக் கூறல்.*

சுத்த பிரம் மாயிருக்கின்ற சர்வ சாட்சியினிடத்தில் 'தீயினில் வெப்பம் போல' ஒரு சக்தி உள்ளது. அச்சக்தி மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றனுக்கும் எட்டாதபோது அதற்கே 'சுத்தப்பிரமம்' என்று பெயர்.

அந்தச் சக்தி விரிந்து சுத்தப்பிரமத்தைச் சூழ்ந்து கொள்ளுகின்றபோது 'பரப்பிரமம்' என்னும் பெயருடையதாகின்றது. இந்தப் பரப்பிரமத்தினிடத்தில் விகாரமின்றிய (சத்துவ,ரசோ, தமோ) சாந்த, கோர, மூடம் என்னும் மூன்று குணங்கள் உண்டாயின. அந்தச்சக்தி சாந்த குணத்துடன், சுழுத்தியில் கூடுகின்றபோது ஆனந்த வடிவ சக்தி (இன்ப வடிவ சக்தி) யாகி 'பரமானந்தர்' என்னும் பெயர் பெறும். அதே சக்தி கோர குணத்துடன் கனவில் கூடுகின்றபோது சித்துவடிவ (ஒளிவடிவ) சக்தியாகி தேஜோமயர் என்னும் பெயர் பெறும். அதே சக்தி மூடகுணத்துடன் நனவில் கூடுகின்றபோது சத்துவடிவ (உண்மைவடிவ) சக்தியாகி 'பரிபூரணர்' என்னும் பெயர் பெறும்.

2. பிரகிருதித் தோற்றமும் ஈஸ்வரத் தோற்றமும், கனிஷ்ட அதிகாரிக்குக் கூறல்:

இந்த அகண்ட பரிபூரண சச்சிதானந்த பிரம்மத்தில் கிளிஞ்சலில் வெள்ளிபோல 'மூலப்பிரகிருதி' என்னும் ஒரு சக்தி உண்டு. இந்தச் சக்தி விகாரப்பட்டு, இதனிடமும் விகார

முக்குணங்கள் முறையே சாந்த, கோர, மூடம் என்பன தோன்றும். இம் மூன்று குணங்களில் 'சாந்த' குணத்தை மாயை என்றும், சர்வஞ்ஞ உபாதியென்றும், ஈஸ்வர காரணசரீரம் என்றும் சொல்லப்படும். இந்த மாயையில் பரப்பிரமம் நல்லிலக்கணமாக (தெள்ளத் தெளிவாக) உள்ளது. இந்தப் பிரதிபிம்பத்திற்கு ஈஸ்வரன் என்று பெயர். மூலப்பிரகிருதியின் சத்துவ குண மாயையினிடத்தினின்றும் மேலும் முக்குணங்கள் உண்டாயின. அவை முறையே 'சாந்தத்தில் சாந்தம்', 'சாந்தத்தில் கோரம்', 'சாந்தத்தில் மூடம்' என்பனவாகும்.

3. பரப்பிரம்மம் சாந்தம் முதலிய முக்குணங்களால் மும்மூர்த்திகளாக விளங்கலைக் கூறல்:

பரப்பிரம்மம் இம்மாயையின் 'சாந்தத்தில் சாந்தம் (சத்துவத்தில் சத்துவம்) என்னும் குணத்தில் கூடிக் 'காத்தல் தொழில்' செய்வதால் 'திருமால்' எனும் பெயர் பெறுகின்றார். அவனே 'சாந்தத்தில் கோரம்' எனும் குணத்தில் கூடி, படைத்தல் தொழில் செய்வதால் பிரம்மன் எனும் பெயர் பெறுகின்றார். அவனே 'சாந்தத்தில் மூடம்' எனும் குணத்தில் கூடி அழித்தல் தொழிலைச் செய்வதால் 'உருத்திரன்' எனும் பெயர் பெறுகின்றார்.

4. ஜீவர்களின் தோற்றமும் அவர்களின் பேதமும் கூறல்:

மூலப்பிரக்ருத்யின் கோரகுணம் அனேகவடிவங்களாய்ப் பிரிந்து, அவித்தைகள் என்றும், காரண சரீரங்கள் என்றும் சொல்லப்படும். இந்த அவித்தைகளிடத்தில் பிரமப்பிரதிபிம்பம் உளவாம். இந்தப் பிரதிபிம்பங்களுக்குச் சிதாபாச சீவர்கள் என்று பெயர். இந்த அவித்தைகளும் கோரத்தில் சாந்தம், கோரத்தில் கோரம், கோரத்தில் மூடம் என முக்குணங்கள் உடையதாயிருக்கும். கோரத்தில் சாந்தம், இக்குணத்தில் பிரமம் தோன்றுகின்றபோது தத்துவஞானியும், கோரத்தில் கோரம், இக்குணத்தில் பிரமம் தோன்றுகின்றபோது கன்ம நிட்டனும், கோரத்தில் மூடம் இதில் பிரமம் தோன்றுகின்றபோது சோம்பல், உறக்கம், மயக்க முள்ளவனும் தோன்றுவான்.

5. ஆவரணத்தின் தன்மையைக் கூறல்:

இனி மூலப்பிரகிருதியின் தமோகுணம் மறைப்பு சக்தி (ஆவரணம்) தோற்றல் சக்தி (விட்சேபம்) என இருசக்திகளாய்த் தோன்றும். இதில் மறைப்பு எனும் சக்தியானது தத்துவஞானி, ஈஸ்வரனைத் தவிர மற்றைய ஜீவர்களுக்கு முச்சீரம் ,சிதாபாசன், சாட்சி, சைதன்யங்களின் ஒன்றற் கொன்றுள்ள வேறுபாடு தெரியவிடாமல் மறைக்கும். இதனால் மறைக்கப்பட்ட ஜீவர்கள் இருபத்தொன்பது தத்துவங்களையும் ஒரு தன்மையாக நான் என்று அகங்கரிப்பர். குரு அருளால் இந்த வேறுபாடுகள் நீங்குவதே (பேரறிவு) முத்தி எனப்படும்.

6. தோற்றல் சக்தியின் தன்மையைக் கூறல்:

இனி தோற்றால் சக்தியினிடத்தினின்று வானமும், வானத்தினின்று வளியும், வளியினின்று தீயும், தீயினின்று நீரும் நீரினின்று மண்ணும் உண்டாயின. இவையினின்றும் முறையே (சத்தம் , பரிசம், வடிவம் , ரசம், கந்தம்) ஓசை, ஒளி, ஊறு, ஒளி, சுவை, நாற்றம், என்ற ஐந்தும் தோன்றும். இந்த ஐம்பூதத்திற்கும் காரணமான தோற்றல் சக்தியினின்றும் முக்குணங்கள் தோன்றும். அவை மூடத்தில் சாந்தம், மூடத்தில் கோரம், மூடத்தில் மூடம் என்பனவாகும். தோற்றல் சக்தியினிடத்துத் தோன்றிய இப்பூதங்களை கலப்பில்லாத (பஞ்சீகிருத) பூதங்கள் என்றும், முக்குண பூதங்கள் என்றும், சூக்கும (நுண்ணிய) பூதங்கள் என்றும் சொல்லப்படும்.

7. அந்தக் கரணத்தின் தன்மையைக் கூறல்:

இச்சூக்கும பூதங்களினின்றும் தூலபூதங்கள் தோன்றின. எவ்வாறெனின் தோற்றல் சக்தியின் பஞ்சபூதத்தின் மூடத்தில் சாந்தம் எனும் குணத்தில், பூதத்திற்கு ஒருமாத்திரையாய் எடுத்து உள்ளம், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பனவாகும்.

8. ஞானேந்திரியத்தின் தன்மையைக் கூறல்:

இதே குணத்தில் பூதத்திற்கு ஒருமாத்திரை எடுத்து தனித்தனியே வைக்கப்பட்டதை ஞானேந்திரியங்கள் எனப்படும். அவை முறையே காது, புறவுடம்பு, கண், நாக்கு, மூக்கு

என்பனவாகும். மூடத்தில் சாந்த தத்துவங்களான இவை பத்தும் ஞானம் பெறக்காரணமாதலின் (ஞானேந்திரியம்) அறிகருவி என்றாகும்.

9. வியானாதி வாயுக்களின் தன்மையைக் கூறல்

இதே தோற்றல் சக்தியின் 'மூடத்தில்கோரம்' எனும் குணத்தில் பூதத்திற்கு ஒருமாத்திரை எடுத்து ஒன்றாகக் கூட்டி வைத்தது ஐவகை வாயுக்கள் எனப்படும். அவையே வியானன், பிராணன், அபானன், சமானன், உதானன் என்பவையாகும்.

10. கர்மேந்திரியத்தின் தன்மையைக் கூறல்:

இதே குணத்தில் பூதத்திற்கு ஒரு மாத்திரை எடுத்துத் தனித்தனியே வைக்கப்பட்டது. கர்மேந்திரியங்கள் எனப்படும். அவை முறையே வாக்கு, கை, பாதம், எருவாய், கருவாய் என்பனவாகும். இக்குணத்தில் தோன்றிய இப்பத்து இந்திரியங்களும் தொழில் புரிவதால் தொழில் கருவி (கன்மேந்திரியங்கள்) என்றாகும்.

11. சூக்கும சரீரத்தின் இருபது தத்துவங்கள் தன்மையைக் கூறல்

மூடத்தில் சாந்தம் - இதில் தோன்றிய பத்து தத்துவங்கள், மூடத்தில் கோரம் - இதில் தோன்றிய பத்து தத்துவங்கள். ஆகிய நுண்ணுடல் (சூக்கும சரீரம்) எனப்படும்.

12. தூல பூதத்தின் தன்மையைக் கூறல்:

மாயாப் பிரதிபிம்பர் ஈஸ்வரன், அவித்தையால் பிரதிபிம்ப ஜீவர்கள் அனேகரானபடியால் அவர் அவருக்கு ஒவ்வொரு சரீரமாகப் படைத்தளித்தனன். இத்தூலபூதங்களினின்றும் இரண்டு இரண்டாகப் பகுத்து முதல்பாதி ஐந்தையும் விட்டு, மற்ற பாதியை ஒவ்வொன்றையும் நான்கு நான்காகப் பிரித்து தன் அம்சத்துடன் கூட்டாமல் மற்ற நான்கினோடு 1/8, 1/8, மாத்திரையாகச் சேர்ப்பது பஞ்சிகரணம் (அ) கலப்பு பூதம் எனப்படும். இதுவே ஸ்தூல் பூதமாம்.

13. தூல சரீரத்தின் ஆறு தத்துவங்கள் தன்மையைக் கூறல்:

அவை முறையே தோல், இரத்தம், சதை, நரம்பு, எலும்பு,

எலும்புக்குள் உள்ள மூளை என ஆறு தத்துவங்களாகும். இத்தூல பூதங்களினின்றும் நான்கு பிறவிகள் உண்டாயின. அவை முறையே கருவில் பிறப்பன, விதையில் பிறப்பன முட்டையில் பிறப்பன வியர்வையில் பிறப்பன என்றாகும். மேலும் இதினின்றும் உண்டாயின மூன்று சாதிகள் உத்தம, மத்திம, அதம சாதிகள் எனப்படும். தேவர்கள் மனிதர்கள் போன்றோர் உத்தம சாதி, பசு, பட்சி காமதேனு போன்றவை மத்திமசாதி, செடி, கொடி, கற்பகம் போன்றவை அதம சாதியாகும்.

14. கோசத்தின் தன்மையைக் கூறல்:

ஐவகை கோசங்கள் உள. தூலசரீரம் அன்னமய கோசம் எனப்படும். சூக்கும சரீரத்தில் மூன்று கோசங்கள் உள. அவை பிராணனும் கர்மேந்திரியங்களும் கூடியது. பிராண மயகோசம்; மனமும் ஞானேந்திரியங்களும் கூடியது மனோமய கோசம்; புத்தியும் ஞானேந்திரீயங்களும் கூடியது விஞ்ஞானமய கோசம் என்பனவாகும். காரண சரீரமே ஆனந்தமய கோசமாகும்.

15. தூல சரீரத்தில் சூக்குமசரீரமிருக்கும் வகையைக் கூறல்:

ஆறு தத்துவமான ஸ்தூல உடலில், இருபது தத்துவங்களான சூக்கும சரீரம் உள்ளது. ஆதலால் இந்த இருபத்தாறு தத்துவங்களையும் ஒருமைப்பாடாக காரியசரீரம் என்று சொல்லப்படும்.

16. ஜீவபரியாய நாமமும் பிரம்மபரியாய நாமமுங் கூறல்:

பிரம சைதன்யமும் நனவில் சாட்சியாகும் போது சீவாத்மா என்றும், கனவில் சாட்சியாகும் போது அந்தராத்மா என்றும், சுமுத்தியில் சாட்சியாகும் போது பரமாத்மா என்றும், மூன்று அவத்தைகளுக்கும் சாட்சியாகும்போது ஞானாத்மா என்றும், கூடத்தர் என்றும் சொல்லப்படும்.

17. ஈசுவரனது சரீராதிகளைக் கூறல்:

ஈஸ்வரன் தூலசரீர சமட்டியில் (கூட்டங்கள்) உள்ளபோது விராட்டு என்று சொல்லப்படும். இந்த விராட்டு நனவில் வைசுவானரன் என்றும், இதற்கு அதிஷ்டான சைதன்யம் பிரம்மன் என்று சொல்லப்படும்.

ஈஸ்வரன் சூக்கும சரீரத்துடன் உள்ள போது கனவில் இரண்ய கர்ப்பனென்றும், இதனுடன் கூடியது ஈஸ்வர காரணசரீரம். அதனையே அவ்வியாகிருதம் என்றும் சொல்லப்படும். இதனுடன் கூடிய ஈஸ்வரன் அந்தர்யாமி என்றும், இதற்கு அதிட்டான சைதன்யம் உருத்திரனென்றும் சொல்லப்படும்.

இவ்வாறாக காரணசரீரத் தத்துவங்களான சிவன், அஞ்ஞானம், ஈஸ்வரன், மாயை, பிரமம் என ஐந்தாகும். சூக்கும சரீரத் தத்துவங்கள் இருபது. தூல சரீரத்தத்துவங்கள் ஆறு, பூதங்கள் ஐந்து, ஆக தத்துவங்கள் முப்பத்தியாறு. இவ்வாறாக உற்பத்தி சொல்லப்பட்டது.

*18. இனி தத்துவங்களின் ஒடுக்கம் சொல்லப்படுகின்றது.*

தூல சரீரங்கள் பூதங்களில் ஒடுங்கும், பூதங்கள் பஞ்சீகரணம் விட்டு, தமோகுண பூதங்களாக எஞ்சும் இதனைக் கேவல இரண்யகர்ப்ப நிலை என்று சொல்லப்படும்.

சூட்சம் தேகங்கள் சாந்த, கோர குணங்களில் ஒடுங்கும், இக்குணங்களுக்குக் காரணமான மறைத்தல், தோற்றல், ஆகிய சக்திகள் மூலப்பிரகிருதியின் மூடகுணமாய் பின்னும் ஒரு படைப்புக்கு வித்தாக அஞ்ஞானத்திலும், மாயையிலும் ஒடுங்கும். இந்தமாயையும், அவித்தையும் மூலப்பிரகிருதி என்னும் விந்துவில் ஒடுங்கும். அந்த விந்து தத்துவமும் தனக்கு அதிட்டானமான பிரம சைதன்யத்தில் ஒடுங்கும்.

*19. முப்பத்தாறாம் தத்துவமான பிரம்மதத்துவமே தான் என உணர்வோர் ஜீவன் முத்தியடைவர்.*

இவ்வாறாகத் தோற்றம் மற்றும் ஒடுக்கத்திற்குக் காரணமானது பிரமம், 'அதுவே தான்' என உணர்ந்தவன் ஞானியாகும். இவனை சீவன் முத்தனென்றும், திடப்பிரக் ஞனென்றும், பகவத்பத்தன் என்றும், குணாதீதன் என்றும், அதிவருணாச்சிரமி என்றும் சாத்திரங்கள் முறையிடுகின்றன. அனைவரும் இந்தத் தத்துவங்களை ஆய்ந்து முத்தி அடையக்கடவர், தத்துவம் முப்பத்தாறனுள் எப்போதும்

தானாகவே காணப்படுகிற தத்துவம் -1 பிரமதத்துவம், தனக்கு அன்னியமாகவே காணப்படுகிற தத்துவம் - 7 (பஞ்சபூதம் -5, மாயை-1, மாயா பிரதி பிம்பரான ஈஸ்வரன்-1 இதன் தொழில் வெட்டு, குத்து, உழவு, தனக்கன்னியமே)

மற்ற இருபத்தெட்டுத் தத்துவங்கள் தூலசரீர தத்துவம் 6 (நான் இந்த குலம் சாதி, ஆசிரமம், ஆண், பெண், கருப்பன், சிவப்பன், குட்டை, நெட்டை பருத்தேன் இவை) சூக்கும சரீரத்தத்துவம் - 20. என் சரீரம் பருத்தது சிறுத்தது, மயிர் நரைத்தது, என் சரீரம் பிறந்து இத்தனை நாளாயிற்று, என்றும் நான் கண்டேன் புசித்தேன் ஜீவித்தேன் என் அஞ்ஞானம் என் ஜீவன் என தானாகவும் தனக்கன்னியம் எனவும் காணப்பட்ட இந்த இருபத்தெட்டும் தனக்கன்னியம் எனவும் முப்பத்தைந்து தத்துவங்களையும் காண்கின்ற முப்பத்தாறாம் தத்துவமாகிய பேரறிவென்று உணர்ந்து அது தானென்று அறிந்து (தனது எதார்த்த வடிவமென்றுள்ளவாறு நிர்விகற்ப சமாதிவாயிலாய் அறிந்து) அது தானே பிரம்மமென்று தெளிந்தவனே பிரம்ம தரிசனமுடைய ஜீவன் முத்தன் என்று சொல்லப்படும்.

20. பந்த மோட்சங்களின் காரணத்தைக் கூறல்:

இப்படிப் பிரம்மமே தானென்றும், ஏனைய இருபத்தெட்டு தத்துவங்களுந் தனக்கன்னியமென்றும் பிரித்தறியாத அவிவேகி (ஆத்மநாத்ம விவேக மில்லாத மூடன்) அகங்காரக் கிரந்தியினாலே புத்திர தாராதிகள் தவிக்கின்றதை யான் தவிக்கின்றே னென்னும் மூடத்தனம் போல் இந்த இருபத்தெட்டினுடைய தொழிலையும் தன் தொழிலென்று மயங்குகின்றபடியினால், இந்த இருபத்தெட்டினாலும் ஆர்ச்சிக்கப்பட்ட (சம்பாதிக்கப்பட்ட) புண்ணிய பாவங்களினாற் கட்டுப்பட்டு, அந்தக் கன்மத்தின்படியே ஜனன மரணாதி சம்சாரத்திலே அடிபடுகிறேனென்று மயங்குவன் பிரஹ்ம சைதன்னியமே தானென்றும் மற்ற இருபத்தெட்டும் தானல்லவென்றுந் தெளிந்த விவேகியானவன் அகங்காரக் கிரந்தியற்றபடியினால் இந்த இருபத்தெட்டினுடைய தொழிலையும் நான் செய்யவில்லை என்றும், இந்த

இருபத்தெட்டும் புசிக்கின்றதை நான் புசிக்கவில்லை என்றும், திடப்படத் தேறி மயக்க மற்றிருக்கின்றபடியினால் இந்த இருபத்தெட்டினாலும் ஆர்ச்சிக்கப்பட்ட புண்ணிய பாவங்களினின்றும் விடுபட்டுக் கன்ம மில்லாதபடியினால் ஜனனமரணாதி சம்சாரமில்லாமல் முத்தனாகிப் பிர ஹ்மமாத்திரமாகவே இருப்பன். இவனை ஜீவன் முத்தனென்றும், திடப்பிரஞ்ஞனென்றும், அதிவர்ணாச் சிரமியென்றும், குணாதீதனென்றும், பகவன் பக்தனென்றும், பிராமணனென்றும் சாஸ்திரங்கள் முறையிடுகின்றன. யாவரும் இந்தத் தத்துவத்தை விசாரம் பண்ணி மோட்சமடையக் கடவர்.

நாநா சீவ வாதக் கட்டளை முற்றிற்று.

ஓம் தத் சத்

அத்தியாயம் ஐந்து

# மகாராஜா துறவு

குமாரதேவர் திருவாய் மலர்ந்தருளிய

மகாராஜா துறவு

குமாரதேவர்

இவர் கன்னடதேயத்தவர் என்று ஊகிக்க தேவர் என்னும் பட்டமே போதிய சான்றாம். குகை நமசிவாயத் தேவர், அருள் நமசிவாயதேவர், விருப்பாட்சி தேவர் என கன்னடதேயத் துறவிகளுக்குப் பெயர் வழங்கிவருதலானும் இலிங்க தாரிகளான வீரசைவ அடியவர்களில் பலருக்கும் கொக்கிதேவர்,மடிவால மாச்சதேவர் எனத் தேவர் பட்டமே வழங்கி வருதலானும் இவரது மாணவர் குழுவினர் இலிங்க தாரிகளாகவே இருத்தலானும் இவரைக் கன்னட தேயத்தவராக எண்ணுகின்றோம்.

இவர் கொலை மறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோத உந்தியார் முதலிய நூல்களியற்றிய சாந்தலிங்க சுவாமிகளிடம் ஞானோபதேசம் பெற்றுக் கொண்டதாகச் ''சாந்த நாயகனை'' இந்நூலின் ஆசிரிய வணக்கம் காட்டுகின்றது.

இவர் தமக்கு மெய்ஞ்ஞானோபதேச குருவாக நின்றவர் ஜகதீசுவரியான பார்வதியே எனத் தாமியற்றிய நூல்களுள் உரைத்தலால் அனுபவ ஞானத்தினை இவர் அம்பிகையினருளால் பெற்றவர் என்று அறிகின்றோம். வேதாந்த சித்தாந்தங்களைத் தெய்வ அருளாலுணர்ந்த இம் மகானுபாவருக்குத் துறவறத்திலுள்ள அழுத்தத்தினை அவரியற்றிய துறவு முதலிய பதினாறு சாத்திரங்கள் நன்கு விளக்கும்.

இவர் சீவன் முத்தராக உலவிய காலத்தில் திருவாரூர்த் தேரினை ஓடாமல் நிறுத்தினவர் எனவும், மந்திரவாதியைத் தண்டித்தனரெனவும், திருநீறளித்துப் பிள்ளையுண்டாகச் செய்தனரெனவும், சமைத்த மீன் உயிரானதென்றும்,

கருங்கல்லினை மண்டபத்தின் மீதேறச் செய்தனரெனவும் எழுதியிருக்கின்றார்கள். பெரிய நாயகியம்மையை உபாசித்து அம்மகாதேவியைத் தமது ஞான குருவாகக் கொள்ளும் ஆற்றலுடையவருக்கு இவை போன்றன அற்பத்தினும் அற்பமான காரியங்களாதலின் மற்ற சித்துச் செயல்களைவிரித்துரைத்திலேம் இவர் விதேகமுத்தரான பின் இவர் சீடர்கள் விருத்தாசலத்தில் இவருடலினைச் சமாதியிலமைத்து நித்திய பூசை செய்து வருகின்றார்கள்.

இவர் பிறந்த காலம் உரைத்தற்குச் சரியான ஆதார மில்லை. விருத்தாசலத் தினையும், அந்த தலத்தி லெழுந்தருளியிருக்கின்ற பெரியநாயகியாரையும், சிந்தனை செய்யும் திறங்கேட்கப்படுதலால் இவர் தம் துறவறநிலையைக் காத்தது விருத்தாசலத்திலிருந்தே என அறிகிறோம். இவர் பிரசித்தி பெற்ற ஞானபானுவாய் விளங்கி இவர் மாணவர் திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் எனப் பிரசித்தி யுடையவராய் இப்பொழுத்ருக்கும் போரூர் கார்யாலயத் த்னை அமைத்தனர் சந்நிதிமுறை முதலிய நூல்கள் இயற்றியுள்ளார் உலகப் பிரசித்தரான குமாரதேவர் சரிதம் குன்றிலிட்ட விளக்கெனக் குவலயமெங்கும் பரவி நிற்கின்றது.

கடல்புடையடுத்த நெடுநிலை வரைப்பிற் பிறந்தும் பெருந்துயர் எய்திச் சகடக் காலெனத் தலை தடுமாறா நின்ற, இன்றைய இளைய சமுதாயத்திற்குத் தேவை ஆன்மீக வைராக்யமே! எழுவகைத் தோற்றத்தியல்புடைய உயிர்களுள் சாலச்சிறந்தது மக்கள் பிறப்பே, இப்பிறப்பினை யடைந்தும் இல்லற மென்னுங் கருஞ்சேற்றுள் சிக்கி வருந்துவதனால் யாதொரு பயனும் தராது என்பதை விளக்கு வான் ஆசிரியர் குமாரதேவர், பெரியநாயகியார் திருவருள் வல்லபத்தால் செய்துள்ள 'மகாராசா துறவு' என்னும் நூல் தக்கது. ஆதலின் இந்நூலில் பயிற்சியுடையாருக்கு மூவேடனைத் துன்பங்கள் ஒழிந்து ஞானம் உதயமாகித் துறவறம் எய்திச் சற்குருவினைத் தேடியடைந்து ஞானஉபதேசம் பெற்று நிரதிசய இன்பத்தினை எய்தற்குள்ள நல்மார்க்கங்கள் நன்கு புலப்படுமாதலாயினும் கற்றோர்க் கன்றி மற்றையோரின் ஈது உபகார மாமாறு பெரியோர் வாயிலாக இதற்கு வினாவிடை ரூபமாக ஒரு

*உரையை எழுதியுள்ளது. உபகாரங் கருதி எழுதியுள்ள இச் சிற்றுரையில் எவ்விடத்திலேனும் அவத்தை வயத்தால் முரண்கள் காணப்படுமாயின் அறிஞர் அவைகளை மன்னிக்குமாறு கேட்டுக் கொள்ளுகின்றனம்*

*மகாராஜா துறவுபாயிரம்*

*(இதன் பொருள்) தேவர்கள் (எந்நாளும்) துதிக்கின்ற ஸ்ரீவிருத்தாசலத்தில் (எழுந்தருளியிராநின்ற) ஆழத்துப் பிள்ளையார் என்னுந் திருநாமத்தினையுடைய மூத்த பிள்ளையாரையும், கோபுரதுவாரத்தி லெழுந்தருளி யுள்ள குமாரசுவாமியாகிய ஞானாசிரியனையும், பர்வதராஜ புத்திரியாகிய பெரியநாயகியம்மையாரையும், மூன்று கண்களையுடைய சிவ பெருமானையும், சாந்தலிங்க சுவாமிகளையும் நம்முடைய மனதின் ஆசை நிறைவேறும் பொருட்டு நாள்தோறும் தியானஞ்செய்து எதிரில் நின்று துதிப்போமாக என்றவாறு.*

*2. குரு வணக்கம்:*

*வேத அந்தத்தில் பிரகாசிக்கின்ற சோதி சொரூபமான பிரமமே மனிதவுருவத்தோடு வந்து என்னுடைய பந்தத்தை நிவர்த்தி செய்து, இரட்சித்த சிவப்பிரகாசனென்னுந் திருநாமத்தினையுடைய ஞானாசாரியனையும், அச் சிவப்பிரகாச தேசிகனது தேன் பொருந்திய தாமரை மலர் போன்ற திருவடிகளைத் துதிக்கின்ற சாந்தலிங்க சுவாமியையும், அச் சாந்தநாயகனது பூரணகடாட்சத்தைப் பெற்ற பழநி சுவாமியையும், கந்தர்நதி தவத்திரு மவுன குருசாமியையும் மனத்தில் வைத்து வணங்குவாம்.*

*3. சிவகாமியம்மை துதி:*

*காருண்யமே வடிவாய், ஜீவகோடிகளுக்கெல்லாம் மாதாவாகிய, அவர்களது அஞ்ஞானத்தை நீக்கி, நிர்மலமாய், மயக்கமற்றதாய், உண்மைஞானவடிவாயுள்ள மோக்ஷத்தை அடையும் பொருட்டு உ பகரித்து நின்று, தேவர்கள் எல்லாம் துதிக்க அந்தகாரம் ஒழியும் வண்ணம், விளங்குகின்ற பெரிய வீரக்கழல்கள் முழங்க இறைவனால் செய்யப்படுகின்ற திருநடனத்தால் மகிழ்வடைந்து, அறிவுமயமான நான்கு*

வேதங்களும் துதிக்கின்ற சிதம்பரத்தைத் திருக்கோயிலாகக் கொண்டு வாழ்கின்ற சிவகாம சுந்தரியைத் தியானிப்போமாக.

4. அவையடக்கம்:

ஒள்ளிய சந்திரவட்ட குடையையும், ஆக்கினாசக் கரத்தையும், விளங்குகின்ற கடலைப் போன்ற சேனைகளையும், அழுத்தமான தோள்களையுமுடைய மஹா ராஜன், அழகிய இடமகன்ற பெரிய உலகத்தில் துறவுபூண்டு முத்தியடைந்த அருமையான இந்தச் சரித்திரத்தை, அங்குள்ள பெரியோர்கள் தமிழ் யாப்பினால் பாடெனக் கேட்டோர் வீடடையும் வண்ணம் பாடினான். (அவன் யாரெனில்) மணம் வீசுகின்ற மலர்கள் விரிந்த பொழில் சூழ்ந்துள்ள விருத்தாசலத்தில் எழுந்தருளியிருக்கிற குமாரதேவரென்னும் திருநாமத்தினையுடைய மஹாமுனிவன்.

சிவ பெருமானது திருவுருவமாகிய ஞானரூபமாய் விளங்குகின்ற பஞ்சாக்ஷரங்கள் வாழ்க, புதுமையைத் தருகின்ற விபூதியும் வாழ்க.கண்மணியாகிய உருத்தராக்ஷமும் வாழ்க. குமாரதேவரது அழகைத் தருகின்ற இரண்டு திருவடிகளும் வாழ்க. அவனது திருவடியர் கூட்டத்துடன் எல்லா அரிய உயிர்களும் வாழ்க.

1. நூல்:

அவதாரிகை: நைமிசாரண்ய முனிவர்களிடம் சூத முனிவர் வருகை தரவும் அவரை ''மகாராஜதுறவு'' சாத்திரம் சொல்வாயாக? எனக்கேட்டல்.

மரங்கள் விளங்குகின்ற நைமிசாரணியத்தில் (தவஞ்செய்து கொண்டு) வாழ்கின்ற சௌநகாதிமுனிவர்கள் (இருக்குமிடத்திற்கு) சூதமுனிவர் (ஒருநாள்) வருதலும் (அச்சவுனகாதி முனிவர்கள்) அவரை வணங்கித் துதித்து சூதரே எங்களுக்குப் பற்பலவிதமான அநேகங் கதைகளை வகுத்துரைத்தீர் (எனினும்) இதுகாறும் மஹாராஜனது அழகிய சரிதத்தை எங்களுக்குச் சொன்னீர்களில்லை. ஆதலால், அக்கதையைத் தேவரீர் இப்பொழுது கூறியருளுமென்று கேட்கவும், (அச்சூத முனிவர்) வேதத்திற் சொல்லுகின்ற விசாலமான இக்கதையை நான் சுருக்கிக் கூறுகின்றேன். நீங்கள் பரிசுத்தமான உள்ளத்தோடிருந்து கேட்பீர்களாக வென்று சொல்லத் தொடங்கினார்.

*2. அ.கை. கருநாடதேசத்தின் வளமும் மன்னவன் அரசாட்சியும்*

*தளிர்கையுடைய தண்ணிய கிளைகளோடு கூடிய தேமாமரங்களிலுள்ள ஒள்ளிய பழங்களின் தேனும், விளங்காநின்ற பலாப்பழங்களின் தேனும், தழைத்துள்ள வாழைப்பழங்களொழுக்குகின்ற தேனும், கலந்து, குளங்களில்நிறைந்து புகழத் தக்க வயல்களில் (நீருக்குப்பதிலாகப்) பாய, அதனால் நெல்விளைகின்ற உயர்ந்த கருநாடகதேசம் செய்த நல்ல தவத்தினால் ஒரு மன்னவன் எல்லா உயிர்களையும் அங்கிருந்து அரசாண்டு இரக்ஷித்துக் கொண்டிருந்தான்.*

*3. அ.கை. மகாராசனது இரட்சிக்கும் குணம் கூறல்*

*(அவன் பெயர் யாதென்றால்) மேகந் தவழுகின்ற மதில்சூழ்ந்த மாபுர மென்னும் நகரத்திலிருந்து குறைவற்ற எட்டுத்திக்கிலுமுள்ள எல்லா அரசர்களும் தமது பாதங்களை வணங்க, அடைக்கல மென்றடைந்தவர்களை இரட்சித்துக் கொண்டு பகைவர்களாகிய வஞ்சகர்களைக் கோபிக்கின்ற மஹாராஜனென்னும் மன்னவன்.*

*4. அ.கை. அரசனது வீரம் கூறல்:*

*(அவனெப்படி பட்டவன் என்றால்) கற்பக விருக்ஷ நிழலிலிருந்து அரசாளுகின்ற இந்திரனைக் காட்டிலும் மிகுந்த செல்வமுடையவன்; உருவத்தில் மன்மதனைப் பார்க்கிலும் பேரழகினையுடையவன், திரண்ட கல்லைவிடப் பலமான தோள்களையுடையவன்; போர் முகத்தில் ஆண்சிங்கம் போன்றவன்; ஆண் வண்டுகளுடன் பெண் வண்டுகளும் பாட, தேனுடைந்து ஒழுகும்படி மலர்மாலை யணிந்துள்ளவன்; மூன்று லோகங்களையும் இரட்சிக்கின்ற ஆக்கினாசக்கரத்தை யுடையவன்.*

*5. வேற்றரசர்கள் வந்து தனக்குக் கட்ட வேண்டிய கப்பங்களைக் கொண்டு வந்து அளந்து குவிக்கின்ற தலை வாயிலையுடையவன்; எக்காலங்களிலும் முரசுவாத்தியங்கள் முழங்கும் மண வினைகளையுடையவன்; கரையை மோதுகின்ற திரைகளையுடைய கடல் போன்ற சேனைகளையுடையவன்; யானையைப் போன்ற பலமுடையவன்.*

6. வேற்றரசர்கள் மகுடங்கள் பட்டுவிளங்குகின்ற (தழும்போடு கூடிய) பாதங்களை யுடையவன், அக்கினி ஜொலித்துக் கொண்டிருக்கிற சக்கரப்படையைச் சுமந்த தோளினை யுடையவன், பகைவர்கள் செருக்கடைகின்ற நாளில் பலத்தை ஒழிக்கின்ற வாட்படையினை யுடையவன், கற்பக விருக்ஷத்தைப் போலவும் சங்க நிதி பதுமநிதிகளைப் போலவும் வரையாது கொடுக்கும் கொடையினை யுடையவன்.

7. அழகினையுடைய பெண்கள் சாமரங்களுடன் ஆலவட்டங்களை வீசவும், பவளம் போன்ற வாயினை யுடைய அரம்பாஸ்திரிகளையொத்த பெண்கள் தாம்பூலம் அளிக்கவும் முத்துப்போன்ற வெள்ளிய ஒள்ளிய தந்த பந்திகளையுடைய மாதர்கள் இசையோடு கூடிய ஒப்பற்ற நாட்டியமாடவும், உலகாளு மன்னர்கள் இருபுறங்களிலும் நின்று கொண்டு துதிக்கவும், ஓசையினையுடைய கடல்போன்ற சைன்னியங்கள் சூழ்ந்து நிற்கவும்.

8. தேவராஜனது கொலு மண்டபத்தைப்போல விளங்காநின்ற சபா மண்டபத்தில் அழகிய சிங்கங்கள் சுமந்த மலரணையின்மீது கொலுவிருந்து உலகத்தை மனு நீதிப்படி இரட்சித்து அளவற்ற போகங்களை அனுபவித்துக் கொண்டு அந்தப்புரத்தில் வாழ்கின்ற அவ்வரசற்கரசன்.

9. அ.கை. புத்திரன் இல்லாமல் மனோ வியாகுலம் அடைதலும்

துவாரத்தினையும் பிறைபோன்ற வளைவினையும் புள்ளிகளையும் இரண்டாயிரம் தோள்களையுமுடைய ஆதிசேடனால் சுமக்கப்பட்ட இவ்வுலகத்தை எனக்குப் பின்னர் ஆளுதற்கு உயர்வு பொருந்திய புத்திரர்கள், பெருமையினை யுடைய நமது சிறந்தவயிற்றில் வழி உண்டாக வில்லையேயென்று தேன் ஊறுகின்ற மாலையணிந்த மார்பினையுடைய அம்மன்னவன் மனோவியாகுல மடைந்தனன்.

10. அ.கை புத்திரப்பேறு உண்டாக ஸ்தல யாத்திரை:

கடவுள் மாநதிகளான கங்கை, யமுனை, சரசுவதி, நருமதை, சிந்து, காவேரி, கிருஷ்ணவேணி, தாம்பிரபரணி முதலிய நதிகளில் மூழ்கியும் பூப்பிரதட்சனம் செய்தலும்.

(அம்மன்னவன் புத்திராபேட்சையால்) கங்கை முதலான சிறந்த தெய்வீகமுடைய பெரிய நதிகளில் மூழ்கியும். தாமரையாசனனாகிய பிரமனையும், திருமாலையும் பவளம்

போன்ற நீண்ட சடையினையுடைய சிவ பெருமானையும் அழகிய கையால் பூசை செய்தும், பரதேசிகட்கு (அன்னதான முதலானவற்றை) அளித்தும், அக்கினிகளி லுயர்ந்த ஆகுதிகளைச் செய்தும், பூப்பிரதட்சணம் செய்தும், தேவர்கட்கு. இவ்வரசன் திருநீறிடு நெற்றி யினாய் ஸ்மிருதிவழி நடப்பவனாதலின், அயன் அரிஅரன் என்னுந் திரிமூர்த்திகளையும் புத்திரலாபார்த்தமாகத் தன்கைகளாற் பூசனை செய்தனன், ஸ்மார்த்தமதத்தினர் திரிமூர்த்திகளைக் காரியேசுவரர்களென்றும், மாயாப் பிரதி விம்பர்களென்றும், கருதுபவர்கள்.

11. அ.கை. (தக்கோர்க்கு தருவது தானம்) பதினாறு வகை கொடுத்தும் (பூ தானம், பரிதேர் யானை, பொன், வெள்ளி விளைவு, கன்னிகாதானம், தயிலம் எள், கலை, வத்திரம், பணி அடிமை இல்லம், கோதானம் அன்னதானம் கூறும் என் இருதானத்தின் ஏதானும் பலனும் இட்டு அன்னம் உண்பவர்களுக்கு அருளும் இவ்வூர் எண்ணும்படி 16, 10 தானங்களுடன்) பல தானங்களும்) ( எல்லோருக்கும் தருவது தர்மம்) 32 தர்மமும், கல்வி கற்க பள்ளிக்கூடம் , அந்தணர், புலவர், மருத்துவருக்கு தானம் ஈந்தும், ஆதுலர் சாலை, சோலை, ஆவின் வாயுறை, கண்ணாடி, ஓதுவார்க்கு உணவு, தண்ணீர் உறுபந்தல், மடம், தடாகம், கொலையுயிர் விடுத்தல், மாதவர்க்கு கண்ணோய் மருந்து, தலைக்கு எண்ணெய், கோதில் ஆவுரிஞ்சி (ஆடு மாடு தேய்க்கும் கல்) சுண்ணம், அ[illegible]மயத்தோர்க்கு உண்டி அழிந்தோரை நிறுத்தல், பிறர் அறம் காத்தல், ஐயம், பெண் போகம், மகப்பேறு உய்த்தல், நரியதோர் விலங்கு ஊண், வண்ணான் நாவிதன் சிறைச்சோறு, மறுதலத்து அறம் எண்ணான்கும் (32 தருமம்) தவறாது இயற்றினன்.

கோவில்களையும், சாலைகளையும், பார்ப்பண வீடுகளையும், நந்தவனங்களையும், அழகு பொருந்திய வாவிகளையும், கிணறுகளையும், தடாகங்களையும், அநேகமாகவுண்டாக்கியும், பொருந்திய சோடச மகாதானங் களுடன் இரணியதான முதலிய உயர்ந்த பத்துவகையான நல்ல தானங்களைச் செய்தும், முப்பத்திரண்டு வகையான தருமங்களைச் செய்தும் புத்திரன் உண்டாக.

அநேகவிதமான தவங்களைச் செய்து அம்மன்னவன் ஒரு புத்திரனைப் பெற்றவனாயினன். (புத்திரசந்தான முண்டானதால் அவன்) உடனே இனி நான் பிறவியை யொழித்தேன். எனக்கு மேலாகிய நல்ல பதமும் உண்டென்று மகிழ்ந்து, ஜாதகர்மங்கள் முதலியனவாகவுள்ள விடாமற் செய்ய வேண்டிய எல்லாக் கருமங்களையும், விசேஷமாகவே செய்து (அப்புத்திரனுக்கு) நல்ல மஹாராஜனென்று நாமகரணஞ்சூட்டி. ஒருவனுக்கு புத்திரன் உண்டானாலவன் சுவர்க்காதி புண்ணிய லோகங்களை யடைவானே யன்றி மோக்ஷமடையமாட்டான். ஒருவனுடைய பசிப் பிணி ஒழிதற்கு மற்றொருவன் உணவருந்துதல் போலவன்றோ ஆகும். புத்திரசந்தானத் தாலுண்டாகிற மோக்ஷம், ஜனங்கள் சொர்க்காதி போகஸ்தானங்களையும் மோக்ஷஸ்தானமாகக் கருதுதல் வழக்கமாதலின் மகன்றோன்றின சந்தோஷத்தால் தந்தை பவமொழிந்தேன் என்பதனினும், இதற்குப் பிறவியினின்றும் நீங்கினேன். என்பதனினும், பாவத்தினின்றும் விடுபட்டுப் புண்ணிய மிகுதியுடைய வனாதற்குப் புத்திரசனனமொரு காரணமாதலின், பாவத்தினின்றும், நீங்கினேனென்றான் என்பதே சாலச் சிறப்புடையதாம்.

பல மொழிதற்கு, இருவினை ஒப்பு மலபரிபாகம் சத்திநிபாதம் குரு தரிசனம் தத்து வவிசாரம் ஆத்மாநுபவமாகிய காரணங்களாம். இவற்றின் விரிவினை விளக்கமாகப் பின்னருரைக்குமிடந்தோறுங் காண்க.

13. அ.கை குருகுல வாசம், செய்வித்தனன் அரசன் நல்லாசிரியரைத் தேர்ந்தெடுத்தார். உயர் குடிபிறப்பு, அருள் உள்ளம், தெய்வ வழிபாடு ஆகியவற்றால் பெற்ற மேன்மை, பல்வகை நூல்களைக் கற்ற அறிவும், மாணவர்க்கு எடுத்துக் கூறும் சொல் ஆற்றலும் பெற்ற, நிலம், மலை துலாக்கோல், மலர் ஆகியவற்றின் குண நலங்களையுடையோராகி உலகிய லறிவும் ஆகிய உயர்குணம் உடையோரே நூலைக் கற்பிக்கும் நல்லாசிரியர்கள்.

நிலம்

பிறரால் எளிதில் அறிய முடியா உருவத்தின் பெருமையும், தன் மீது பெரும் சுமையிருப்பினும் கலங்காத வலிமையும்,

தன்னைத் தோண்டுவோரையும் தாங்கும் பொறுமையும், பருவத்தில் உழவர் செய்யும் முயற்சிக்கு ஏற்ப பயனைத் தரும் தன்மையும் கொண்டது நிலம்.

நிலத்தின் தன்மைகள் போல் ஆசிரியருக்கு பிறரால் அறியப் படாத கல்வி அறிவும், தம்மோடு வயதில் நெருங்குபவரிடம் கலங்காத வலிமையும், தன்னிடம் இகழ்தல் போன்ற தவறுகள் செய்யும் மாணவர்களிடம் பொறுமையும், தன்னை அடுத்து வரும் மாணவர்களின் முயற்சிக்கு ஏற்ப பயனையும் தருபவராக விளங்க வேண்டும்.

மலையின் இயல்பு

அளக்கமுடியாத வடிவம், அளப்பரிய பொருள்களைத் தன்னிடம் கொண்டு யாராலும் அசைக்க முடியாத உருவத்தினையும் எங்கிருந்து நோக்கினும் காணப்படும் உயர்ச்சியையும், மழை இன்றி வறண்ட காலத்தும் தன்னைச் சார்ந்த உயிர்களுக்கு நீர் வளத்தையும் அளிக்கும் தன்மை கொண்டது மலை. அம்மலையின் தன்மைபோல் அளவிட முடியாத கல்வி அறிவும், பலவகை நூற்பொருள்களும் பெற்றும், எத்தகைய புலமையுடையவராலும் வெல்ல முடியாத கல்வியுடையவராய், வெகு தொலைவில் உள்ளாராலும் அறியப்படும் பெருமை பெற்று பொருள் இல்லா காலத்தும் தன்னை நாடிவரும் மாணவர்கட்கு கல்விச் செல்வம், வழங்கிடும் தன்மைகள் பெற்றவர் நல்லாசிரியர்.

நிறைகோல் -தராசுக்கோல்

ஐயம் நீங்கும்படியாக நிறுத்தப்படும் பொருள்களின் அளவைக் காட்டலும், உண்மையைப் பெற இருதட்டுகளின் இடையே நிற்றலும் தராசுக்கோலின் குணங்களாகும். அதுபோல் சந்தேகம் நீங்கும் வகையில் சொற்களின் பொருளை விளக்குதல் மாறுபட்ட இரு புலவரில், உண்மை நிலை உணர, நடுநிலை நிற்றல் ஆசிரியர் குணங்களாகும்.

மலர் குணம்

நற்காரியங்களுக்கு உரியதாகி, யாதொரு செயலும், தானில்லாமல் முடியாது என்ற நிலை பெற்று, கண்டோர்

யாவரும் மகிழ்ந்து குடிக்கொள்ளும் மெல்லிய தன்மைபெற்று மலரவேண்டிய காலத்தில் முகைவிரிதலை உடையது பூ.

அதுபோல, ஆசிரியர்களும் நற்காரியங்களுக்கு உரியோராகி, தானின்றி செய்ய இயலாநிலைபெற்று, கண்டோர் யாவரும் களிகொண்டு ஏற்றுக் கொள்ளும் குணமுடைய பேராய் பாடங் கற்பிக்கும் நேரத்தில் மலர்ந்த முகத்தோராய் விளங்க வேண்டும்.

ஆசிரியர் ஆகாதார்

கற்பிக்கும் குணம் இல்லாமை, இழிகுண இயல்பு, பொறாமை, பிறர் பொருள்மேல் பேராசை, உண்மையினை மறைத்து பொய்ப்பொருள் காட்டி வஞ்சித்தல், அச்சம் தரும்படி, பேசுதல், கழற்குடம், மடற்பனை; பருத்திக் குண்டிகை முடத்தெங்கு ஆகியவற்றிற்கு ஒப்பான குணங்கள் மாறுபட்ட கருத்துக்கள் கொண்டிருத்தல் ஆகிய குணங்களைப் பெற்றிருப்பவர்கள் ஆசிரியர் ஆவதற்கு தகுதியற்றவர்கள்.

கழற்குடம்

தன்னுடன் முறையாகப் போட்ட கச்சக்காய்களை அம்முறையிலிருந்து மாறி முன்னது பின்னதாகவும் பின்னது முன்னதாகவும் அளிக்கும் தன்மை கொண்டது. அதுபோல் தான் கற்ற முறையிலிருந்து பிறழ்ந்த நூல்பொருள்களை முன்பின்னாகக் கூறும் தன்மையுடையோர் ஆசிரியராகார்.

மடல் பனை

பனையின் மடல் கூரிய கிழிக்கும் தன்மையால் யாவரும் நெருங்கி பழத்தினைப் பறிக்க இயலாது தானே தன்னிட முள்ள பழங்களைத் தந்தால்தான் பெற முடியும். மடற்பனையின் தன்மை இது.

அதுபோல் தன்னிடமுள்ள நூற்பொருளைக் கற்பித்தாலன்றி, நெருங்கிவந்து அறிய விரும்புவோரிடம் கற்பிக்காத தன்மையுடையோர் ஆசிரியராகார்.

பருத்திக் குண்டிகை

பருத்தியைக் கொள்ளும்போதும் வருத்தத்துடன் சிறிது சிறிதாக அடைத்துக் கொண்டு, பிறர்க்கு அளிக்கும்போதும், எளிதில் தராத குணமுடையது பஞ்சு குடுக்கை. அதுபோல் கற்கும்

காலத்தும் வருத்தத்துடன் சிறிது சிறிதாகக் கற்று பிறர்க்கு அக்கல்வியை எளிதில் அளிக்காத குணமுடையோர் ஆசிரியராகார்.

முடத்தெங்கு

வேலிக்கு வெளியில் வளைந்த தென்னை மரம் நீர் விடுதல்போன்ற பல்வகை உதவிகள் செய்து தன்னை வழிபடுவோரை விடுத்து பிறர்க்குத் தன்காய்களைத் தரும். அதுபோல் பொருள் முதலியன தந்து தன்னை வழிபடும் மாணவர்களை விடுத்து பிற மாணவர்கட்கு கற்பிக்கும், முடத்தெங்கு பண்பினோர் ஆசிரியராகார்.

பாடம் சொல்லும் முறை

ஏற்ற காலமும், இடமும் அறிந்து தான் வழிபடும் கடவுளை வாழ்த்தி, தான் கற்பிக்க வேண்டிய நூற்பொருளை, உள்ளத்தில் கொண்டு விரையாமல், கோபிக்காமல், மாணவரின் அறிவின் தன்மையறிந்து அவன் உள்ளம் ஏற்றுக் கொள்ளும் வகையில் நூலைக் கற்பித்தலாகும்.

மாணவர்

தன் மகன், தன் ஆசிரியர் மகன், பொருள் கோடுப்போர், தன்னை வழிபாடு செய்வோன், தான் கூறும் உரையை விரைவில் கற்கும் அறிவுடையோன் ஆகியோர்க்கு சொல்லப்படுவது நூலாகும்.

வேதமார்க்கத்தில் சொல்லப்படுகின்ற ஞானாதி உயர்குணங்களை அடையக் கற்கின்ற அந்த அறுபத்து நான்கு கலைகளையும் மேன்மைபெற அறிவித்த குற்றமற்ற ஆசிரியருக்கு மேகத்தைப்போல திரவியங்களை அவர் போதுமென்று கூறும் வண்ணம் தக்ஷிணையாக அளித்தனன். குருகுல வாசஞ்செய்து எல்லாக் கலைகளையும் முற்றும் உணர்ந்த பிரமசாரியானவன் குருதக்ஷிணை கொடுத்துக் குருவினை சந்தோஷப்படுத்தி ஆசி பெற்றுச் செல்லவேண்டும். முறைப்படி இம்மகா ராஜனும் கலைகளை யுணர்ந்துப்ரமசர்ய வ்ரதமுடித்துத் தந்தையாலளிக்கப்பெற்ற மிகுதியான திரவியங்களைக் குருதக்ஷிணையாக அளித்து ஆசியும் விடையும் பெற்றுத் தந்தையிடஞ்சென்றான் என்றுணர்க.

யிருந்துகாட்டலை. இ:தேனைய ஆசிரியராற் கூடாமையின், ஞானகுருதேசிகனை என்றார். தானெனல்-ஞானாஞ் ஞான ரகிதநிலையை யென்க; ஈரிடத்துஞ் சாட்சியாநிற்றலின்.

அவையடக்கம்

ஓதுசுரு திகணான்கி னுபநிடத
மெண்ணான்கி னுரைக டோய்ந்து
போதுமொரு வேதாந்த சொரூபானந்
தப்பெயரைப் புனைந்த நூலி
னீதிபெரி யோருரைப்ப வதனையன்போன்
றில்லாத நெஞ்சி னால்யா
னாதரவு கொடுபிதற்றி யெனதறியா
மையையும் வெளி யாக்கினேனே.

(இ-ள்) ஓது சுரு திகணான்கி னுபநிடத மெண்ணான்கி னுரைகடோய்ந்து சான்றோர் அத்தியயனஞ் செய் தற் கியைந்த நான்கு வேதங்களிலும் முப்பத்திரண்டு உபநிட தங்களிலுமுள்ள சொற்பொருளோ டகலாது நின்று, போது மொரு வேதாந்த சொரூபானந்தப் பெயரைப்புனைந்து நூலி னீதி பெரியோருரைப்ப வதனையன்போன் றில்லாத நெஞ்சினால், மாறின்றி வருகின்ற ஒப்பற்ற வேதாந்த சொரூபானந்த மென்னும் பெயரைத்தரித்த ஞானநூலின் வாச்சியார்த்த லட்சியார்த்த நெறியை மகத்துக்கள்சொல்ல அந்நிலையை அந்நெறித்தாகச் செல்லும் அன்பு சற்றுமில்லாத மனதினால், யானாதரவுகொடு பிதற்றி யெனதறியாமை யையும் வெளியாக்கினேன் மிக்க திறமையுடையோன்போல் யானாசைகொண்டு பாடலாகப்பிதற்றி அதனோடெனதறியாமையையும் பிறனறியச் செய்தனன் எ-று

ஏ - அசை, "பொழிப்பெனப் படுவது பொருந்திய பொருளைப், பிண்டமாகக்கொண்டுரைப்பதுவே" என்பத னால் பொழிப்புரையாக்கினாம், இ:துரையாசிரியர் தொல்லை மரபாதலின். வேதம் நான்காவன: இருக்கு, தைத்திரியம், சாமம், அதர்வணமென்பன. உபநிடத மெண்ணான்காவன: சீருத்திரம், பிரகதாரண்ணியம் முதலியன, சொரூபாநந்த மாவது ஞெப்திப்பிரியத்தை. எனவே, அறிவானந்தமாயிற்று. ஆகவே, அறிவன்றி ஆனந்தமும் ஆனந்தமன்றி

அறிவுமின்றாம். உண்டெனின், உபாதி ரகிதத்தா லெங்ஙனம் இயையும்? சகிதத்தாலெனின், அறிவானந்தம்போல் உபா தித்திரயங்கள் சச்சிதானந்தமாதற் கியையாவென்க. ஆதலி னேகமெனக் கண்டாம். காணவே, எகமேவாத்வைதம் பிரம்மோகம் என்பதே துணிவெனப் பெற்றாம். பிதற்றலாவது எழுத்தசை முதலிய எண்ணிலக்கணங்கட்கு முரணுதலாம். எனதறியாமையாவது ஆதிமத்தியாந்த ரகிதத்திற்குச் சகிதமாகக் கூறுமிலக்கணம் முரணுதலாம். வெளியாக்க லென்பது பாடுதற்கும் இந்த விஷயத்தை ஆளுதற்கும் பாத்திரனல்ல னென்பதைக் குறிப்பிக்கின்றது. எனவே, பாத்திரர் நீதி பெரியோரென்றாயிற்று. ஆதரவு கொடு என்றதனால் அ∴து அகங்காரத்தா லன்றெனக் குறிக்கின்றது. அறியாமையையு மென்பதிலும்மை இறந்தது தழீஇய இழிவு சிறப்பு. இந்நூலவனதருளா லமைந்ததெனக் குறிப்பிக்கின்றது அருத்தாபத்தி.

பாயிரம் முற்றிற்று.

# உபநிடதம்.

நூல்

ஞானசாதனநிலை

1. எண்சீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்

பொன்போல விலங்குமனஞ் சஞ்சலத்தாற் குரங்காம்
புத்திவிசாரித்தறியும் பொலிவதனா லரவாந்
தன்போல விலையெனலா லகங்கார மதமாந்
தனைநிகராஞ் சித்தமொரு தன்மையினா னாயா
மின்போலுஞ் சலனமன மசையாம னிறுத்தி
விசாரிக்கும் புத்தியினை மெய்ப்பொருட்பால் விடுத்து
வன்போடு வருமகங்கா ரத்தினையுங் கடிந்தால்
வைத்தவிடத் திருந்துசித்த மகத்துவமுந் தருமே.

(இ-ள்) பொன்போல விலங்குமனஞ் சஞ்சலத்தாற் குரங்காம் புத்திவிசாரித்தறியும் பொலிவதனா லரவாம் (எ-து) மாற்றுயர்ந்தபொன்போல மலரகிதமாகவிளங்கும் மனமெனப் படுதல்யாதோ அது பகிர்முகத் தாயவழி யியல்பாக வெய்துஞ் சஞ்சலத்தினால் குரங்கு போல்வதாகும். அதன் திரிபாகிய புத்தியெனப்படுவது காரியங்களை விசாரித்தறியும் மிகுதியினால் கட்செவிபோல்வதாகும், தன்போல விலையெனலா லகங்கார மதமாத்தினைநிகராஞ் சித்தமொருதன்மையினால் நாயாம் - எ-து அப்புத்தியின் திரிபாகிய அகங்காரமெனப்படுதல் தன் னைப்போல ஒருவருஞ் சமானமில்லை யெனக்கோடலால் மத யானை போல்வதாகும், அவ்வகங்காரத்தின் திரிபாகிய சித்த மெனப்படுதல் இழிவில் தனக்குத்தானே நிகரெனப்படும் ஓரேதுவினால் காய்போல்வதாகும் ; மின்போலுஞ் சலனமன மசையாமனிறுத்தி விசாரிக்கும் புத்தியினை மெய்ப்பொருட் பால் விடுத்து - எ-து மின்போலத்தோன்றி மறைதலையுங் கணமேனும் நில்லாது சலித்தலையு மியல்பாகவுடைய அந்தமனதை அந்தர் முகத்தாயவழிச் சற்றுஞ் சலியாமனிறுத்திப் பொய்ப் பொருளையே நிஜமென விசாரித்துழலும் புத்தியெனப்படுவதை மெய்ப் பொருளாகிய சைதன்யத்தின்கண் விசாரிக்க விடுத்து, வன்போடு

வருமகங்காரத்தினையுங் கடிந்தால் வைத்தவிடத் திருந்து சித்த மகத்துவமுந்தரும் - எ-து விடயவலிமை கொண்டு பிறந்திறந்து வருதற்குரிய அகங்காரத்தையும் நாசப்படுகித்தினால் சித்த மெனப்படுவது விசாரித் திலக்காக வைத்த அந்தச் சைதன்யத் தினிடத்தில் பிறழாதிருந்து நவநவமாய மேலாய நிலைகளையும் ஏகமாக நிற்கு மகத்துவத்தையுந் தந்தேவீடும்- எ-று.

ஏ-ஈற்றசை. பொன்போல விலங்குமனமென்பது முதல் நாயாமென்பது காறும் விஸ்மரணை யெனவும், மின்போலுஞ் சலனமனமென்பது முதல், சித்தமகத் துவமுந்தருமென்பது காறும் தஸ்மரணையெனவுங்கொள நின்றது ஓர் ஸ்மரணையே யெனக் குறிக்க அத்தியாரோப அபவாத யுத்தியை யிக் கவி காட்டிற்றென்க. சஞ்சலமுதலிய புடைபெயர்ச்சிகளை உன் னுமிடத்துத் தொழில் சாதாரண தர்மமாகக் காண்டலின் இந்நான்குஉவமையும் பொருந்தும். இந்நான்கு புடை பெயர்ச்சியும் ஒவ்வோர் முதலியனதாகக் காண்டலேயன்றி விசாரிப்பழி யின்றாதலின் மனமுதலிய நான்கும் அவ்வவ் வவசர நிலையாமென்க. கண்ணே செவியாகச் சகல மந்திரங்களையு மறிதலால் பாம்பையும், கஞ்சிவார்க்கிறவன் பின்னே திரிதலால் நாயையும், உவமையாகக் கூறியவாறுகாண்க. நிறுத்தி விடுத்து கடிந்தால் தருமெனக்கூட்டி முடிக்க. மகத்துவமு மென்பதிலுள்ள உம்மை இறந்தது தழீஇய வெச்சவும்மை யாதலால் நவநவமாய மேலாய நிலைகனென்றாம். ஞானம், மனம், புத்தி, சித்தம், அகங்கார மென்பற்றுள், ஞானமய லாயவழிச் சஞ்சலமுதலிய நான்குபுடை பெயர்ச்சியையுமேற்று அவ்வவற்றிற்கு வினைமுதலாக மனமுதலிய நான்கையுங் கொண்டவா றெங்ஙனமோ அதுபோலப் பொன்போல விலங்குதலாகிய புடைபெயர்ச்சியையேற்று வினைமுதலாக நிற்பது ஒன்றுளதாகக் கோடல்வேண்டு மாதலின் ஞானமென்றாம். அன்றேல், இலங்குதல் யாதின்புடை பெயர்ச்சி? பொன்போல் வெனல் யாதிற்குவமானம்? ஆதலின் மறுக்குதும். அயல்மயமாகாதுழி ஞானமெனக்கோடற்கு முரணென்னை? பொன்போலிலங்கல் மனமெனற்கு விசேடமாநிற்பதெனின்,

*அவ்வவசரஞ் சுத்தமன மெனலாயிற்று. ஆகவே, ஞானமென்றாம். மருளாயவழி மருண்மயமாதலுந் தெருளாயவழித் தெருண்மயமாதலும் ஞானமாதலினோக்கும். தன்மருளை யன்றி அநிர்தசடதுக்கமும், தன்தெருளையன்றிச் சத்துசித்தானந்தமும் இல்லையாதலின் ஞானமெனற்கு ஐயமின்றென்க. ஊர்த்த முகமாயவழி மனமுதலிய நான்குபேரு மத்தியாச மெனற்கியைதலின் அத்தியா ரோபமெனவும் இவை யனைத்தும் விசாரித்துத் தெளிந்துழித்தானாகக்காண்டலின் அபவாதமெனவும் போந்தவாறுகாண்க. மெய்ப்பொருள் என்றதனால் பொய்ப் பொருளெனவருவித்தாம். பொய்ப் பொருளிலக்கு கொதுகிலக்கையும், மெய்ப் பொருளிலக்கு மலையிலக் கையும் போல்வதாகலின், புத்திதனைமெய்ப் பொருட்பால் விடுத்து எனப்பட்டது. அகங்காரத்தினைக் கடிதலாவது ஞானகதப் பிரத்தியட்சத்தில் சதோதயமாக விளங்குஞ் சைதன்யத்தை யிடைவிடாது. கண்டு இதுநாளிது நானெனப்பழகுங்கால் முன்போல உடல் நானென வந்துழி அதனைக்கடிந்துகோடலை; அறிவேவடி வாயிருக்க வேண்டுதலைப் பற்றி மலையிலக்குப்போல்வதின், வைத்த விடத்திருந்து சித்தம் மகத்துவமுந் தருமெனற்கு முரணென்னை? இன்றாதலாலெவர்க்கு முடன்பாடாமென நோக்கியிங்ஙனங் கூறினாரென்க. வாளர புத்தியென்னாது விசாரிக்கும் புத்தி என்றதனால் நம்பிக்கையாலிது மெய்ப்பொருளெனக்கோடற்க. கொள்ளின், பூர்வபட்சத்திற் கியையும்; இயையின், முன்போல அநிர்தசடதுக்கத்தைச் சச்சிதானந்தமாகக் கொண்டலைய வேண்டி வருமென்க. விசாரித்தற் கியைந்த கருவி சிரவண முதலியவை.*

*இவவுபநிடதத்தினொவ்வொரு கவியும் அணுவைத்துளை த்தேழ்கடலைப்புகட்டிக் குறுகத்தறித்ததுபோலு மாதலின், இந்நூலையுணரப்புகுவார் கல்விகேள்விகளில் எத்துணையா யிருக்க வேண்டும்? ஆதலின் இறுமாக்காதடங்க வேண்டும். (க)*

*இதனை இ:தறியுமெனல்.*

2. அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்

சத்தமுதலைந்தனையும் பொறிகளறி
யும்பொறிக டம்மைத் தானா
யொத்தகர ணமதறியுங் கரணத்தை
யறியுமுயி ருயிரைத் தானு
நித்தியமா யிருந்தறியுஞ் சாட்சியகண்
டாகார நீங்கிமேலா
யித்தனையும் பகுத்தறியு மறிவுவடி
வாயிருப்பதியல்ப தாமே.

(எ-ள்) சத்தமுதலைந்தனையும் பொறிகளறியும் பொறி கடம்மைத்தானா யொத்த கரணமதறியும் - எ-து சத்தபரிச முதலிய ஐந்துவிடயங்களையும் நேராநின்று அதததற்குரிய பொறிகளறியும், அங்ஙனமறியுமப்பொறிகளை அவை தானாக ஒத்துநின்ற அந்தக்கரணமாகிய மனமறியும்; கரணத்தையறியுமுயிருயிரைத்தானு நித்தியமாயிருந்தறியுஞ் சாட்சி -எ-து அந்த மனதை உயிரறியும், அந்த உயிரையுஞ் சீவசாட்சி சதோதயமாக நின்றறியும்; அகண்டாகார நீங்கிமேலாயித்தனையும் பகுத்தறியு மறிவு வடிவாயிருப்ப தியல்பதாம் -எ-து அந்தச்சீவசாட்சியை அகண்டாகாரமா நின்றுள்ள ஈசுர சாட்சியாகிய பிரமமறியும், அந்த ஈசுரசாட்சியாகிய பிரமநிலையுங் கழன்று அதததற்கு மேல்மேலாகநின் றித்தனைநிலைகளையு மொவ்வொன்றாகப் பகுத்தறியநின்றது எந்த அறிவோ அந்த அறிவே வடிவாயிருப்பது நமது சுபாவநிலையாம் - எ-து.

ஏ-ஆசை இந்திரியம், கரணம், சீவன், கூடஸ்தன், ஈசன், பிரமம், அறிவு எனபவற்றுள், அறிவொழிய வேனையவற்று ளொவ்வொன்றும் ஒன்றுக்குத் திருக்காயும் மற்றொன்றுக்குத் திருசிய மாயுமிருத்தற்கு இயையுமாறு போன்று அறிவியையா திருத்தலின் இத்தனையும் பகுத்தறியும் மறிவுவடிவாயிருப்ப தியல்பதாம் என்றார். எனவே, அறிவையன்றி யித்தனை பகுப்புமின் றென்பதாயிற்று . ஆகவே, இத்தனை பகுப்புகளுள் ஒவ்வொன்றையு அவரவர்க்கும் எட்டியவளவாகச் சென்று தீர்ந்தநிலையென விறுமாந்திருத்தலைத் தவிர்ந்திருத்தற்கு எனக்கண்டாம் அறிவின் பிரதிபலனமே யன்றி அறிவு திருக்கு திருசியமெனற்கியையாதது பற்றி இங்ஙனங் கூறினாரென்க. சுத்தமுதலிய வைந்து விடயங்களுள், ஒவ்வொன்றுக்கும்

அதற்குரிய இந்திரியங்களிருக்குமாறு போன்று அப் பொறிகளை அறிதற்கு மனம் ஐந்தலைநாகம் போலவை தானாயிருத்தலினானுந் தன்னையன்றி அப்புலன்களிருந்துந் தத்தம் விடயங்களை அறிதற்கேலாததானும் பொறிகடம்மைத் தானாயொத்த கரணமது என ஒருமையிற் கூறினார். இங்ஙன மெவ்வெவ்வுயிர்பாலும் அனுபவம் நிகழ்தலாலென்க. பொறிகடம்மை யெனப்பன்மையிற்கூறிக் கரணத்தையென ஒருமையிற்கூறியது தக்க உதராணமெனக் கண்டாம். உபா திபற்றி ஏகதேசாகாரம் உயிரெனவும் அகண்டாகாரம் ஈசனெனவும், சாட்சியெனல் பற்றிக் கூடஸ்தனெனவும், உரை கொண்டாம். அகண்டகாரம் என்றதனா லேகதேசாகார மெனற்கு முரணென்னை? இந்நிலைகளனைத்தும் பூர்வபட்ச மாதற்கு யோக்கியதையா நிற்றலின், நீங்கி என்றார் எவரெவ ரெந்தெந்த மேலாயநிலைகள் சொல்லுனுமிவற்றுளடங்கு மாதலினானு மங்ஙனம் அந்தந்தநிலையாய் அந்தந்த வவசரத்தி லிருப்பது தானாதலினானும் நீக்கியெனப் பிறவினையாக்கூறாது நீங்கி என்றார். இதனாலகண்டாகாரம் ஐந்தாம் வேற்றுமை நீங்கற்பொருடா நின்றதெனப் பெற்றாம். நித்தியமாயிருந்தறிதல் சாட்சிக்கியல்பாதலி னிருவகைச் சாட்சியென்றாம் (2)

தம்மாலறியப்படுபவை தாமாகாவெனல்.

3. எண் சீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

விடையமறிந் திடும்பொறிகள் விடய மாமோ
மிக்கபொறி யறிகரணம் பொறிகளாமோ
வடையவறி சீவனந்தக் கரண மாமோ
வதனையறிந் திடுஞ்சாட்சி சீவ னாமோ
தடையறவொன் றனையறி்யு மொன்று மேலாஞ்
சாட்சியையொன் றாலறியத் தகுமோ தானா
யிடையறவொன் றிலகுமெனி லதனைக் காண்டற்
கேதுண்டா மதுவா

கியிருந்து காணே.

*(இ-ள்) விடைய மறிந்திடும் பொறிகள் விடயமாமோ மிக்க பொறியறி கரணம் பொறிகளாமோ - எ-து விடயங்களை அறிதற்கியைந்த இந்திரியங்கள் விடயமாதற் கியையுமா, அங்ஙன மேலாநின்ற புலன்களை அறிதற்கியைந்த மனம் இந்திரியங்களாகுமா அடையவறி சீவனந்தக் கரணமாமோ வதனை யறிந்திடு சாட்சி சீவனாமோ-எ-து ஒருங்கறிதற் கியைந்த சீவனென்பது மனமாதற் கியையுமா, அந்தச்சீவனை யறிதற்கியைந்த சீவசாட்சியாகிய கூடஸ்தன் சீவனாதற் கியையுமா; தடையறவொன் றனையறியு மொன்று மேலாஞ் சாட்சியை யொன்றாலறியத்தகுமோ - எ-து தடையின்றி ஒவ்வொன்றனையு மறிதற்கியைந்த ஒவ்வொன்றும் மேலாகச் செல்லுமாயின் எவற்றிற்கு மேலாநின்ற சாட்சியை வேறொன்றாலறிதற்குத் தக்கதாமோ; தானா யிடையறவொன் றிலகுமெனி லதனைக் காண்டதற்கேதுண்டா மதுவாகி யிருந்து காண் - எ-து தானேதானா யிடைவிடாமல் ஒப்பற்ற சைதன்யஞ் சதோதயமாக விளங்க்க்கொண்டிருக்குமெனச் சுருதி யுத்தி அனுபவமேற்குமென்லதனைத் தர்சித்தற்கெது ஓர் முதலாக வுள்ளது. இன்றாதலின் அதுவே தானாகியிருந்து காணுதி - எ.று*

*ஏ-அசை, இ:தறிவுக் கறிவென்னும் ஆகமத்தை மறுத்ததுஅநவத்தாதோட முறுதற் கியைதலின். அறிதற்றன்மை யனவாகிய புலன்கள் அறியப்படுந் தன்மையனவாகிய சத்த முதலிய விடயங்களாகுமாயின் கரணங்கள் புலன்களாகவும் ஜிவன் அந்தக்கரணமாகவும் கூடஸ்தன் ஜீவனாகவும் ஆகலாம். ஆதலின் சுவானுபவமில்லாதார் ஜீவசாட்சியாகிய கூடஸ்த நிலை யொன்றுளதாக வுற்றுவிசாரித்தறியாது அதனை ஜீவனெனக் கோடல்தவிர்தற்கும், இவ்வாறாக மேல்மேலொன்றையொன் றறியுமாறு போன்று ஜீவசாட்சியாகிய கூடஸ்தனையு மறிதற்கு வேறொன்றிருக்கவேண்டுமே யென்று சங்கைவரா ததற்கு இயைந்த நிலைகூறி யதை மறுக்காதேற்றற்கு மிங்ஙனங் கூறினாரென்க. சாட்சியென்றதனாலதனினும் மேலாய நிலையின்றென்பதாயிற்று. ஒன்றையொன்றறிவதாக மேல் மேல் சேறல் யுத்திபூர்வகமும், அங்ஙனஞ் செல்லவொட்டாது தானே அமையச்செய்வது ஞானகதப்*

*பிரத்தியட்சானுபவமுமாம். அறியத்தகுமெனக் கோடல் யுத்தி பூர்வகமெனவும், அறியத்தகுமொ வெனமறுத்தல் அனுபவ பூர்வகமெனவுங் கோடற்கியையுமாறு காண்க. ஆகாயத்துக்குமேல் வேறாகாய மில்லாவாறு போன்றிருத் தலின், சாட்சியானது தானாயிடையற நின்றிலகுமெனி லதனைக்காண்டற் கேதுண்டா மதுவாகி யிருந்து காணே எனப்பட்டது. அந்தப் பிரத்தியட்சாநுபூதி யிழப்பே இவ்வாறாயபேதமெனக் காட்டற் கிக்கவி கூறப்பட்டதென்க. எனவே, அனுபூதி யில்லாவிடத் திவ்வையந்திரி பறாவெனக்கண்டாம். இக்கவியிலுள்ள ஐந்தோகாரமும் எதிர்மறை.*

### 4. விருத்திஞானத் திரய வியல்பு

*மேயமனோ விருத்தியகண் டாகார விருத்தி விவேக*
*கவிருத் தியொடிவையே விருத்திகண் மூன்றாகு*
*மாயமனோ விருத்திவிட யாஞ்ஞானம் போக்கி*
*யவ்விடயந் தோற்றுவிக்கு மகண்டமெனும் விருத்தி*
*தூயசிதஞ் ஞானத்தைப் போக்கியச் சாட்சியையே*
*தோற்றுவிக்கும் விவேகவிருத் தியுமகண்டாஞ் ஞானம்*
*போயிடச்சீ வன்சாட்சி பூரணமோ தானாம்*
*போதநிலை பொருத்துமெனப் புகன்றிடுநான் மறையே.*

*(இ-ள்) மேயமனோ விருத்தியகண் டாகார விருத்தி விவேக விருத் தியொடிவையே விருத்திகண் மூன்றாகும்- எ-து என்று மியல்பாயுள்ள மனோவிருத்தி அகண்டாகார விருத்தி விவேகவிருத்தி யெனக் கூறப்படும் இவைகளே விருத்தி ஞானம் மூன்றெனப்படுவனவாம்; ஆயமனோவிருத்தி விடயாஞ்ஞானம் போக்கியவ்விடயந்தோற்றுவிக்கும் - எ-து அங்ஙனமாய மனோவிருத்தி ஞானமெனப்படுவது கடாதி விடயங்களை மறைத்திருந்த அஞ்ஞான மி:தெனக்காட்டி, அதனைப்போக்கி, அவ்விடங்களி னெதார்த்த நிலைமை யி:தென விளக்கி விடுதற்பாலதாம்: அகண்டமெனும் விருத்தி தூயசிதஞ் ஞானத்தைப் போக்கியச் சாட்சியையே தோற்று விக்கும் - எ-து அகண்டாகார விருத்திஞானமெனப் படுவது நிர்மலமான சைதன்யத்தை மறைத்திருந்த அஞ்ஞானமாகிய அவித்தை கெடச்செய்து ஜீவனுக்குச் சாட்சியா நின்றுள்ள தனுபவத்தில் முரணுதற்கென் செய்வர். அது பொருந்தாதென்க.*

கூடஸ்தனை மாத்திரம் விளக்கிவிடுதற் பாலதாம் ; விவேக விருத்தியு மகண்டாஞ் ஞானம்போயிடச் சீவன் சாட்சி பூரணமே தானாம் போத நிலை பொருத்துமெனப் புகன்றிடு நான் மறை - எ-து விவேக விருத்தி ஞானமெனப்படுவது அகண்டாஞ் ஞானமாகிய மாயையெனல் இன்னதிசையெனக் காணா மற்போகச்செய்யும், செய்வதுமன்றி அதனாலம்மாயை போக வே சீவசாட்சியாகிய கூடஸ்தனு மீசுரசாட்சியாய்ப் பரிபூரண மாக விளங்கும் பிரமமுந் துவிதமுறா தேகமாதற் கியைந்த போதநிலையையும் வரச்செயற் பாலதாமென நான்கு வேதங்களும் முறையிடும். எ-று.

ஏ-அசை, விடயாஞ் ஞானத்தைப் போக்கலாவது தத்தமக்கெனச் சுயம்பா யோர்பொருளின்மையைக் காட்டலை. தூயசிதஞ்ஞானத்தைப் போக்கலாவது வியட்டியுபாதி சகிதமா நின்றுணருஞ்சைதன்ய மி:ெதனக் காணவொட்டாமல் மறைக்கும் மறைப்பு தனதேகதேச மருளையன்றிவேறொன்றின்றெனக் காட்டலை. அகண்டாஞ் ஞானத்தைப் போக்கலாவது சமட்டியுபாதி சகிதமா நின்றுணருஞ் சைதன்யமி: தெனக் காணவொட்டாமல் மறைக்கும் மறைப்பு தனதகண்ட மருளை யன்றி வேறின்மையெனக் காண்டலையெனக்கொள்க. விடயாஞ் ஞானமுள்ளவளவும் அவித்தையும் மாயையு மெங்ஙனமகலும்? விடயமாவது கருத்துப்பொருள் காட்சிப் பொருளாகிய திணைபாலிடங்களை. இங்ஙனம் விசாரித்துத் தெளிந்துழி அறிவை யன்றி விருத்திஞானத்திரயமு மிங்ஙனங்கோடற் கியைந்தமருளும் வரற்கிடமின்றாம். இன்றாகவே, சாட்சித் துவிதபேத மெங்ஙனமுண்டாம்? இதுபற்றிச் சீவன் சாட்சி பூரணமே தானாம்போதநிலை என்றார். பூரணமேயென்ற தேற்றத்தால் சீவசாட்சியே பூரணமெனவும் பூரணமே சீவசாட்சி யெனவும் ஆதற்பாலதால் தானாம் போதநிலை எனப்பட்டது. தோற்றுவிக்குமென்பன விரண்டும் பிறவினை யாதலால் பொருத்தும் எனக்கூறினார். இ:தெனதனுபவ மாத்திரமன்று; சுருதிக்கு முடன்பாடெனக் காட்டப்புகன்றிடு நான்மறை எனப்பட்டது. தூயசித் அஞ்ஞானம் அவித்தை யெனவும், அகண்டாஞ்ஞானம் மாயையெனவுங் கோடலை மறுப்பாருமுளர்.

5. ஞானி அஞ்ஞானி விருத்திபேத நிலைமை.

அறுசீர்க்கழிநெடி லடியாசிரியவிருத்தம்

மிக்கபரா தீனர்களே யுலகமெலா
மதில்விருப்பு வெறுப்பற் றோர்க
டொக்கமனோ விருத்தியணு மாத்திரமா
வறிவகண்ட சொரூப மாகு
மக்கதிக டேராதா ரறிவனுவா
மனோவிருத்தி யகண்ட மாகத்
தக்கபிரா ரத்தவசத் தவராகிப்
பிறந்திறந்து தளர்கின்றாரே.

(இ-ள்) மிக்க பராதீனர்களே யுலகமெலாம் - (எ-து) மேலாயபரத்துக்கு விலக்கா நிற்பவர்களே உலகெங்கு முள்ள வராவர்; அதில் விருப்பு வெறுப்பற்றோர்க டொக்கமனோ விருத்தியணு மாத்திரமாவறிவகண்ட சொரூபமாகும் - எ-து ஆயினு மவ்வுலகத்தின்கண் ணியல்பா நின்றுள்ள விருப்பு வெறுப்பகன்றோர்களது முன்னர்ச் சுருங்கக் கூறிய மனோவிருத்தி யென்பது சுவானுபவநிலையில் அணுமாத்திரமாகவும், விவேகவிருத்தி அகண்ட, சொரூபமாகவும் விளங்காநிற்கும்; அக்கதிகடேரா தாரறிவனுவாமனோவிருத்தி யகண்டமாகத் தக்க பிராரத்த வசத் தவராகிப் பிறந்திறந்து தளர்கின்றார். எ-து அங்ஙனமாய அநுபூதி நிலைகளைத் தீரவிசாரித்துத் தெளியாதவர்களது விவேகவிருத்தியென்பது அணுமாத்திரமாகவும் மனோவிருத்தி யென்பது அகண்டாகாரமாகவும் நிலை யாநிற்கும், இக் காரணத்தாலிவர்கள் தத்தமக்கியைந்த பிரா ரத்வகன்ம வயப்பட்டவர்களாகி ஓயாது பிறந்திறந்து சுகதுக்கத்தில் மொத்துண் டெய்ப்புறுகின்றனர். - எ-று.

ஏ-அசை உலகமெலாமெனல் இடவாகு பெயாய் உயிர்களைப் பொதுமையிற் காட்டலின் மிக்கவெனலைப் பரத்துக்கு அடைமொழியாக்காது முழுதும் மூடர்களேயெனப் பயனிலை யாக்கின் சிறப்பிற்றாமெனக் கொள்ளினுமமையும்.

ஆதலின், உலகமெலாமிக்க பராதீனர்களேயெனமுடிக்க. உலகம் உண்மையாயின் வெறுப்புறுதற் கேதென்னை? இருமைக்குமிடமா நிற்றலின், உலகம் மித்தையெனற் கிடப்பெறாதோ? அதனாலெய்தற் கியைந்த விருப்பு வெறுப்புறுதலும் அதனை மெய்யென நுகரவெழுந்த மனோவிருத்தி அணுமாத்திரமாதலும் அறிவு அகண்ட சொரூபமாதலு மெய்தற்கிடம்பெறாதோ? இங்ஙனமாய நிலைகளைச் சற்று மறியாதாரறிவு அணுவாகவும், மனோவிருத்தி அகண்டமாகவும், அதனால் தக்க பிராரத்த வசத்தவராகிப் பிறந்திறந்து தளர்கின்றதாகவும் கூறியதை யேற்றற்கிடம்பெறாதோ? இங்ஙனமிருக்க இதனை மறுப்பதென்னமதி. ஓரறிவே மருளா நின்றுழி மனோவிருத்தி யெனவும் அகண்டாகாரமெனவும், அவ்வறிவே தெருளா நின்றுழி விவேக விருத்தியெனவும் அகண்டாகாரமெனவும் போந்தது காரணமாக அவ்வவ்அவசரத்தில் இவ்விரண்டு விருத்தியும் அணுவெனற்கு முடன் படுமாதல்பற்றி இங்ஙனம் கூறினாரென்க. இதனைக் காணவேண்டின் நாமே தக்க உதாரணமாயிருக் கின்றனம். ஒவ்வொரு விருத்தியும் அணுமகத்தாய வவசரத்தைக் காட்டக் கூறியதென்க. மருளெனல் அகவிருட்குபா தானமாகவும், தெருளெனல் அகவெளிக்குபாதானமாகவும் நிற்றலை. நிற்கவே, அங்ஙனமாய விருட்கு மொளிக்கு முபாதேயம், அனுர்த சடதுக்கமும், சத்துசித்தானந்தமுமெனக் கண்டாம்.

6. உபரதிவைராக்கியஞானத்தாலுறு பயன்.

தோற்றுமுப ரதிவைராக் கியஞான
மூன்றிவைக டொழிற்பட்டாரு
ளேற்றுமுப ரதியுடையார் பிரமாதி
பதமடைவ ரிகலோ கத்திற்
போற்றும்வை ராக்கியர்க்கு மப்பதமுண்
டாஞானம் பொருந்தி னோர்க்குச்
சாற்றரிய தனிமுத்தி சரீராந்தத்
தெனவுரைப்பர் தகைமை யோரே.

*(இ-ள்) தோற்றுமுபரதி வைராக்கியஞான மூன்றிவைக டொழிற்பட்டாருள் - எ-து தன்னைத்தானடைவோர்க்கு முறையே யுண்டாதற்கியைந்தவை உபரதி, வைராக்கியம், ஞானம் என மூன்றாம். இம்மூன்றற்கியைந்த முயற்சிக்கண் அதனதன் வயப்பட்டவர்களுக்குள் ; ஏற்று முபரதியுடையார் பிரமாதிபதமடைவர் - எ-து எவரானும் மதிக்கத்தக்க உபரதி யெனப்படுவது பொருளல்லவற்றை யானெனதாக் கொள்ளும் மயக்கத்தில் வெறுப்புறுதலாம், அதனை மறவாது காப்பாற்றுபவர் அவ்வுபாதியை யுடையராவர். அவருக்குப்பயன் தூலசரீராந்தத்தில் பிரமலோகாதி பதங்களாம்; இகலோகத்திற் போற்றும் வைராக்கியர்க்கு மப்பதமுண்டாம் - எ-து புகழத்தக்க வைராக்கிய மெனப்படுவது உபாதியாலெய்திய வெறுப்புறுதலை யிடையிற்கலங்காது மரணபரியந்தம் இகலோகத்தில் காத்தலாம், அங்ஙனம் காத்தலையுடையார் அவ்வைராக்கியத்தை யுடையராவர். அவர்க்குப்பயன் அந்தப் பிரமாதிபதங்களனைத்தும் வெறுப்பாகக்காண்டலாம்; ஞானம்பொருந்தினோர்க்குச் சாற்றரியதனிமுத்தி சரீராந்தத்தென வுரைப்பர் தகைமையோர் - எ-து ஞானமெனப்படுவது பொருளைப் பொருளாகக்காண்டல் காரணமாகத் தன்னைத் தானாகக்கண்டு நிற்றலாம். அதனையுடையோர் அயலனைத்தையுந் தனது பிரத்பலனமாகக் காணும் நிலைமையுடையவராவர், அவர்க்குப்பயன் காரணசரீராந்தத் தில் சொல்லற்கரிய கூடஸ்தப் பிரம ஐக்கியமே முத்தியென நிற்பதாம் என்று சத்துக்கள் கூறாநிற்பர் - எ-று.*

*ஏ-அசை, சரீராந்தத்தெனலைக்கடை நிலைத்தீபமாக்கித் தனித்தனி உபாதியுடையார்க்குத் தூலசரீராந்தத் தெனவும், வைராக்கியம் முடையார்க்குச் சூக்கும சரீராந்தத்தெனவும். மெய்ஞ்ஞான முடையார்க்குக் காரணசரீராந்தத்தெனவும் பொருள்கொள்க. அன்றேல், முரணும்; சரீரமெனப்பொதுப்படக் கூறினமையின், உரையிற் கோடலென்னு முத்தியால், உபரதியுடையார்க்கு வெறுப்புறற் கியைந்த திகலோகம்போல வைராக்கியம் உடையவர்க்கு வெறுப்புறற் கியைந்தது அப்பதமெனப் பொருடாற்கு இகலோகத்தி லென்பதில் இகரம் அண்மைச்சுட்டாகவும், அப்பரமென்பதில் அகரம் சேய்மைச்*

சுட்டாகவுங் கொளநிற்றலின், உபாதியுடையார்க்கு வெறுப்பாயது இகலோகம்போல வைரக்கிய முடையவர்க்கு வெறுப்பாயது அப்பதமெனக் கொண்டால் முரணென்னை? சுருங்கச்சொல்லலென்னு மழகாலென்க. பிரமபதமென்னாது ஆதியென்றமிகையால், உபரதி வைராக்கிய ஞானமெனவும், வைராக்கியத்தில்உபரதி வைராக்கிய ஞானமெனவும், ஞானத்தில் உபரதி வைராக்கிய ஞானமெனவும் மும்மூன்றாக்கவும்; அவ்வவற்றிற்குரிய முயற்சிகளும் அவ்வவற்றிற்குரிய வரும் அததற்கியைந்த பலனும் பெறுமென மாட்டுதலால் மாட்டெறிந்தொழுகலென்னு முத்தியாக்கவும் பெற்றாம்; பெறவே, சிற்சிலருக்குத் தனித்தனி ஒவ்வொன்றேனும் உபரதி வைராக்கியமேனும், உபரதிஞானமேனும், உபரதி வைராக்கிய ஞானமேனும் வாய்ப்பதினானும் அவ்வவ்வசரத்திற்கியைந்த சேட்டையும் பலனும் முரணா தெய்தற்பாலவாதலானு மிங்ஙன மனுபவமாக ஆங்காங்குக் காணப்பெறுமாதலானும் மறுக்காதேற்றனம். இங்ஙனமாய விரிவனைத்தையும் வேதாந்தப் பெருங்கடலில் ஆரியத்தில் தோன்ற விரித்துரைத் திருப்பதால் அந்நூல்களிற் காண்க. இந்த முப்பத்திரண்டுள் ஒவ்வோர் கவியுஞ் செல்லச் செல்ல ஆழமுடைத்தாதலி னாழ முடைத்தாதலென்னுமோரழகுமாம். எனவே, உபரதி வைராக்கிய ஞானமெனக் கூறியது அறிவின் அவசரந்லையெனக் காட்டற்காதலின் இம்மூன்றும் ஒவ்வோர் முதலன்றென்க. இம் மூன்றிலக்கணமும் வேதாந்த விலக்கியத்தி னமைதியாம். அவ்விலக்கிய மின்றே லவ்விலக்கணம் யாது பயன் பெறும். இவைபோன்றன வாகிய விலக்கணங்கட்கு அறிவு இலக்கியம்.

7. திரிபுடி நிலையாமாறு.

மெய்வாய்கண் ணொடுமூக்குச் செவியாலுண்
பதுவிடயம் விடயம் யாவு
மைவாயி லரவெனவுற் றுணர்தன்மனோ
விருத்தியவை யறிவதாகிப்
பொய்வாயின் செயல்களெலாந் தனதாநின்
றிடல்சீவ போதம் வேறாத்
தைவாய்வெண் பிறைபோலத் திரிபுடிக்குஞ்
சமசாட்சி தானே தானாம்.

*(இ-ள்) மெய்வாய்கண் ணொடுமூக்குச் செவியாலுண்பது விடயம் -எ-து தொக்குமுதலிய பஞ்சேந்திரியங்களால் அனு பவிக்கப்படுவது சத்தமுதலிய விடயமாம், விடயம்யாவு மை வாயிலானெவற்றுணர்தன் மனோவிருத்தி - எ-து. அங்ஙனமாய விடயமனைத்தையும் ஐந்தலைநாகம் போலவ்விந்திரியங்கள் காரணமாக ஊன்றியுணர்தல் மனோவிருத்தி ஞானமாம்; அவை யறிவதாகிப் பொய்வாயின் செயல்களெலாந் தனதா நின்றிடல் சீவபோதம்- எ-து சத்தியம்போல மித்தையாநின்றுள்ள அகக்கரணம் புறக்கரணம் காரணமாக வியங்குஞ் சிதாபாசனாகிய சீவனாம்; வேறாத் தைவாய்வெண்பிறைபோலத் திரிபுடிக்குஞ் சாட்சிதானே தானாம் - இவற்றிற்கு விலக்காகித் தை மாதத்திலுதித்த வெண்பிறைபோலத் திரிபுடிக் குஞ் சமத்துவமாகச் சாட்சியாநின்று விளங்குவது யாதோ அது கூடஸ்தனாம், அதனையன்றித் தானேதானாதற்கியைந்த நிலை வேறின்றாம் - எ.து.*

*புலனும், கரணமும், சீவனும் தானேதானாதற்கியைந்த நிலை அன்றெனக்காட்டத் திரிபுடிக்குஞ் சாட்சி என்றார். தைவாய்வெண் பிறைபோல வென் றுவமித்தது அங்கே மாசும், இங்கே திரிபுடியுமாய தடை சற்றுமின்மை பற்றி யாதலாலிது தொழிற்சாதாரண தர்மமென்க. தானேதானா நிற்குநிலை பஞ்சேந்திரியங்களில் ஒன்றெனவுங் கரணங்களில் மனமெனவும் அப்பாலாயநிலை ஜீவனெனவுங் குறிகொண்டவலமாவாரை மறுத்தற் கிங்ஙனம் கூறியதென்க. இந்திரியக்குறி ஷண்முகி முதலிய முத்திரைகளும், கரணக்குறி, மூலாதார முதலியவையும், ஜீவக்குறி ஒன்றுந் தோன்றாது நிற்றலுமென்க. புலனின்றியக்கண் விடயமும், கரணமின் றியக்கண் புலனும், சீவனின்றியக்கண் கரணமும், கூடஸ் தனின்றியக்கண் சிதாபாசனும் எங்ஙனமுணரப்படும்? இதனால், காண்பான் காட்சி காணும்பொருளாகிய இவை மூன்றையும் சீவபோதமெனுங்காறு மேற்குமெனவும், சீவசாட்சியாகிய கூடஸ்த னேற்காதெனவு மிக்கவியிற் குறிப்பிக்கப் பெற்றாம். சீவசாட்சி தானே தானாயநிலையா நிற்றலிலென்க. தன்னையு மயலையும் மறிதற்றகையது சாட்சிக்கன்றி வேறொன்றுக் கின்மையின் சாட்சி திரிபுடியற்ற தென்றால் தன்னையன்றி அயலின்மையின்*

தானேதானாமென்னும் யோக்கியதை பெறப்பட்டது. இக்கவியினாலும் அறிவே முக்கியமெனவு மேனையவை. அமுக்கியமெனவுங் கொண்டாம். தொக்கு முதலிய பஞ்சேந்திரியங்களாவன : தொக்கு சிங்குவை சட்சு ஆக்கிராணம் சுரோத்திரமென்பன. விடயம் ஐந்தாவன : பரிச ரசரூப கந்த சத்தமென்பன. ஜீவிக்குந்தன்மையதாதலின் சாட்சி போதமென்னாது சீவபோத மெனப்பட்டது. போதம் அறிவு, சிவமே தானெனல் துவிதம், தானே தானெனல் அத்துவிதம்; ஏகமேவாத்துவித மெனற்கியைதலின் (எ).

8. அஞ்ஞானாதிகளினியல்பு நிலை.

ஓதரிய வஞ்ஞானந் தனையறியா
வுணர்விதற்கோ ருறுதி மூல
மாதன்மனோ விருத்தியவை யகற்றியொளி
தனையறித லகண்டா காரங்
காதலினா லருளியசற் குருவருளாற்
பெறுமகண்டா கார மாகுஞ்
சாதகமே தானாகி யிருப்பதே
தது சொருப சாட்சியாமே.

(இ ள்) ஓதரியவஞ்ஞானந் தனையறியாவுணர் விதற்கோ ருறுதிமூல மாதன்மனோ விருத்தி எ.து கணித் தற்கரிய அஞ்ஞான மெனப்படுவது தன்னைத் தானென அறிதற்றகையற்றதுயாதோ அந்த உணர்வேயாம். இதனைத் தெளிய வொட்டாது மருளின்கண் ஆழ்த்தற்குறுதி மூலமா நிற்பது மனோ விருத்தியெனப்படுவதா: அவையகற்றி யொளிதனை யறித லகண்டாகாரம் . எ.து அங்ஙனமாய மூடநிலைகளை யொருங் ககலப்பண்ணி, பண்ணினவிடத்துச் சதோதயமா நின்றொளிர்வது சுயஞ் சைதன்யமாதலா லதனை அதுவாக நின்றறிதல் அகண்டகார ஞானமெனப் படுவதாம்: காதலினாலருளிய சற்குருவருளாற் பெறுமகண்டா காரமாகுஞ் சாதகமேதானாகி யிருப்பதே தது சொருப சாட்சியாம். எ.து இம்மூன்றனுள் அன் போடருளிய சற்குருவின் அநுக்கிரகத்தா லடையத் தருவது

அகண்டாகார ஞானமெனப்படுவதேயாம், வேறன்மையின் அவ்வொளி தானாகப் பல்லூழி காலம் பழகவேண்டியது சாதகமெனப்படுவதால் அந்தச் சாதகமேதனக் குரிய முயற்சியாகி என்று மிருப்பது யாதோ அது தானே தானாதற்கியைந்து நிற்பது சொரூபசாட்சி யெனப்படுவதாம் எ.து.

ஏ.அசை. தனக்கெனச் சொரூபமொன் றின்மையின், ஓதரிய அஞ்ஞானம் எனப்பட்டது. அஞ்ஞானம் மனோவிருத்தி, அகண்டாகார மென்பவற்றுள், முன்னையவிரண்டும் பகிர்முகத்திற்கும், பின்னையதொன்றும் அந்தர் முகத்திற்கு மியைந்தனவென்றாயிற்று, யாதுகற்கினும் ஏத்தவ முயலினும் ஞானப்பிரகாசங்காண்டலரிது . அதனை வழுவாது காத்தலரிது. அதனையன்றி அனைத்துமின்றென வறிதலரிது. அவ்வொளியே தானெனவறிதலரிது. அவ்வொளியைச் சத்துச் சித்தானந்தமாகவும் அந்தச் சத்துச் சித்தானந்தத்தை அநிர்தசடதுக்கமாகவும் பகுத்துணர்தல் மிகவுமரிது. இத்தனையும் அவ்வொளியாகக் காண்டலரிது. இடையிடையே ஊழிற்கியைந்தவாறு பற்பல விகற்ப தூலதேகங்கள் வந்துவந்தகலும்: அகலினும், ஆங்காங்குச் செய்து நின்ற நிலைபாகங்கள் சாத்தியமாதல் காறுந் தொடர்ந்தேவரும்: அங்ஙனந் தொடர்ந்து வருதலை மறவாது கண்டு சாதித்தலைச் சாதகம் என்றார். சாதகமேதானாகியிருப்ப தென்பது விடாமுயற்சியைக் குறித்தற்கென்க. இக்கவியுந்தானே தானாதற்கேற்றநிலையைக் கூறியது.

9. விருத்தியுஞ் சீவனும் விபுவாகு நிலைமை.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

விருத்தியுஞ்சீவனும் விடயத் தினைப்பார்க்கிற்பெரிதாம்
விருத்தியின் ஞானம் விடயாஞ் ஞானத்தை யகற்றின்
விருத்தியுஞ்சீ வனும்விடயா காரமதா மதுபோல்
விருத்தியுஞ்சீ வனுஞ்சத்தாகாரமதா யமைந்தால்

விருத்தியைச்சீ வனைவிடயத் தினையறியுஞ் சாட்சி
வேந்தனசையாதிருந்துமேன்மைபெறுந்திறம்போல்
விருத்திவிட யஞ்சீவன் சாட்சியிவை தோன்றா
விபுவாவன் ஞானியென விளம்புமுப நிடதம்.

(இ.ள்) விருத்தியுஞ் சீவனும் விடயத்தினைப் பார்க்கிற் பெரிதாம். எ.து அதோமுகத்தில் விருந்திஞானமுஞ் சிதாபாசனுந் தத்தமக்குரிய விடயாஞ்ஞானத்தை யகற்றின் விருத்தியுஞ் சீவனும் விடயாகாரமதாமது போல். எ-து கல்விகாரணமாக வெழும் விருத்தி ஞானத்தைக் கொண்டு அவ்வவ்விடயங்களை மறைத்திருக்கு மஞ்ஞானத்தை அகலச்செய்யின் அவ்விருத்தி ஞானத்தோடே சிதாபாசனும் வேறுமயமாகாது விடயாகார மயமாவன் அதுபோல: விருத்தியுஞ் சீவனுஞ் சத்தா காரமதாயமைந்தால் -எ-து ஊர்த்தமுகத்தில் விருத்தி ஞானத்தோடு சிதாபாசனும் ஐயந்திரிபகன்று ஞானாகார மயமாவிளங்கின்: விருத்தியைச் சீவனை விடயத்தினையறியுஞ் சாட்சி- எ.து விருத்தி ஞானத்தையுஞ் சிதாபாசனையும் விஷயத்தையும் விலக்காறின் றறிதற்குரிய இருவகைச் சாட்சியுந்தானாகி: வேந்தனசை யாதிருந்து மேன்மை பெறுந் திறம்போல். - எ.து திரிலோகத்தையும் ஒருங்குவென்ற அரசன் தனதிடத்தை விட்டசையா திருந்து எல்லாச்சிறப்பையும் அடை யுந் திறமெங்ஙனமோ அதுபோல; விருத்திவிடயம்சீவன் சாட்சி இவைதோன்றா விபுவாவன் ஞானியென விளம்புமுப நிடதம்- எ.து விருத்திஞானத்தையும் விஷயங்களையுஞ் சிவனையும் இருவகைச்சாட்சியையு மிங்ஙனமாயநிலையின வெனத் தோன்றவொட்டாத விபுவாக விளங்குவன். இங்ஙனமாயினோனை முப்பத்திரண்டு உபநிடதங்களும் ஞானியெனக் கூறா விற்கும் -எ.து.

ஓர் பிரக்ஞையே பகிர்முகத்தில் அஞ்ஞானியெனவும், ஏகதேசியெனவுஞ் ஞானியெனவும், விபுவெனவும், சாட்சியெனவும், நின்றதெனவறிக. அதோமுகத்தில் விடயாஞ்ஞானத்தை அகற்றலாவது அதிஷ்டான நாட்டமின்மையால் தத்துவ

சோதனை செய்து தெளிந்ததுபோற் காண்டலை. விடயாகாரமதாதல் தனது பிராந்தியெனத் தேராமையை. ஊர்த்த முகத்தில் விடயாஞ்ஞானத்தை அகற்றலாவது அதிஷ்டான நாட்டஞ் சற்றுண்மையால் தத்துவசோதனை செய்து தெளிந்து நிற்றலை . சத்தாகாரமதாதல் தனது பிராந்தியெனத் தேர்ந்ததை. பகிர்முகத்தின் கண்ணும் அந்தர்முகத்தின் கண்ணும் பகுத்துணர்வு இருத்தலினானும் அதனாலவ்வவற்றா லாயபயனனுபவிப்பா னிருத்தலினானும் விருத்தி எனவும், சீவன் எனவும், சாட்சி எனவும் பெயர்தந்தவாறு காண்க. விருத்தியுஞ் சீவனும் விடயத்தினைப் பார்க்கில் பெரிதாம். என்ற விதப்பால் விருத்தியுஞ் சீவனும் ஞானத்தினைப் பார்க்கில் பெரிதாமெனக்கொண்டாம். அங்கே விருத்தியுஞ் சீவனும் விடயமயமாதல்போல் இங்கே ஞானமயமாதற் கியைதலின் முரணென்னை. இன்றாதலிற் பொருந்தும். நூலாசிரியர் அங்ஙனங் கூறாதிருக்கில் யாமிங்ஙனம் உரைகொள்ளா திருக்குது மென்க.

10. விஷயமுதல் சாட்சிவரையில் ஒன்றற்

கொன்று விசேடமாமாறு.

போற்றியவிந் திரியமின்றி விடயமெலாந் தோன்றா பொறிகளைந்துங் கரணமின்றிப் பொலிவொடுதோன்றாவால், சாற்றுகர ணமுஞ்சீவ னின்றியக்காற் றோன் றா சாட்சியன்றிச் சீவனிலை தானுணர்வு தோன்றா, தாற்றலினா லிந்தியங்கள் விடயமட்டு மறியு மவ்விரண்டுங் கரணமறிந் திடுமவைமூன் றினையுந், தேற்றமொடு சீவனறி வுறுமவைநான் கினையுந் தெளிந்தறியுஞ் சாட்சியதீ தப்பொருளா மிதுவே.

(இ.ள்). போற்றிய விந்திரியமின்றி விடயமெலாந்தோன்றா பொறிகளைந்துங் கரணமின்றிப் பொலிவொடுதோன்றா- எ.து யாவரானுந் துதித்தற்கியைந்த ஞானேந்திரியங்களைந் துமின்றிச் சத்தமுதலிய சகலவிடயங்களுந் தோன்றாவாம். அந்த ஞானேந்திரியங்க ளைந்தும் அகக்கரணமாகிய மன மென்பதில்லாமல் விளக்கமாகத் தோன்றாவாம்; சாற்று கரணமுஞ்சீவ னின்றியக்காற் றோன்றா சாட்சியன்றிச் சீவனிலை தானுணர்வு தோன்றாது- எ.து சொல்லப்பட்ட மன

முதலிய கரணங்களுஞ் சீவனில்லாவிடத்துத் தோன்றாவாம். அந்தச் சீவனிலையாகிய வுணர்வுஞ் சீவசாட்சி இல்லாவிடத்துத் தோன்றாவாம்: ஆற்றலினாலிந்தியங்கள் விடயமட்டு மறியுமவ் விரண்டுங் கரணமறிந் திடும் அவைமூன் றினையுந் தேற்றமொடு சீவனறி வுறுமவைநான் கினையுந் தெளிந்தறியுஞ் சாட்சி யதீதப்பொருளாமிது- எ.து, அவ்வவற்றின் வலிமைத்திற மிங்ஙனமிருப்பதால் ஞானேந்திரியங்களைந்தும் விடயமாத்திர முணரும். விடயம், இந்திரியமாகிய இவ்விரண்டைமாத்திரம் அந்தக்கரணமறியும். விடயம், புறக்கரணம், அக்கரணமாகிய மூன்றைமாத்திரம் தெளிவோடு சீவனறியும். விடயம் புறக்கரணம், அகக்கரணம், சீவன் ஆகிய நான்கை மாத்திரம் சீவசாட்சியாகிய சுயஞ்சைதன்யம் மிக்க தெளிவோடறியும். இதனின் மேலாயநிலை வேறின்மையின் இதுவே அதீதப்பொருளெ னப்படுவதாம்.-எ.து.

ஆல்-அசை. இதுவே என்பதில் ஏகாரம் தேற்றம். எவ்வெவ்வுயிரும் போகம் நுகர்தற்கியைந்த நேராய கருவி ஞானேந்திரியமாதலின் போற்றியவிந்திரியம் என்றார். அந்தந்தப் பகுத்துணர்வின் வலி யினையவெனக் கூறலே, சீவசாட்சி யொன்றாலறியப்படுவதல்ல வென்பதாயிற்று; ஆகவே தானே தானாய நிலையெனக் கண்டாம். தான் ஒன்றாலறியப்படுவ தின்மையின் தனக்குத்தானே விசேடமாமென்றுணர்க. இதுவே தீர்ந்த நிலையாதலின் இங்ஙனங்கூறினாரென்க. தானேதானாய நிலையாதற்கு இதுவுமோர் தந்திரயுத்தி. தோன்றாவென்னும் நான்கெதிர்மறை வினைமுற்றும் இருக்கினு மென்பதைக் குறிப்பிக்கின்றன; அறியுமென்னும் நான்குடன் பாட்டுவினை முற்றாலென்க. இதனால் தோற்றுதல் திருசியத்திற்கும் அறிதல் திருக்குவிற்கும் புடைபெயர்ச்சியேனுஞ் சாட்சியாகிய கூடஸ்தவிளக்கத்தில் சற்றுமின் றென்பதாயிற்று திருக்குத் திருசியந் தானாயிருத்தலால்.

11. அவஸ்தாத்திரய சாட்சியி னியல்பு நிலைமை.

கற்பனைசெய் யவத்தைகண்மூன் றினுக்குஞ் சாட்சி
கலந்தொருதன் மையினிலகுங் காட்சி கூறில்
சாக்கிரத்திற் சாட்சி தானே
செகசாட்சி யாயிருக்குந் தியக்க மான

*சொற்பனத்தின் மனோவிருத்தி தனக்கே சாட்சி*
*சூனியமாஞ் சுழுத்தியிலஞ் ஞான மான*
*வற்பநெறி யானந்த மதற்கே சாட்சி*
*யனைத்தினுமிவ் வாறிருந்தோர்ந் தறியுங் காணே.*

*(இ-ள்) கற்பனைசெய் அவத்தைகண் மூன்றினுக் குஞ் சாட்சிகலந்தொரு தன்மையினிலகுங் காட்சி கூறில்.- எ-து கற்பனைகளை விளைவிக்கத்தக்க சாக்கிர முதலிய மூன்றவஸ்தைகட்குஞ் சாட்சியாகிய கூடஸ்தசைதன்யம் இம்மூன்றினும் உபாதானமாகக் கலந்து ஒருபடித்தாச் சதோதயமா நின்று விளங்குஞ் சுவானுபூதிக் காட்சியைக் கூறுமிடத்தில்; சிற்பரவுஞ் சாக்கிரத்திற் சாட்சிதானே செகசாட்சியா யிருக்கும்- எ-து அறிவுவியாபித்திருக்குஞ் சாக்கிராவஸ்தையின் கண் அந்தக் கூடஸ்தசாட்சியே அங்கே தோற்றுஞ் சகத்திற்குச் சாட்சியா யிருக்கும்; தியக்கமான சொற்பனத்தின் மனோவிருத்திதனக்கே சாட்சி- எ.து கலக்கமா நின்றுள்ள சொப்பனத்தின்கண் அங்கே தோற்றும் மனோவிருத்திக்குஞ் சாட்சியாயிருக்கும்; சூனியமாஞ் சுழுத்தியிலஞ் ஞானமான வற்பநெறியானந்த மதற்கேசாட்சி- எ-து சூனியமாநின்றுள்ள சுழுத்தியின்கண் அங்கே தோற்றம் முழுதும் மூடமயமான அற்பநெறியாலெய்திய மக்னானந்தத்திற்குஞ் சாட்சியாயிருக்கும்; அனைத்தினு மிவ் வாறிருந்தோர்ந்தறியுங்காண்- எ-து இதுபோல ஏனைய அவஸ்தையின் கண்ணு மாங்காங்குச் சகம்போலத் தோற்றுந் தோற்றங்களினிடத்து மிப்படியாக விருந்து அந்தந்தநிலைகளை ஐயந்திரிபறநின்று அறியும் இதனை அநுபவித்துக் காணுதி- எ.து.*

*விரிவுரை*

*எ.அசை,யானென தல்லவற்றை யானெனதாகக் கோடலைக் கற்பனைசெய் என்றார். சாக்கிர முதலிய மூன்றவத்தைக் கண்ணுஞ் சாட்சி கலந்தொரு தன்மையினிலகுங் காட்சியாவது அலை திவலை முதலியவைகள் தோன்றி மறைதற்கும் அதுவது வாவதற்கு மாதாரமாயும் உபாதானமாயும் நிற்பது சமுத்திர மெங்ஙனமோ அங்ஙனமே சாக்கிர முதலிய அவஸ்தைகளும்*

தூலம்சூக்குமங் காரணமென்னும் உபாதிகமும் விசுவ தைசத பிராக்ஞனென்னும் அபிமானங்களும் விடாது தோன்றித் தோன்றி மறைதற்கு ஆதாரமாயு உபாதானமாயும் நிற்றற்கு ஒன்றிருக்க வேண்டுமே. இதன்றியும் அறிவெனவும், சாட்சியெனவும், கூடஸ்தனெனவும், பிரமமெனவும் சான்றோரால் பரியாய நாமம்பெற் றிருப்பது யாதோ அதனையெனல். நனவு நினைவுமுதலிய எழுச்சியே சாக்கிரமெனப்படுமாதலின் அந்தச் சாக்கிர சங்கற்பந்தோன்றி மறைதற்கும் அந்தச் சங்கற்பத்தை யன்றிச் சகத்தெனப்படுவதற்கும் ஓர் முதலும் ஆதாரமு மறிவையன்றி வேறின்மையின் சிற்பரவுஞ் சாக்கிரத்திற் சாட்சி தானே செகசாட்சியாயிருக்கும் எனவும், அந்த நனவு அயர்ந்து சோர்ந்துழிச் சகத்து சாயாவடிவமாகத் தோற்றும். அங்ஙனந் தோன்றி மறைதலைச் சாட்சியா நின்றுணர்தல் அறிவாதலால் தியக்கமான சொற்பனத்தின் மனோவிருத்தி தனக்கே சாட்சி எனவும், அந்த ஸ்புரிப்பின் சோர்வே சுழுத்தி யெனப்படுதலால் சூன்யமெனப்படும். இந்த அவஸ்தையும், சூன்யமாக்ற சாட்சியுந்தோன்றி மறைதற்கும் அதன்பலனான மக்னானந்தத் திற்கும் ஆதாரமும் உபாதானமும் அறிவை யன்றி வேறின்மையின் சூனியமாஞ் சுழுத்தியிலஞ்ஞானமான அற்பநெறி ஆனந்தமதற்கே சாட்சி எனவும் கூறியவாறாயிற்று. துரியம் துரியாதீதம் மூர்ச்சை மரணம் இருப்பதால் அனைத்தினும் எனறார். முத்துச்சரம் ஓர் சரட்டில் நிற்பதுபோலச் சாக்கிர முதலிய வேழு அவஸ்தைகளும் அதற்குரிய சாட்சிகளும் தோற்றங்களும் அபிமானங்களும் பிரவிர்த்தி நிவிர்த்திகளும் ஓர் அறிவில் நிற்குமெனக்கொள்க. இதனை மறுப்பார் எடுக்குந் துறையும் முடிக்குந் துறையு மறியார் போல்வர். அவர்கள் யாது கற்றும் யாதுபயன். இங்ஙன மையந்திரிபற ஒன்றே யென வுணர்ந்தோரே ஏகமே வாத்துவைதம் பிரஹ்மோகமெனற் கதிகாரிகள். ஏனையர் துவிதமெனற்கும் அதிகாரியரல்லரெனற்கு யாமே உத்தரவாதி. சாட்சி தானே என்னுந் தேற்றேகாரத்தை ஏனைய விடங்களிலு மொட்டுக. இக்கவியின் கருத்து சாக்கிர முதலிய மூன்றிலுஞ் சாட்சியாகிய கூட ஸ்த சைதன்யத்தை மறவாமலும் பராக்காகாமலு மொருவன் கண்டிருக்கில் ஏனைய வவஸ்தைகளிலும் அப்பழக்கம் காணச் செய்விக்குமென்பது.

*12. விருத்திஞானத்திரயத்தால் அஞ்ஞானத்திரய நிவிர்த்தியின் நிலை.*

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

*அரியவிருத் திகண் மூன்றா லகலுமஞ்ஞா*

*னங்களினு மாய்ந்து கூறிற்*

*றெரியுமனோ விருத்தியினால் விடயாஞ்ஞா*
*னங்களெலாஞ் சிதையு மேலாய்ப்*

*பிரிவிலகண் டாகார விருத்தியிற் சாட்*

*சியையறியாப் பெத்த நீங்கு*

*முரியவிவே கவிருத்தி யகண்டாகா*

*ரமுங்கடந்தங் கொன்றா மன்றே.*

*(இ.ள்) அரிய விருத்திகண் மூன்றாலகலு மஞ்ஞானங் களிலு மாய்ந்து கூறில்- எ-து முற்கூறிய அருமையாய மனோ விருத்தி முதலிய மூன்றினாலும் அஞ்ஞானம் அகலு மென்றதைக் குறித்து இன்னும் ஆராய்ந்து கூறுமிடத்து; தெரியுமனோ விருத்தியினால் விடயாஞ்ஞானங்களெலாஞ் சிதையும்- எ-து அகமுகமாகவும் பகுத்துணரத்தக்க மநோவிருத்தி ஞானத்தாலவ்வவ்விடயங்களின்ன நிலையின வென்றறிய வொட்டாமல் மறைத்து நிற்கு மஞ்ஞான மெனப்படுபவைகளெவைகளோ அவைக ளனைத்தையு மொருங்கு மாய்க்க அதனாலவைமாயும்; மேலாய்ப் பிரிவிலகண் டாகார விருத்தியிற் சாட்சியை யறியாப் பெத்த நீங்கும்- எ.து- மனோவிருத்தி ஞானத்திலும் மேலாகப் பிரிவற்று விளங்கும் அகண்டாகார விருத்தியகண்டாகாரமுங் கடந்தங் கொன்றாம் (எ.து) அப்பாலெய்தற்குரிய விவேக விருத்தி ஞானத்தினால் கூடஸ்த சைதன்யத்தை உணர வொட்டாமல் மறைத்து நிற்கும் பெத்தமாகிய அவித்தையை நீக்க அது நீங்கும்; உரிய விவேக விருத்தி யகண்டாகாரமுங் கடந்தங் கொன்றாம் (எ.து) அப்பாலெய் தற்குரிய விவேக விருத்தி ஞானத்தினால் ஈசுர சாட்சியாகிய பிரமசைதன்யத்தை உணரவொட்டாமல் மறைத்துநின்ற மாயையைக் கடக்க அதனாலது கடக்கப்படும்.*

இங்ஙனங் கடந்தவிடத்து அங்கே சாட்சி துவிதபேதமின்றி ஒன்றாக விளங்கும்-எ-று.

விரிவுரை

அன்று-ஏ- அசைநிலைகள். விடயாஞ்ஞானமாவது விடயமனைத்துந் தனது பிரதிபலன வடிவமெனக் காணவொட்டாமல் மறைத்தலை. மாயையை அகண்டாகார மென்றது தனக்கெனச் சொரூபமொன்றின்றி உண்மைபோற் காணப்படுந்தன்மையைச் சமஸ்தமு மேற்றலின் பிராந்திரூப மாதலைப் பற்றி என்க. மூன்றுவிருத்தி ஞானமு மேதுவாதல்பற்றி, சிதைக்க நீக்க கடக்கவென்றாம். பிறவினை யாக்காவிடத்து, சிதையும் நீங்கும் கடக்குமெனத் தன்வினையேலாவாம். மேயமனோவிருத்தி என்னுங் கவியில் கூறிய விருத்திஞானத்திரயத்திற்கும் இக்கவிக்கும் பேதமென்னையுள? கூறியது கூறலென்னுங் குற்றமெய்துமெனின், "கூறியது கூறினுங் குற்றமில்லை, வேறொரு பொருளை விளைக்குமாயின்" எனனும் விதியால் அக்கவியில் தோற்றுவிக்குமென்னும் பிறவினை நயமும் இக்கவியில் சிதையும் நீங்கும் கடக்குமென்னும் தன்வினை நயமும் இருந்தலினானு மிவ்விரண்டு நயமும் விடாமுயற்சிக் கண்ணதாதலானு மென்க. இதுவும் ஏகமே வாத்துவை தம் பிரஸ்றமோகமென்னுங் கருத்தை விளக்கிற் றென்க. ஒன்றாமெனலால் சுசாதியாதி பேதமின்றெனப் பெற்றாம்.

### 13. தத்துவோற்பத்தி லயக்கிரமம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பேசரிய பரத்தினிலா ரோபமதா மூலப்
  பிரகிருதி தோன்றுமிதிற் சாத்திகமா மாயை
யீசனிதிற் றோன்றுமிரா சதமவித்தை சீவ
  னிதிற்றோன் றுந்தாமதத்தாவரணம் விட்சேபமதாஞ்
சூசகவிட் சேபமதிற் சூக்குமபூ தமதாஞ்
  சூக்கவுட லிருகுணத்தாற் றோன்றிடுந்தா மதத்தின்
மாசில்பஞ்சீ கரணமதா மைம்பூத வடிவா
  மதிற்றூல சடந்தோன்றுமனைத்துமிவ்வாறடங்கும்.

*(இ.ள்.) பேசரிய பரத்தினிலா ரோபமதா மூலப்பிரகிருதி தோன்று மிதிற் சாத்திகமாமாயை யீசனிதிற்றோன் றும்-எ-து இங்ஙனமாய நிலையினதென யாதொன்றானுங் கணித்தற்கரிய பரவஸ் துவில்ரச்சுவிற் சர்ப்பம்போ லவிவர்த்த மாயுள்ள மூலப்பிரகிருதி யென்னு மொருசத்தி அவாந்தரமாகத் தோற்றும். இந்த மூலப்பிரகிருதியின் கண் இயல்பாநின்றுள்ள சத்துவம் ரஜசு, தமசு எனனும் முக்குணங்களில் சத்துவத்திற்கு மாயையெனவும், அம்மாயையில் ஈசன் பிரதி பலித்தனனெனவும்; இராசதமவித்தை ஜீவனிதிற்றோன்றும்- எ-து ரஜசுக்கு அவித்தையெனவும், அந்த அவத்தையில் ஜீவன் பிரதிபலித்தனனெனவும்; தாமதத்தாவரணம் விட்சேபமதாம்- எ-து தமசு; ஆவரணம்; விட்சேபமென விருபாகு பாடதாநிற்கும்; சூசகவிட்சேபமதிற் சூக்குமபூதமதாம்- எ-து அதிசூக்குமமாய அந்த விட்சேபசத்தியில் சூக்கும பூதமாகிய சத்த பரிசாதிகள் தோன்றும்; சூக்கவுட லிருகுணத்தாற் றோன்றிடும் எ.து சூக்கும சரீரம் சத்துவம் இரஜசு எனனுமிரு குணத்தா லுதிக்கும்; தாமதத்தின் மாசில் பஞ்சீ கரணமதாயைம் பூத வடிவாயதிற் றூலசடந்தோன்றும்-எ-து ஏனைய தாமத குணத்தால் குற்ற மற்ற பஞ்சீகரணமாயும், இதனால் தூல வைம்பூத வடிவாயும் பேதிக்கப்பட்டு அந்த ஐம்பூதவடிவினின்றுந் தூலசரீரந்தோன்றும்; அனைத்து மிவ்வாறடங்கும்-எ-து இங்ஙனம் ஆரோபத்தால் விரிந்த வாறுபொலச் சமஸ்த தத்துவங்களும் அபவாதத்தினா லிம் முறையே அடங்கவேண்டிய முறைப்படி அடங்கும்-எ-று.*

*விரிவுரை*

*பேசரிய பரத்தினி லாரோபமதா மூலப்பிரகிருதி தோன்றலாவது பழுதையிற்பாம்பு தோற்றினாற்போலு மெனற் கியைவதை. ஆரோபமெனல் ஓரோர் வஸ்துவாக உணரப்படுதலுந் தோற்றப்படுதலுமெனப் பொருடருதலை. அனாதி எனவே மூலப்பிரகிருதி என்றார். இதனாற் பழுதையிற் பாம்பென்றாம். பாம்பாகத் தோற்றலு முணர்தலும் அதனதியல்பா? நமது பிராந்தியா? அதனதியல்பெனின், ஆராய்ச்சியின்கண் திரிகாலத்தினு மிருக்கவேண்டும். பிராந்தியெனின் நடுக்கமுறா திருக்கவேண்டும். பாம்பாகத் தோற்றுதலுக்கும் அதனை*

மெய்யென யுணர்தற்கும் வினைமுதலுஞ் செயப்படுபொருளு மிருக்கவேண்டும். இன்மையால் பரவஸ்துவில், அனாதியில் ஜகமுதலிய திரிபதார்த்த முமில்லவே இல்லை என ஸ்திரமாகக்குறிக்க ஆரோபமதா மூலப்பிரகிருதி தோன்றும் என்றார். இதனை மறுக்கில் அல்லவில்லை யெனற் கியையாது, ஆம், உண்டு, எனற்கேயியைய யாதானுமோர்பொருளைத் தெரிவிக்க வேண்டும். சீவனும் பாமும் அப்பிரத்தியட்சம். உலகம் பிரத்தியட்சம். சோதனை ஞாயத்தாற் கணிக்குமிடத் துப்போகம் நுகரவேண்டிய விவகாரத்தால் விவகாரிக சத்தாகவும், உண்மை காணவேண்டி விசாரிக்கும் நுண்ணிய விசாரத்தால் பாரமார்த்திக சத்தாகவும், உலகங் காண்டற்கேதென்னை? இங்ஙனமாய உலகங்காரணமாக உண்டெென அநுமானித்தற்கியைந்த சீவேசுரர்கள் ஆம் உண்டெனற்கென்ன உறுதி? இன்மையால், கருத்துப்பொருள், காட்சிப் பொருளாகிய இயங்குதிணை, நிலைத்திணை எனப்படுவன வனைத் துஞ் சொன்மாத்திரமுந் தோற்றன் மாத்திரமும் விகிர்தியென நிற்றலால், மூலப்பிரகிருதியை, ஆரோபமதாமெனற்கு முரணென்னை? இன்றாதலால், அனைத்து மித்தையே. இக்கவி ஜகஜீவபரம் அனாதி நித்திய மென்பாரைமறுத்ததென்க. பிரமத்தில் மூலப்பிரகிருதி மாயை முக்குணம் ஜகஜீவபர முண்டாகிய விரிவனைத்தையுந் தத்துவக்கட்டளை களிற் காண்க. பொருளாற்றலை மாத்திரந் தெரிவித்தாம். சொல்லாற்றலைத் தெரிவிக்கின், இடமின்றி விரியுமாதலால் சுருக்கியுரைத்தனம். பொருளல்லவற்றைப் பொருளென்பார் மதஸ்தர். பொருளைப் பொருளென்பார், அத்துவிதிகள். கட்சிவாதத்தில் நில்லாது, பதார்த்த சம்மதவாதத்தில் நிற்கின், முரணுதற்கிடமின்றிச் சும்மாவிருத்தல் வாய்கருமென்க. பழுதை உண்மை. பாம்பு பொய். இந்தப்பொய், சந்தேக விபரீதத்தால் அகலாது கேட்டல் சிந்தித்தல் தெளிதலால் அகலுமாறு போன்று, மூலப்பிரகிருதியுமெனக் கொள்க. பாம்பாகிய பொய் அடங்குதல் பழுதையாகிய மெய்யிலென்றாற்போல, மூலப்பிரகிருதியாகிய பொய் அடங்குதல் பிரமமாகிய மெய்யிலெனக் கோடற்கு அனைத்து மிவ்வாறடங்கும் என்றார். இக்கவி, தன்பால் சுருங்கச்சொல்லல், ஆழமுடைத்தாதல் முறையின் வைப்பு

விழுமியது பயத்தலென்னு மழகுகளை அமைத்து நிற்கக் கண்டாம். பகிர்முகத்த தாகுமிடத்துப் பூர்வபட்ச மாதற்கியைவன வனைத்தும் சித்தாந்தபட்சமாதற் கியைவன ஆகவும் அந்தர் முகத்தாகுமிடத்துச் சித்தாந்தபட்ச மாதற்கியைவன அனைத்தும் பூர்வபட்சமாதற் கியைவனவாகவுந் தோற்றற் கேதென்னைகோலோ? அனைத்தும் அறிவின் பிரதிபலன மெனக்கோடற்கியைதலின் சத்தியமன்று மித்தையே. அறிவொன்றே சத்தியமென்றேற்றது அருத்தாபத்தி.

14. பிரகிருதி முதலியவற்றி னிவிர்த்தி.

பகர்வரிய முதற்பொருளின் விவர்த்தமதா மூலப் பகுதியிந்த வுலகமெய்யாப் பார்த்திடுதன் மாயை, யக முடலென்றிருப்பதுவே யவித்தை தத்துவங்களனைத் தையுந்தானெனமறைப்ப தாவரணம் விடய, சுகவிருத்தி விட்சேப மிவைகளைந்து மடைவே தொலையபரி பூரணத்தாற் சோதனைதற் பதத்தான், மிகவுணருந் தொம் பதத்தாற் றத்துவஞானத்தால் விதேக முத்தியதனாலும் விடப்படுதல் விடாம்.

(இ.ள்.) பகர்வரியமுதற் பொருளின் விவர்த்தமதா மூலப்பகுதி-எ.து. யாவரானு மிங்ஙனமாய நிலையதென ஓதற்கரிய முதற்பொருளாகிய பரவத்துவின்கண் அர்த்தரூபமாக வன்றி அநர்த்தரூபமாகத் தோற்றுவது மூலப் பிரகிருதியெனப்படுவதாம்; இந்த வுலகமெய்யாப் பார்த்திடுதன்மாயை- எ.து தனக்கெனச் சொரூபமின்றிய வுலகைச் சத்தியமாகக் கண்டுழலுதல் மாயை யெனப்படுவதாம்; அகமுடலென்றிருப்பதுவே யவித்தை- எது தேகமே நானென்று அகங்கரித்துழல்வதுவே அவித்தையெனப்படுவதாம்; தத்துவங்களனைத்தையுந் தானென மறைப்பதாவரணம்- எ.து தத்துவங் களெனப்படுவன வனைத்தையுந் தானே யெனக் கொள்ளுமாறு மறைக்கத் தகுவது ஆவரணமெனப்படுவதாம்; விடய சுகவிருத்தி விட்சேபம் (எ.து) விடய சுகம் வேண்டி விவகரிக்கும் விருத்திகளனைத்தும் விட்சேபமெனப்படுவதாம். இவைகளைந்துமடைவே தொலைய பரிபூரணத்தாற் சோதனை தற்பத்தான், மிகவுணருந்தொம்பதத் தாற்றத்துவ ஞானத்தால் விதேகமுத்தியதனாலும் விடப்படுதல் விடாம் - எ-து- இங்கே கூறிவந்த விப்பேதங்களைந்து மொருங்கே தொலைய வேண்டிப்பரிபூரண ஞானத்தினாலும், தற்பத சோதனையினாலும்,

மிகவும் விசாரித்துணரத்தக்க தொம்பத சோதனையினாலும், தத்துவசோதனை ஞானத்தினாலும், விதேககைவல்ய ஞானத்தினாலும் விடப்படுவது வீடெனப்படுவதாம்-எ.று.

விரிவுரை

மூலப்பகுதி, மாயை, அவித்தை, ஆவரணம், விட்சேப மென்னுமைந்தையும் நிரலே தொலைக்கவேண்டிப் பரிபூரணஞானம், தற்பதசோதனை, தொம்பதசோதனை, தத்துவசோதனை, விதேகமுத்தி என வைந்தாகக் கூறுதலால், நிரனிறையணி. பரிபூரண ஞானத்தால் மூலப்பகுதி தொலையும் வகை: ஜனன மரணமும், அவஸ்தாத்திரயங் களும், காட்சிகளும், ஸ்தூல முதலிய தோற்றங்களும், அவ்வவற்றிற்குரிய இன்ப துன்பங்களுந் தோன்றி மறைதற்காதாரம் அறிவாதலால் அந்தந்தமய மாகாது அறிவாக விளங்கிநின்றவிடத்து ஞானமெனவும், அந் நிலையை மறந்தவிடத்து அஞ்ஞானமெனவும் பொருள்படுமாதலின் இவ்விரண்டு பாரிசமுஞ் சாயாது நடுநிலைதானாயவிடத்துச் சற்றுஞ் சலன முறாமையும்; தற்பதசோதனை ஞானத்தால் மாயை தொலையும் வகை. அந்நடுநிலைநழுவிய விடத்து அஞ்ஞானம் ஞானம்போற் காண்டலின் சகத்துப் பிரதிபலிக்கும். அதனை மெய்யாகக் காணவரும். அங்ஙனங் காணுதலாகிய மயக்கம் சமஷ்டி விகாரத்திலாதலால் அந்தச் சமஷ்டிவிகாரமுந் தற்பதசோதனையில் நில்லாதழியும் . அங்ஙனமழிந்தவுடன் சிவப்பாழாதலால் அது தானாயவிடத்துச் சற்றுஞ் சலனமுறாமையும்; தொம்பதசோதனை ஞானத்தால் அவித்தை தொலையும் வகை; ஒருகால் தற்பத சோதனை ஞானம் நழுவிய விடத்து மீண்டுஞ் சகத்துத் தோற்றும். அங்ஙனந் தோற்றியவழி அதனது காரியமாகிய வியட்டிதூலதேகந் தோற்றும். அதைத் தானெனத் திடமாகக் கொண்டது அவித்தை யெனப்படுமாதலால் அது நாசமுறுவ தெங்ஙனம்? உறாத விடத்து அல்லலே பெரும்பயனாக முடியும். அதனை ஒழிக்கத் துணிந்தவிடத்துத் தொம்பதசோதனை செய்ய வேண்டிவரும். அந்தத் தொம்பதசோதனையில் தூலவுடல் ஆதேயமாகவும், உபாதேய மாகவும் விகாரமாகவும், ஆரோபமாகவு மேற்றற்கியையும்.

நிற்கும். அம்மயக்கத்திற்குப் பேர் அவித்தையெனலால் அவ்வவசரத்தேற்குநிலை சீவனென வும், அந்நிலை மெல்ல விழுந்தவிடத் தேற்குநிலை சமுசய நிச்சய சாஞ்சல்ய மாதலால் கரணமெனப்படும். அக்கரணமே தானாய் அச்சைதன்யம் மயக்குற்று நின்றவவசரம் பிரமாதாவெனவும், அதுவும் மெல்ல நழுவியக்கண் இடந்தரற்பாலது இந்திரியமாதலால், அவ்விந்திரிய மயமாய் அந்தச்சைதன்யம் நிற்குமவசரநிலை பிரமாணமெனவும், அதுவுந்தவறிய விடத்திடமாக நிற்றற்பாலது விடயமாதலால் அச்சைதன்யம் விடயமயமாயவிடத் தேற்கு மவசரநிலை பிரமேயமெனவும்,அங்ஙனமும் நில்லாது அதோமுகத்த தாயவழிச் சுகப்பேற்றதா நிற்றலின் அந்தச்சை தன்யம் நிற்குமவசரநிலை பலமெனவும், பேர்பெறுதற் கியைந்து நிற்றலின் காரணக் குறியென்றாம். ஓர்சைதன்யமே அவ்வவ் வவசர நிலையாதல் போற் காண்டலின் அவ்வவ்வவசரந்நிலைப் பெயர் தந்தனர். இவ்வவசர நிலைகளும் அவ்வவற்றிற்கியைந்த பேர்களும், அறிவே வடிவாயவிடத்தெங்ஙனம் நிலையுறும்? ஆதலினிவையனைத்துங் கற்பிதமெனக்கண்டு தானே தானாகநிற்பது கௌணமன்று; முக்கியமென்க.

## 16. அஷ்டப்பிரமாணம்

உற்றெதிரே காண்டல்பிரத் தியட்சமனு மான
மோங்குபுகை கண்டு நெருப் புண்டெனவே யுணர்தன்
மற்றுவமைமரைபசுப்போலெனல்சத்தம்பெரியோர்
வாய்ச்சொல்லருத் தாபத்தி மதத்தவுட லதனா
லற்றவுப வாசியொளித் துண்பானென் றுணர்த
லபாவமுன்பி னிடையொருகாலத்துமிலை யென்னல்
நற்றியவிம் மரத்தினிற்பே யுண்டெனலை தீக
நாட்டுதலே சம்பவம்ப்ர மாணமெட்டா நவிலும்.

(இ.ள்.) உற்றெதிரே காண்டல் பிரத்தியட்ச மனுமான மோங்குபுகை கண்டுநெருப் புண்டெனவே யுணர்தல்- எ-து நேரே ஒன்றினையுற்றுக்காண்டல் பிரத்தியட்சப் பிரமாணமாம். மேலே ஓங்கி யெழுகின்ற புகையைக்கண்டு அங்கே நெருப்புண் டெனக்கோடல் அனுமானப் பிரமாணமாம்; மற்றுவமை மரைபசுப்போலெனல் சத்தம் பெரியோர் வாய்ச்சொல் -

எ-து, அப்பிரத்தியட்சமாநின்றுள்ள மரையென்னுமோர் மிருகத்தைக்காண விரும்பினோனுக்கு அஃது அலைதாடியின்றிய பசுவை யொக்குமெனக் கூறுதல் உவமானப் பிரமாணமாம். சுருதியுத்தியனுபவ மொத்துணர்ந்த மகான்களது வாக்கியமே சத்தப்பிரமாணமாம்; அருத்தாபத்தி மதத்தவுடலதனா லற்ற வுபவாசியொளித் துண்பானென்றுணர்த லபாவ முன்பினிடை யொருகாலத்து மிலையென்னல்-எ-து மதத்துக்கொழுத்திருக்கின்ற உடல் காரணமாக அன்னபானம் அருந்துவதே இல்லை நானித்திய வுபவாசி யென்பானது சொல்லைநம்பாமலிவன் கரவில் உண்கின்றா னென்றுணர்தல் அருத்தாபத்திப்பிரமாணமாம். இக்கடபடம்; மண்ணையும் நூலையுமன்றி முன்னும் பின்னும் இடையிலும் எப்போது மில்லையெனச் சாதித்தல் அபாவப்பிரமாணமாம்; நற்றிய விம்மரத்தினிற்பேயுண்டென லைதீகம்-எ-து யாவராலும் விரும்பத்தக்க விந்த விருட்சத்தில் பேய் உண்டெனக்கோடல் ஐதீகப்பிரமாணமாம்; நாட்டுதலே சம்பவம்ப்ர மாணமெட்டா நவிலும்-எ-து நூறென்னுந் தொகையன்றி ஆயிரமென்னுந் தொகை வருதற்கிடமேயில்லையெனச் சாதித்தல் சம்பவப் பிரமாணமாம். இங்ஙனமாதற் கியைந்த பிரமாணங்கள் எட்டென வேதங்கூறா நிற்கும்-எ-று.

விரிவுரை

மற்று - அசை. நவிலும் என்னும் வினைமுற்றுக்கு எழுவாய் வேண்டுதலின் வேதமென்றார். பிரத்தியட்சப்பிரமாணமிரு வகைத்து; விடய கதப் பிரத்தியட்சம் ஞானகதப்பிரத்தியட்ச மென. விடயகதப் பிரத்தியட்சம் தன்னை அயலாகவும் ஞானகதப் பிர்தியட்சந் தன்னைத்தானாகவுங் காண்டலை. அனுமானப்பிரமாணம் மூன்றுறுப்புகளையுடைத்து, அவை; பிரதிஞ்ஞை ஏது திருட்டாந்தமென்பன. இம்மலை-யக் கினியுடைத்தெனல் பிரதிஞ்ஞை. புகையாலெனல் ஏதும்மடைப்பளியோ வெனல் திருட்டாந்தம். இன்னமிவ்வாறு விரிந்து வருவனவற்றையும் ஏனைய பிரமாணங்களின் மிக்க விரிவனைத்தையும் விரிக்கப்பெருகுமாதலால் இந்நூலாசிரியர் சுருக்கியுரைத்தனர்; சுருங்கச் சொல்லி விளங்க வைத்தற்கு, ஞானகதப் பிரத்தியட்சம் இருவகைத்து, போலிஞானம் எதார்த்த ஞானமென. போலிஞானகதப் பிரத்தியட்சமாவது

பிறவிக்குருடனுக்குத் தெய்வகதியால் பூதசூரியன் காணப் பட்டாற்போல அகக்குருடனுக்குப் பூர்வதவ சம்ஸ்காரத்தால் ஞான சூரியோதயங் காணப்படும். அவனுக்குச் சில காலவரையுங் காணப்படாத வுலகம் பின்னர்க் காணப்பட்டுவரஅதனை அனாதி நித்தியமென்பன். அதுபோல இவனுக்குச் சிலகாலவரையுங் காணப்படாத வுலகம் பின்னர் மெல்ல மெல்லக் காணப்பட்டுவர அதனை அனாதி நித்தியமென்பன். இதனால் ஏகத்துவம் வாய்ப்ப தெங்ஙனம்? கூடாமையின் முடிவறியா துழல்வது. இனி, எதார்த்த ஞானகதப் பிரத்தியட்சமாவது அங்ஙனங் காணப்பட்ட ஞானசூரியோதய விளக்கத்தில் விடாத நாட்டம் பல்லூழிகாலம் பயிலப்பயில அங்ஙனம் பயிறலே ஞானசூரியனுக்குலகம்; உபாதேயம் - ஆதேயம் - ஆரோபம் - விகாரம் - அத்தியாசம் - கற்பனை - சாயை - எனப்பொருடரலெ அதனதியல்பாகும். இங்ஙனமாயவியல்பு ஏகமேவத்துவைதமாக்கி நிலைக்கச் செய்வது. போலிஞானத்தை எதார்த்த ஞானமெனக்கொண் டகங்கரித்தலை மறுத்தது முரணேனும் எதார்த்த ஞானமடைதற்கு அடுத்த நெறியாயிருத்தலின் ஏற்கும் தகுதியுடையது. இந்தப் போலிஞான முண்டெனக் கோடற்கு அனுமானப் பிரமாணமும் வேண்டும். எங்ஙனமெனின், ஓரறிவுமுதல் ஆறறிவு வரையினுமுள்ள விகற்பபேதநிலை உயிர்கள் மாட் டியங்கலின் இவ்வுயிர்கள் பிரஞ்ஞை யுடைத்தெனல், பிரதிஞ்ஞை; உணர்தலாகிய இயக்கத்தினா லெனல், ஏது; இதனைக் காண்டல் தன்னிடத்திலெனல், திருஷ்டாந்தம். இங்ஙனமாய அங்க முடைத்தாதலினென்க. இந்த அனுமானப் பிரமாண முன்டெனக்கோடற் குவமானப்பிரமாணமும் வேண்டும். எங்ஙனமெனின், எவ்வுயிரிடத்து முள்ள பிரக்ஞை துக்க நிவிர்த்தி தருவதெனின் யாதுபோல்வது? யாதிடத்தது? எங்ஙனங் காண்டற்கரியது என்ற சங்கை எழாதமைதற்குரிய நிலையது. வியாபக விளக்கமாயும் தன்னைத்தா னுணர்தற் பாலதாயும்; சுத்தத்தெளிவாயும் நிற்கும் வெளிபோல்வது; தன்னையே யிடமாகவுடையது, தன்னையன்றிச் சங்கற்பமின்றாய தாதலினென்க. இவ்வுபமானப் பிரமாண முண்டெனக் கோடற்குச் சத்தப்பிரமாணமும் வேண்டும். எங்ஙனமெனின்,

*இங்ஙனமாய-வுபமானத்தா வேற்பதாகிய நிலை சிறுபான்மை யாராலோ பெரும்பான்மையா ராலோவென்ற வையந் தவிர்தற்கும், சோதனை ஞாயம் பொருத்தம் முற்றுமுரணா தியைதற்கு மின்றி யமையாமையின், சத்தம் சுருதி ஆகமம் வேதம் இவைபோல் வன வொருபொருட்கிளவி. இச்சத்தம் அனைத்தையுங் கற்றதுயாதோ வதனைக் கற்கக் கருவியாயும் அயலைக்கற்கக் கருவியாயு நிற்றலைப்பற்றிப் பிரபல சுருதி அற்பசுருதி யென்றிரு வகைப்படும். இவ்வுபநிடதம் அயலை யுணர்த்தாமையானும் சோதனையாதி மூன்றிற்கு முரணாது நிற்றற்கியைதலானும் பெரும்பான்மையோராலேற்றற் பாலதெனவும் பிரபலசுருதி யெனற் கியைதற்பால தெனவு மிடந்தருதலின் சத்தப்பிரமாணமும் வேண்டிற்றென்க. அறிவிற் சிறந்த எம்மதத்தினர்க்கும் மதாபிமானங் கழன்றவிடத் துண்மை விளங்குமெனக் கண்டிருப்பதா லி:தெவர்க்கு முடண்பாடாம். எவர் மதமுங் கொள்கைக் குடன்படுமாறு போன் றி:ததீதத் திற்குடன்படலினென்க. வஸ்து பரிசோதனை லென்ன கற்று மாங்காங்குள்ள வுளவறியாவிடத் தென்ன முடிவுதரும்; இன்மையால் தள்ளற்பாற்றே. இங்ஙனமாய தீர்ந்தநிலை யில்லாவிடத் தீசுவரவாக்கியமெனினுமடியார் வாக்கிய மெனினுமென் சிறப்பு. இந்நெறியா லேற்கப்பெற்ற சத்தப்பிரமாண முண்டெனக் கோடற்கருத்தாபத்திப் பிரமாணமும் வேண்டும். எங்ஙனமென்ன், அற்வை யற்வு நுகருமென்னும் சுருதிப் பிரமாணத்தை யேலாவொருவனது மொழி தநுவாதிய சமஸ்த வுலகமும் பாரித்திருக்கப் பெறுதலினானும் இங்ஙனம் பாரித்திருத்தல் தனது சமதிருஷ்டி விசேஷ திருஷ்டியின் பிரதி பலனமாக் காணப்படுதலினானு மறுக்கற்பாற்று; தன திருபார்வையின் விகற்பமன்றி யில்லாமையின். யாதானுமோர் தூலதேகத்தைக் காண்புழி யாது பதார்த்தமென வுன்னில் அங்ஙனமாகச் சமஸ்த தேகமும் மாமிசவடிவாகக் காணுமன்றோ? அப்போது ஏகத்துவமுஞ் சமத்துவமுமாய நிலைவரும். அங்ஙனமுன்னாது கண்டமாக வுன்னில் அங்ஙனமாய சமஸ்த வடிவங்களுங் கண்டமாகக் காணுமன்றோ, அப்போது விசேடத்துவமும் அநேகத் துவமுமாய நிலைவரும். இங்ஙனமாயது தனது திருஷ்டி பேதத்தை யன்றி வேறாயிராமையின் அவனது மொழியி னருத்தத்திற் காபத்து*

நேரிட்டது. அருத்தா பத்தியெனல் சொற்பொருளுக்கு நஷ்டம் நேரிடல். ஆதலின், எற்கப்பாற்று; பலகாலுற்றுநின் றுணருமிடத்தென்க. இந்நெறியா லேற்கப்பெற்ற அருத்தாபத்திப் பிரமாண முண்டெனக் கோடற்கு அபாவப்பிரமாணமும் வேண்டும். எங்ஙனமெனின், "எங்கே நான் போற்றுவது மென்னையே" என்ற கவிபோல்வனவே பிரபலசுருதி யனைத் துமாதலாலும், இக்கருத்தையன்றி யற்பசுருதியெனற்குப் பொருள் வேறின்மையானும். எனதெனில், விட்டவிலக்கணை யாதிய மூன்றும் போந்தது வேறுபயன் கருதியன்றாதலானும் மறுக்கற்பாற்றே. தன்னைத்தான் மறந்த மறப்பே ஜகஜீவபரமெனற்குப் பொருளாதலின் சோதனையில் அநர்த்தரூபமெனற் குடன்படுகின்றன. இவையனைத்துந் தனது பிரதிபலனமாதலின் இவை மெய்ப்பொருளன் றெனமறுக்க, அபாவம் நான்கெனப் போந்த தென்க. தனதுஸ்மரணையன்றிக் கடபடபாவம் வேறுளவாகத் தோற்றற்கு இடம் பெறாது போதற்கேதென்னையோ? இன்மையின் அபாவப்பிரமாண மேற்றற்பாற்றே. இதோ ஜகத்துளதெனின் உனது ஞெப்திப் பிரியத்தை யன்றி வேறு பொருளாகச் காட்டற்கிடந்தராததென்? ஆதலின், இன்றியமையாமைபற்றி அபாவப்பிமாணமும் வேண்டும். இஃதன்றியும் சச்சிதானந்தம் அநிர்த ஜடதுக்கம் என்னுங் குணத்தையன்றிப் பிரமத்துக்கும், ஜகத்தெனற்குங்குணி வேறிலதாதற்கும் சச்சிதானந்தத்தை யன்றி யனிர்த ஜடதுக்கம் வேறிலதாதற்குமேதென்னைகொலோ? இவையனைத்து முய்த்துணரா விடத் தெய்தற்பாலதாகிய மயக்கம் போக்கற் கேதுவாகிய அபாவப்பிரமாண முண்டெனக் கோடற் கைதிகப் பிரமாணமும் வேண்டும். எங்ஙனமெனின், ஜகத்துண்டென் பதில் ஓர் கர்த்தா விருக்கவேண்டும். உளனெனக் கொள்ளில் கண்டவரிருக்க வேண்டும். இன்றெனின், தனுகரணாதிகள் வந்து போதற்கும், உயிர்களியற்றுதற்கும், சேதனத்துவமும் கர்த்தத்துவமுமியல்பாயிருக்கவேண்டும். இன்மையால் ஒருவனுளனாகக் கோடற்பாற்று. நாஸ்திநபாதிக் குடன்படுவதென்னெனின், ஆஸ்திகமா நிற்பதும் நாஸ்திமா நிற்பதும் ஒனறிலொன் றில்லாமற்போவதும் அபாவமன்றோ, இந்த அபாவமுமறிவன்றியிருக்கவேண்டும்; இன்மையாற்

றள்ளற்பாற்றே, தானாகிய அறிவையன்றி யெம்மயக்க முமின்மையின் அறிவு கோடற்பாலதாதலினைதிகப் பிரமாணமும் வேண்டற்பாற்று. இங்ஙனமாய ஐதீகப்பிரமாண முண்டெனற்குச் சம்பவப்பிரமாணமும் வேண்டும். எங்ஙனமெனின், ஔப்தி அயலாக அணுவணுவா ஸ்புரிக்காவிடத்து மகத்தாக ஜகத்து காணப்படுதற் கேதின்மையானும் பிண்டித்த பொருளை யன்றிப் பிண்டப்பொருள் வேறிலதாக வுதாரணங் காட்டற் கியைதலானும் அது தாஷ்டாந்திரத்திற்குத் திருஷ்டாந்த மாதலானு மெங்ஙன முரணும்; ஔப்தி சலியாவிடத்து விக்கற்பனைகளனைத்து மெங்ஙனம் வருதற்கிடம் பெறும்; பெறாதாதலின் சம்பவப் பிரமாணமும் வேண்டும். எனவே, இவ்வஷ்டவிதப் பிரமாணமுந் தன் பாலிலெனக்காட்ட லிங்ஙனங் கூறியதென்க. இவ்வுளவறியாதார் தாஷ்டாந்திரத்திற் செல்ல வகையறியாது வாளாகற் றவலமாயின ரென்பதைக் குறிக்க விவ்வுபநிடதம் நிற்றலி னிதனை யாழ்ந்துணர்க வென்பது கருத்து.

17. சீவசப்தா வஸ்தை

மன்னியதோ ரஞ்ஞானந் தனையறியா
　　தது மறைப்பா வரண மாகும்
பன்னியவிட் சேபமென தெனலாப்த
　　வாக்கியமே பரோட்ச ஞானந்
தன்னிலைதா னானதுவே யபரோட்சங்
　　கண்டதொரு சந்தோ டத்தி
னந்நிலையே துக்கமும்போ யானந்த
　　மடைவதுமே ழவத்தைப் பேறாம்.

(இ.ள்.) மன்னியதோரஞ்ஞானந் தனையறியா தது மறைப்பா வரணமாகும்-எ-து. தன்னைத்தானறியாத வவசரம் நிலைபெற்ற அஞ்ஞானமெனப்படுவதாம். அங்ஙனம் அறியவொட்டாமல் மறைத்த மறைப்பாக நின்ற வவசரம் ஆவரணமெனப்படுவதாம்; பன்னியவிட் சேபமென தெனலாப்தவாக்கியமே பரோட்சஞானம்-எ-து. அங்ஙனம் மறைத்த மறைப்பால் எனதென

வந்த வவசரம் விட்சேபமெனப்படுவதாம். இங்ஙனம் மருண்டு கலங்கித் தவிக்குங்கா லோருறுதிமொழி தந் தாளவேண்டி ஒருவரங்கே வந்து கூறிய வவசரமொழி ஆப்த வசனமாதலால் பரோட்ச ஞானம் எனப்படுவதாம், தன்னிலை தான் ஆனதுவே யபரோட்சங் கண்டதொரு சந்தோடத்தினந்நிலையே துக்கமும்போ யானந்தமடைவதுமே ழவத்தைப் பேறாம்-எ.து அங்ஙனங் கூறிய வாப்தமொழியால் தன்னிலையில் தானாகத் தெளிந்து கலங்காது நின்ற வவசரம் அபரோட்ச ஞான மெனப்படுவதாம். அங்ஙனந்தன்னைத் தான் தரிசித்த வவசரத்திலெழுவ தானந்தப் பெருக்காதலா லதனா லுண்டாயவவசரம் துக்கநிவிர்த்தி யெனப்படுவதாம். அத்துக்கநிவிர்த்தி யெய்திய வவசரம் தடையற்றவானந்த மெனப்படுவதாம். இந்நெறித்தாகப் போந்த விவை யனைத்தும் ஏழவஸ்தையின் பயனெனப்படும்-எ-று.

*விரிவுரை*

அஞ்ஞானம்-காரணதனு. ஆவரணம்-சூக்குமதனு. விட்சேபம்-தூலதனு இதுகாறுங் கீழாயிறங்குநெறி. இதனைப் பகிர்முகத்ததெனவும்; பரோட்சம்- தூலதனுகழற்றி, அபரோட்சம்-சூக்குமதனுகழற்றி. துக்கநிவிர்த்தி- காரணதனு கழற்றி. தடையற்றவானந்தம்- மகாகாரணதனுகழற்றி இதுகாறும் மேலாச்செல்லுநெறி. இதனை அந்தர் முகத்ததெனவுங் கூறற் கியையுமாதலின், அத்தியாரோபம் அபவாதமெனக்கண்டாம். இஃது இருவினை யொப்பு மலபரி பாகர்க்கன்றி, ஏனையோரெத்திறத்தராயினும் அவர்க்கு விளங்காது தன்னிழப்பும் அகலாது. ஆதலின், "தன்னிழப்பை யென்னகற்றுச் சாதிப்பான்" என்றார் பிறரும். நுண்ணுணர் வோராயினும் ஞானாசானின்றி யமையாது. ஆங்காங்குப் புடைபெயர்ச்சி விகற்ப பேதமே வினைமுதல் விகற்பபேதமாகவும், குணவிகற்ப பேதமே குணிவிகற்ப பேதமாகவுந்தோன்றும், இவற்றை யாசானனுக்கிரக விளக்கத்தால் கண்டு கண்டகற்றில், செய்பவன் கருவி முதலியவாறும் பொருளிடங்காலம் முதலியவாறுமின்றித் தானேதானாக விளங்கும். இதனைக்காட்டற் கிங்ஙனங் கூறியதென்க. பரோட்சநிலை யெய்துமளவும் எத்தனையோ தூலதேகம் வந்து வந்தகலும். அதுகாறு மகலாது நின்றுள்ள

சூக்குமதனு அபரோட்சநிலை யெய்துமளவும் எத்தனையோ வந்து வந்தகலும். அதுகாறுமகலாது. நின்றுள்ளகாரணதனு துக்கநிவர்த்திநிலை யெய்துமளவும் எத்தனையோ வ்நது வந்தகலும். அதுகாறு மகலாது. நின்றுள்ள மகாகாரணதனு தடையற்ற வானந்தநிலை யெய்துமளவு மகன்றேவிடும். மகா காரணதனுவாவது தானே தானாயநிலை. அதுவுங்கற்பனை கழன்றநிலையெனப்படுதலினானும், அசுத்தங்கட்குச் சுத்தமெனப்படுதலினானும், ஆதிகாரணங்கட்கு அநாதிகாரண மெனப்படுதலினாலும் அதுவுந்தவிர வேண்டியதேயென்க. இதனை யனுபவத்தாலன்றிச் சுருதியுத்தி பூர்வகத்தால் முடிவுகாட்டற் கொண்ணாததால் மதஸ்தரென வேறுநின்றனர். மதமெனல் தத்தமக்குரிய கொள்கை. கொள்கை கடந்த தாதலின், அத்துவிதம் மகாதீதமெனப்படும். ஐயமுளதேல் சோதனை யாதிய மூன்றாலிப்போதே காணலாமென்க.

## 18. தூலசரீரமுதல் பிரமம் வரைக்கும் திருஷ்டாந்தம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கடவடிவு தூலவுடல் கடசலமே கரணங்
கடசலத்தி லழுக்கவித்தை கட சலவான் சீவன்,
கடவெளிமேல் வெளிசாட்சி சத்தாமிவ் விரண்டுங்
கடசலம் போற்றனு காரணங் கலங்கினுமே கலங்கா,
கடசலம் வற் றாநிழல் போலாசையினா லவித்தை
கலந்துநிற்கு மிரவியெதிர் போலிரண்டு நில்லா,
கடவெளிமேல் வெளிபோலசற் குருவருளா னான்குங்
கரந்து திர சாட்சிசத்தாக் காண்பதத்துவிதமே.

(இ.ள்.) கடவடிவு தூலவுடல் கடசலமே கரணங்கடசலத்தி லழுக்கவித்தை கடசலவான் சீவன்- எ.து. கடவடிவைப் போல்வது தூலசரீரம். கடசலம்போல்வது அந்தக்கரணம். கடசலந்தாலமைந்த வழுக்குப்போல்வது அவித்தை. கடசலப் பிரதிபிம்பாகாயம்போல்வது சீவன்; கடவெளிமேல் வெளிசாட்சி சத்தாமிவ்விரண்டும்-எ-து. கடத்துக்குள் நிறையநின்ற

*வெளிபோல்வது கூடஸ்தன். மேலே மேகத்துக்குள் நிறைய நின்ற வெளிபோல்வது பிரமம். இவையிரண்டுஞ் சத்தாமாத்திரமா நிற்றலின் சாட்சியெனப் படும். இவ்விருசாட்சியும் கடசலம்போற் றனுகரணங் கலங்கினுமேகலங்கா-எ-து. கலங்கிய கடம்போலவும் அதனுள்நின்ற சலம்போலவுந் தூல தேகமும் அந்தக்கரணமுங் கலக்கமுற்றாலும் கலங்குவனவல்ல; கடசலம் வற்றாநிழல்போலாசையினாலவித்தை கலந்து நிற்கும்-எ-து. நீங்கா நிழலினால் கடசலமும் அழுக்கும் வற்றாது நிற்குமாறு போன்று நீங்காவாசையினால் அந்தக்கரணத்தோடு அவித்தையும் நீங்காது கூடிநிற்கும்; இரவியெதிர் போலிரண்டு நில்லா-எ-து பூதசூரிய சந்நிதியில் வைத்த கடசலமும் அழுக்கும் எங்ஙனம் நில்லாவோ வதுபோன்று,ஞானசூரிய னெதிரில்வைத்த அந்தக்கரணமும் அவித்தையும் நிலையுறாதழியும்; கடவெளிமேல் வெளிபோல்சற் குருவருளா னான்குங் கரந்துதிர சாட்சி சத்தாக் காண்பதத்து விதம்-எ-து அங்ஙனமழியவே கடாகாயம் மேலே மகாகயம் கடசலப் பிரதிபிம்பாகாயம் மேகசலப் பிரதிபிம்பாகாயம் ஆகிய நான்கும் அழியும். அதுபோலச் சாட்சியாகிய கூடஸ்த பிரமமும் அவற்றின் கற்பனை யாகியசீவேசுரரும் சற்குருவின் மிக்கவனுக்கிர கத்தாலழியும். அழிந்தவுடன் நான்காகாயத் திற்கும் விலட்சணமாகவும் ஸ்திரமாகவும் சாட்சியாகவும் உண்மை யாகவுங் காணப்படும் ஏகாகாயம்போல அப்போதே நான்குசைதன்யத்திற்கும் விலட்சணமாகவும் ஸ்திரமாகவும் சாட்சியாகவும் உண்மை யாகவும் விளங்கும் ஏகசைதன்யமே அத்துவிதமெனப்படுவ தாம்-எ.று.*

*விரிவுரை*

*ஏ-அசை. கடவெளிமேல் வெளிசாட்சி சத்தாமிவ் விரண்டும் என்றதனானும் நான்கு மென்றதனானும் மேகவடிவ தூலவுடல். மேகசலம் கரணம். மேகலத்தில் அழுக்குமாயை மேகசலப் பிரதி பிம்பாகாயம் ஈசன். கடவெளிசாட்சி கூடஸ்தன். மேகவெளிசாட்சி பிரமம். எனக்கொள்ளவேண்டிதாயிற்று. மற்றவைகளையு மிதுபோல் நேர்நிரனிறையாக்குக. திரசாட்சி யெனற்குமாறாகச் சடசாட்சியென்பாருமுளர். இரவியெனப் பொதுப்படக்*

கூறினாரேனும் உவமேயத்தில் கொள்ளவேண்டுவது பற்றி ஞானசூரியனென்றும், ஏனையகுருவால் அவித்தை தொலையாத போது மாயையெங்ஙனந் தொலையும்? தொலையாவிடத்து முன்போல நான்கு சைதன்யமாக விரியுமாதலின் சற்குருவருளால் என்றார். ஏகாகாயமே நான்காகாயமாகக் காணப்படுமாறு போன்று ஏகசைதன்யமே நான்கு சைதன்யமாகக் காணப்படுதலை விசாரித்துத் தெளிதலே அத்துவிதமெனப் பட்டதென்க.

*19.துவம்பத தத்பதானுபவம்.*

தொம்பதத்தி லுபாதிகெடச் சொரூபமதா மதுபோற் றொன்மையதாந் தற்பதசோ தனைசெயவும் வேண்டுந், தம்பவுடன் மூன்றினுக்குஞ் சீவனுக்கு முதலாஞ் சாற்றுதன்மாத் திரைப்பகுதி தானுமிருப்பதனாலும்பரிபூ ரணமறைந்து ஞானமின்றி முனம்போ னாடு முயி ராதலினா னாதனருட்படியே, யிம்பருபா தியும் போய் நிருபாதிகமா மதுபோலெப்பொருளப் பொருளாகி யிருப்பதுதன் னியல்பே.

(இ.ள்.) தொம்பதத்தி லுபாதிகெடச் சொரூபமதா மதுபோல் தொன்மையதாந்தற்பதசோ தனைசெயவும் வேண்டும்- எ-து. தொம்பத சோதனை செய்யுமிடத்துவியட்டியுபாதித் திரயங்கெடும். கெடவே சீவசாட்சியாகிய கூடஸ்த சைதன்யம் தனது சொரூபமாக விளங்கும் அங்ஙனம் விசாரித்துத் தெளிந்தது போல, இதற்கு முதற் காரணமாகத் தொன்று தொட்டுள்ள சமஷ்டிவுபாதித்திரயங்கெட்டு ஈசுரசாட்சியாகிய பிரம சைதன்யம் விளங்குமாறு தற்பதசோதனையுஞ் செய்ய வேண்டும். செய்யாவிடத்து; தம்பவுடன் மூன்றினுக்குஞ் சீவனுக்கு முதலாஞ் சாற்றுதன் மாத் திரைப்பகுதி தானுமிருப்பதனால் - எ-து. வியட்டியுபாதித் திரயத்திற்கும் அவற்றிற் கபிமானியா நின்ற சீவனுக்கும் அவனுக் காதாரமாநின்ற அவித்தைக்கும் முதற்காரமா நின்றுள்ள சமஷ்டியுபாதித் திரயம், அவற்றிற்கபிமானியாகிய ஈசன், அவனுக் காதாரமாநின்றுள்ள மூலப்பிரகிருதி ஆகியவிவை நசியாதிருப்பதினால்; நம் பரிபூரணமறைந்து ஞானமின்றி முனம்போ னாடுமுயிராதலினால்- எ-து-நமது பரிபூரண சுவானுபூதிநிலை மறைந்து ஞானப்பிரகாசமு மின்றி முன்னர்

அஞ்ஞான தசைபோல விடயங்களை யுயிர் நாடுதற்கியையுமாதலால்; நாதனருட்படியே யிம்பருபாதியும் போய் நிருபாதிகமா மதுபோலெப் பொருளப் பொருளாகியிருப்பது தன்னியல்பு- எ-து அங்ஙனம் நாடாதிருக்கும்வண்ணம் சற்குருநாதனையடுத்து அவனருள் வழிச்சென்று அவன் விளக்கிய விளக்கப்படி நின்றால் சமஷ்டியுபாதித் திரயத்தோடே வியஷ்டி யுபாதித்திரயமுங் கழன்று சோபாதிகமின்றி நிருபாதிகமாக விளங்கும். அங்ஙனம் விளங்கியவாறு போல பிறழாது நிற்பின், சகிதமும் ரகிதமுங்கழன்று நிற்பதெப்பொருளோ அந்தப்பொருள் தானாகி யிருப்பது தனதியல்பு நிலையாம்- எ.று.

விரிவுரை

ஏ.அசை. தூலவுடலையன்றி நானெனற்குப் பொருள் கருதிப் பிரமாணத்தாலும் யுத்திப் பிரமாணத்தாலு முயிரெனக் கோடலேயன்றி அனுபவத்தால் சற்றுமின்மையின் முமூட்சுவானவன் நானார்? உடல் வந்தவகை யேது? என்று விசாரிக்க வேண்டிவரும். அப்போது தொம்பதசோதனைத் தெளிவால் ஐயந்திரிபற விளங்கும். அது மட்டும் தீரத்தெளிந்தனமென் றிறுமாந்திருக்கில், நிஷ்டையினின்று விழிக்குந்தோறும் உலகந்தோன்றும். தோன்றியவிடத் ததுவாக வேண்டிவரும். வரின், ஆதாரநோக்கு இழக்கும். இழக்கின் சமத்துவநிலை கெட்டு விசேடநிலை மேலிட்டு ஆரோபமே மெய்ப் பொருளாக விளங்கும். விளங்கின், பிறப்பு இன்ப துன்பங்களாகிய சுழலில் கலங்கச் செய்யும். ஆதலால் தற்பத சோதனை செயவும் வேண்டும் என்றார். தத்துவமசி சாமவேத மகாவாக்கியம். தத்தெனல் ஈசன். துவம்மெனல் சீவன். அசியெனல் பிரமம். இது வாக்கியார்த்தம். இஃதன்றியும் தத்தெனல் ஈசுர சாட்சியாகிய பிரமம். துவம்மெனல் சீவசாட்சியாகிய கூடஸ்தன். அசியெனல் ஐக்கியம். இது இலக்கியார்த்தம். சீவனுக்கு வியஷ்டிதூல வடிவுபோல ஈசனுக்குச் சமஷ்டிபூத பௌதிகம் பலவடி வாதலினானும், அந்தச் சமஷ்டி தூலவடிவுக்கு வியட்டி தூலவடிவு ஆதேயம் - உபாதேயம் - ஆரோபம் - விகாரம் இன்னுமிவை போல்வன பிறவுமென முரணா தேற்றற்பால தாதலினானும் தடுக்கற்பாற்றன்று. இங்ஙனஞ் செய்யா விடத்து நம் பரிபூரண

மறைந்து ஞானமின்றி முனம்போ னாடு முயிர் என்னு மனுபவம் வாய்க்காதோ? ஆதலின், அதையும் விசாரித்துத் தெளிய வேண்டியதென்க. பௌதிகங்களாகிய அண்டபிண்டங்கள் பூதத்துக்குச் செயற்கையாயும், காரியமாயும், தனக்கெனச் சொரூபமொன் றின்மையாயும் நிற்றல் போல அப்பஞ்ச பூதமும் மாயைக்குச் செயற்கையாயும், காரியமாயும், தனக்கெனச் சொரூப மொன்றின்மையாயும் நிற்குமாதலின் இம்மாயை நசிப்பது தற்பதசோதனையாலன்றிக் கூடாமையின் ஏற்றற்பாலதென்க.

## 20. பஞ்சைக்யம்.

ஈசனுக்குத் தூலவுடல் பூதபௌ திகமே யீசனுக்குச் சூக்கவுட லிருவகைச்சூக் குமமே, யீசனுக்குக் காரணமா முடன்மாயை யவனே யீசனவன் சாட்சியே பிரமமிவை யைந்தாம் ஈசனுக்குஞ் சீவனுக்கு மைக்ய மெவ்வா றென்னி லீசனுடன் மூன்றனைப் பார்த் திடிலிவனுக் குடலே, தீசனெனி லிவனிலையீசுர சாட்சியென்றா லிவன் சாட்சி வேறொமற் றிதுவேபஞ்சைக்யம்.

(இ.ள்.) ஈசனுக்குத் தூலவுடல் பூதபௌதிகமே யீசனுக்குச் சூக்கவுட லிருவகைச் சூக்குமமே ஈசனுக்குக் காரணமாகும் முடன் மாயை- எ-து சீவனுக்குத் தூலவுடல்போல ஈசனுக்குத் தூலவுடலாவது ஐம்பெரும் பூதமும் அவற்றின் காரியமாகிய அண்ட பிண்ட பௌதிகங்களுமாம். சீவனுக்குச் சூக்கும வுடல் போல ஈசனுக்குச் சூக்கும வுடலாவது காரணகாரிய வகையா நின்றுள்ள விருவகைச் சூக்கும வுடலுமாம். சீவனுக்குக் காரண வுடல்போல ஈசனுக்குக் காரண வுடலாவது உபாதான உபாதேயமா நின்றுள்ள விருவகைக் காரண வுடலுமாம்; அவனே யீசனவன் சாட்சியே பிரமமிவை யைந்தாம்-எ-து அவித்தியாப்பிரதிபலனன் சீவனும் அவனுக்குச் சாட்சி கூடஸ்தனு மென்றாற்போல மாயாப் பிரதிபலனன் ஈசனும் அவனுக்குச் சாட்சி பிரமமும் என்றாதலின், இவையே பஞ்சைக்ய மெனப்படுவதாம்; ஈசனுக்குஞ் சீவனுக்கு மைக்யமெவ்வா றென்னில்-எ-து இங்ஙன மிருக்க விருவருக்கும் ஐக்கியம் வாய்க்குமென்ற தெங்ஙனமெனின்;

ஈசனுடன் மூன்றனைப் பார்த்திடி லிவனுக்குடலே தீசனெனி லிவனிலை யீசுர சாட்சி யென்றா லிவன் சாட்சி வேறொமற் றிதுவே பஞ்சைக்யம்-எ-து ஈசனது மூன்றுடலையும் ஆராய்ந் துணருமிடத்து இநதச் சீவனுக்கென்று மூன்றுடலென்பதேது? எவற்றிற்கு மாதாரமா விருப்பனீச னெனில் சீவனென்பதேது? ஈசுர சாட்சி பிரமெனில் சீவசாட்சியாகிய கூடஸ்த னென்பது வேறோ? இல்லையே. ஆதலால் இங்ஙனமாகக் கொள்ள நிற்பதுவே பஞ்சைக்ய மெனப்படுவதாம்- எ-று.

விரிவுரை

இக்கவி சீவர்களது அகமமதையைக் கெடுக்க உணர்த்திய தென்பது. எங்ஙனமெனின், அகமெனல் நான். மமதை யெனல் என தென்பது. அகமெனல் தூலதேகமுதல் கூடஸ்த சாட்சி காறுமெனின், அவ்வவற்றிற்கு ஆதாரம் உபாதானம் அதிஷ்டானம் நிர்விகாரம் என்பன வில்லாதிருக்க வேண்டும். அங்ஙன மில்லையே. இங்ஙன மிருக்க, மமகாரமெனல் எங்ஙனந் தலைகாட்டற் கிடம்பெறும். இஃதெவர்க்கு முடன்பாடாதலால் மறுக்கற் பாற்றன்று. மறுப்பார் உய்த்துணராதார். இவ்வாறு தெளியப்புகின் ராகத் துவேஷாதிகள் தலைகாட்டுமோ? ஆதலால், "இந்தச் சீவனால் வருமாறு பகையெலா மிவன் செய லல்லாமல் அந்தத் தேவனால் வருமென்ற மூடர்கள் அதோகதி யடைவார்" என்றது ஏற்றற்பாற்றோ? தள்ளற் பாற்றோ? தள்ளற் பாற்றெனின், மாயா காரணத்தை யன்றிக் காரிய மிருக்கவேண்டும். ஏற்றற் பாற்றெனின், அகம் பிரமமெனக் கொண்டழிவரன்றோ? ஆதலின், ஆராய்ந்து தெளிதற்கு முன்னர் யாதுங் கூறற்சுவென்பது கருத்து. அவனெனலும் நானெனலுஞ் சுயஞ்சோதி யன்றி யின்மையாற் கற்பிதமே. இவ்விரு நாமமு மெடுத்தாளுதல் பயன்ன் றென்க. உண்டெனின், உபாதி சகிதத்தில் காணும் திரிபுடியாமென்க.

## 21. அத்துவைதநிலை.

தேகமே தானெனல் சீவத்தொய்த மதுபோய்த் தெளிவுவரி லாகாயத் தின் வடிவே தானாய்ப், போகமாந் தனுகரணம் வாயுவைப்போ லியங்கப் பொருந்துமவனேயீச

னெனப்பொலிவு தன்னி, லேகமா யண்டமெலாங் கடுகளவாய்த் தோன்று மவையகண்டா காரமதுவே யீசத்தொய்த, மாகமா மகண்டாகா ரமுநீங்கிக் கடுகா வண்டமுந்தோன் றாதவிடத் தத்துவித நிலையே.

(இ.ள்.) தேகமே தானெனல் சீவத்தொய்தம்- எ-து அறிவு வியட்டி தூலதேகமே தானெனத் திடங்கொண்டு நிற்பது சீவத்தொய்த மெனப்படும்; அதுபோய்த் தெளிவுவரி லாகாயத்தின் வடிவே தானாய்ப் போகமாந் தனுகரணம் வாயுவைப்போ லியங்கப் பொருந்து மவனே யீசன்-எ-து அப்போது சிறிது விசாரணைத் தெளிவுவரில் அந்நிலை மெல்ல நழுவி ஆகாய வடிவே தானாக வெய்தப் பெறும், பெறின் போகநுகர்தற் கருவியாய தனுகரணங்கள் ஆகாயத்தில் வியாப்பியமாகிய வாயுவைப்போ லியங்கவாய்க்கும் அங்ஙனம் வாய்த்த வவசரம் அவ்வறிவு ஈசனெனப்படும்; அப்பொலிவு தன்னிலேகமா யண்டமெலாங் கடுகளவாய்த் தோன்றுமவையகண்டாகார மதுவே யீசத்தொய்தம்- எ-து அங்ஙனமா நின்ற பரிபூரண நிலையில் ஏகத்துவம் வாய்க்கும், வாய்க்கில் சகல வண்டங்களும் கடுகளவாத் தோன்றும். தோன்றில், அஃதகண்டாகார நிலையெனப்படும், அந்நிலையே ஈசத்தொய்த மெனப்படும்; ஆகமா மகண்டாகாரமு நீங்கிக் கடுகாவண்டமுந் தோன்றாதவிடத்தத்துவிதநிலை- எ-து அந்த ஈசத்தொய்தமே தனக்குடலாய் அமையும் மேல்மேல் செல்லு நெறியாலவ் வகண்டாகார நிலையும் நழுவும்; நழுவில், மெல்ல மெல்ல முன்னர்க் கடுகளவாத் தோன்றிய சகல வண்டங்களும் இந்நிலையிற் றோன்றா தழியும். இங்ஙனந் தோன்றா தழிந்த நிலையாதோ வந்நிலையே சுத்த அத்துவித மெனற்கியைந்த நிலையெனப்படும்-எ-று.

விரிவுரை

ஏ - அசை. அதுபோய்த் தெளிவு வரலாவது அண்ட பிண்டங்க ளனைத்தும் நான்கு பூத சையோகத்தை யன்றி யில்லையெனவும், அந்நான்கு பூதங்களில் நீரையன்றி மண்ணும் அனலையன்றி நீரும் வாயுவையன்றி அனலும் ஆகாயமன்றி வாயுவும் இல்லையெனவும், இவற்றிற்கு நுண்ணிய பூதமாகிய

*அபஞ்சீகிருத பஞ்சபூதத்தை யன்றி ஆதாரஞ் சற்று மில்லையெனவும், தக்க கருவிகளாலும் மிக்க நுண்ணிய வுணர்வினாலும் இனி ஐயமுறாது தெளிதலை. இங்ஙனமாய நிலையில் ஆகாயத்தின் வடிவேதானெனவும், அதில் தனது தனுகரணங்கள் வாயுவைப்போ லியங்குமெனவுங் கூறிய வுவமைக்கு முரணென்னை? இன்றாதலின், பொருந்து மவனே ஈசனென்றார். அங்ஙனமாய வகண்டபரிபூரண நிலையில் சமஸ்த வண்டங்களும் கடுகளவாத் தோற்றற் கியைதலின் அந்நிலை யீசத்தொய்த மெனப்பட்டது. சீவத்தொய்தமும் ஈசத் தொய்தமுங் கற்பனையெனக் காட்ட அகண்டாகாரமும் நீங்கிக் கடுகா அண்டமுந் தோன்றாதவிடத் தத்துவித நிலையென்றாரென்க. இதனைச் சுத்த அத்துவித நிலையென யாம் அடை கொடுத்துரை செய்தற்கு முரணென்னை? ஆதலினேற்கப் பாற்றென்க. அனைத்து மொருங்கேகமாகா விடத்து அத்துவிதமெனல் பொருந்துமா? பொருந்தாது ஆதல்ன் இங்ஙனங் கூறினாரென்க.*

### *22. சீவன் எதைத் தியானித்தாலும் அந்தமயமாவனெனல்.*

*ஐயமின்றித் தெய்வவுருத் தியானித்தா லதுவா மருவுருவைத் தியானித்தாலட்டமூர்த் தியுமாம், பொய்ய விரண் டையுந்தவிர்ந்து தானாகி யிருந்தாற் பூரண மாஞ் சீவனெதிற் பொருந்துமது வாமான், மையலுறு மனம்விடயத் தாசையுற்றே யதுவாய் மரணசன னமும்விளைந்த வாற தென்றே யுணர்ந்து, மெய்யறிவே தானாகப் பாவித்தாலதுவா விளங்குவர்யா வருஞ்செனியா வீட்டையுமெய் துவரே.*

*(இ.ள்.) ஐயமின்றித் தெய்வவுருத் தியானித்தா லதுவா மருவுருவைத் தியானித்தா லட்டமூர்த்தியுமாம்- எ-து யாதானுமோருயிராகிய வறிவு ஊர்த்த முகத்தில் தத்தமக்குரிய வுபாசனா மூர்த்தங்களி லொன்றை யுயிர்விடு காலையில் ஐயமின்றித் தியானிக்குமாயி னதுவாகச் சனிக்கும். அங்ஙனமின்றி ரூபாரூப நிலையினதாகிய வடிவைத் தியானிக்கில் அஷ்டமூர்த்த சொரூபியாகிய பரமசிவனாகவுஞ் சனிக்கலாம்; பொய்ய விரண்டையுந் தவிர்ந்து தானாகி*

*யிருந்தாற் பூரணமாம்- எ-து-கற்பனா வடிவெனற் கியைந்த விவ்விரண்டு நிலையையும் விட்டு நீங்கித் தானே தானாகி யிருந்தால் பரிபூரணநிலைய தாகும்; சீவனெதிற் பொருந்து மதுவாம்- எ-து ஆதலின் சீவனாகிற சைதன்யம் யாது யாதாகத் தடிக்கின்றதோ வதுவதுவாகச் சனிக்கும்; மையலுறுமனம் விடயத் தாசையுற்றே யதுவாய் மரணசனனமும் விளைந்த வாறதென்றேயுணர்ந்து-எ-து அதோமுகத்தில் திருக்குத் திருசியநிலை தெரியாது மயக்குற்று நிற்கும் மனமானது விடயங்களில் பிரியமோதப் பிரமோதமாநின்று தானதுவதுவாகப் பிரதிபலித்துத் தனது பிரதிபலன மெனவறியாது மெய்யென நம்பித் தானுமதுவதுவாகி அங்ஙனம் அதுவதுவாதல் சகசமாக நிற்றலால் பிறப்பிறப்புஞ் சகசமாக வெய்தும். அது காரணமாக வின்ப துன்பங்களுஞ் சகசமாக வெய்தும், எய்தவே, உறவு பகை பந்தவிளைவு முடிவின்றி யெய்தும். எய்தவே, அதுவது அந்தந்தச் சனனத் தளவினதாகக் காணும். காணுதலால் முன்பின் சனன மில்லதாகத் தோற்றும். தோற்றுவதால் கண்டதே காட்சி கொண்டதே கோலம், தேகமே ஆத்மா போகமே முத்தி, என்றவனுபவம் இயற்கை நிலையினதாகவும், ஆஸ்திகமெனல் சொல்லளவினதாகவும் நடிப்பளவினதாகவும் எவ்வுயிர்பாலும் நிகழ்ந்துவருகின்றன. வருவதால், உபாதான உபாதேய நோக்குச் சற்று மின்றி யுத்தியால் பிதற்றி மீண்டு மம்மையலி லழுந்தும். அழுந்தவே, பிறவிப் பெருங் கடலை நீந்தற் கிடமின்றி வாளாமடியும். இங்ஙனம் மடியுமாதலைச் சாதனமேலிட்டா லுணர்ந்து; மெய்யறிவேதானாகப் பாவித்தா லதுவா விளங்குவர் யாவருஞ் செனியா வீட்டையு மெய்துவர்-எ-து. அங்ஙனம் சாதனமே லீட்டாலுணர்ந்தறிவு இருவகைத்து; பொய்யறிவு மெய்யறிவென. பொய்யறிவு: பொருளல்ல வற்றைப் பொருளாக வுணர்வது. இவ்விருவகையாக வுணர்தற் சேட்டை யறிவின் பாலதன்றி யேனையிடத் தின்மையின், அறிவொன்றே மெய் ஏனையவனைத்தும் பொய்யென வையந்திரிபு இன்றித் தீர்மானித் தவ்விருவகை நோக்குமகன்று பிரத்தியட்சமாக விளக்குவிப்பவர் பாற்சென்று அவரருணோக்கம் கிடைக்கப் பெற்று அதனால் சதோதயமாக விளங்கும் மெய்யறி*

வினைக்கண்டு அது சுசாதியாதி விகற்பமின்றி விளங்குவதால் அம்மெய்யறிவே தனதெதார்த்த நிலையினதாகக் கொள்ள வேண்டிவரும். அங்ஙனம் வருவதால், அதனைத்தானாகப் பாவிக்க வேண்டிவரும். அங்ஙனம் வருவதால் தானதுவாக நிலைக்க வேண்டிவரும். அந்நிலை நாளுக்குநாள் மேலீட்டால் இவ்விருபேதமுங் கழன்று சதோதயமாக விளங்கும். அங்ஙனம் விளங்குபவர் யாவரோ அவர்களனைவரும் இனிச் செனியா நிலையினதாகிய முத்தியையும் அடைவர்- எ-று.

விரிவுரை

ஏ-அசை. சீவன் எதைத் தியானித்தாலும் அந்தந்த மயமாவனெனற்கு முரணுளதேல் கூறுதும். இக்கணத்தில் அதுவது வாகாவிடத்து அதுவது காணட்டும். காணப்படாதெனின் யாதுகாரணத்தால்? சிந்தை வையாததா லெனின், சிந்தை வைத்த விடத்து எனையவை தோற்றா ததற்கும் அறியாததற்கும் எதென்னை? வேறுமயமான தாலெனின், வேறுமயமான விடத்துத் தோற்றாமையும், ஆகாவிடத்துத் தோற்றுதலுமென்றா லனைத்துஞ் சிந்தனாப் பிரதிபலனமெனற்கு முரணென்னை? இஃதன்றியும் தேக மென்னுமிடத்து அவயவங்களை யன்றித் தேகமெனலும், அவயவங்க ளென்னுமிடத்து அஸ்தி மாமிசாதிகளை யன்றி அவயவமெனலும், அஸ்தி மாமிசாதிகளென்னுமிடத்துப் பிருதிவி முதலிய பஞ்சபூதங்களை யன்றி அஸ்தி மாமிசாதிக ளெனலும், பஞ்சீகிர்த பஞ்சமாபூதமென்னுமிடத்து அபஞ்சீகிர்த பஞ்சமாபூதங்களை யன்றிப் பஞ்சீகிர்த பஞ்சமாதி பூதங்களெனலும் போயவாறெங்ஙனோ? வாயாடக்கற்ற மொழிகளைத் தள்ளி வஸ்துக்கள் சம்மதிக்கத் தக்க பொருத்தமான ஞாயநெறி செல்லில் சமஸ்தமும் மனோகற் பிதமாகவே முடியும். ஞானநூலனைத்தும் ஒருவன் சிறுவயதில்தானே மெய்யுணர்வு விளங்கச் செய்து கொள்ளவேண்டுமெனவும், மக்களுக்கெனப் பொதுப்பட விதித்த நூறாண்டு வயதென்னுமளவும் ஞானநிட்டை பயிலவேண்டுமெனவும் கூறியிருக்க, தெய்வ வுருத்தியானித்தா லதுவாதற்கும், அஷ்டமூர்த்தியைத் தியானித்தா லதுவாதற்கும்

தானாயிருந்தால் பூரணமாதற்கும் காலவரையறை வேண்டுமன்றோ? இங்ஙனமிருக்க விதனை மறுப்பதெங்ஙனம்? கூடாமையின் ஏற்றற்பாற்று. அஷ்டமூர்த்தமாவது பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், சூரியன், சந்திரன், ஆன்மா என்பன. தெய்வ வுருவாவது மூலாதார முதலிய ஆறிலும் அந்தந்தப் பாவனா வடிவமாகக் காணப்படும் பிரமன் முதலிய தேவதைகளும், இ:்தன்றியும், காளி சரஸ்வதி முதலிய தேவதைகளுமாம். தானென்னும் நிலைக்குத் தெய்வ வடிவங்களும் அஷ்டமூர்த்தமும் தனது பிரதிபலனமாதலினானும், கற்பிதமாதலினானும், பொய்ய விரண்டையுந் தவிர்த்து என்றார். இதனை யாராய வேண்டின், ஆறாதார நிலையிலும் பகிர்முக அந்தர்முக நிலையிலுங் கண்டு தெளியலாம். கலக்கமற்றவிடத்துக் கூடாமையின், ஐயமின்றி என்றார். குறியைக் குறியாது குறித்தலைத் தானாகி யிருந்தால் என்றார். மையல், தனது சத்தை யயல தாகக் காண்டல். அததுவாதல் போல்வதன்றி யெனக் குறித்தலாலும், அந்தந்தப் பயனை யடைவதன்றி யெனக்குறித்தலாலும், வீட்டையு மென்பதிலும்மை இறந்தது தழீஇய வெச்சம்.

## 23. இதற்கு இது விஷயமாமெனல்

ஏற்றமுடை யிந்தியத்தின் விடயமதே யுலக மிந்தியங்கள் கரணத்தின் விடயங்களாகுஞ், சாற்று கரணங்களுமா பாசனுக்கே விடயஞ் சாட்சிக்கு விடயமதாத் தயங்குவதா பாசன், போற்றுவிவே கக்ஞான விடயமதாஞ் சாட்சி புகன்றவிவே கமும்பிரம பூரணத்தின் விடயந், தோற்றரிய பிரமமொன்றின் விடயமன்றாதலினச் சொரூபநிலை வுணர்ந்ததுவாத் துலங்குவர்ஞானிகளே.

(இ.ள்.) ஏற்றமுடை யிந்தியத்தின் விடயமதே யுலக மிந்தியங்கள் கரணத்தின் விடயங்களாகும். எ-து உணர்தற் தன்மையுடைய பஞ்சேந்திரியங்களுக்கு விடயமாவது உலகமும் அகக்கரணத்திற்கு விடயமாவது புறக்கரணமாகிய விந்திரியங்களுமாம்; சாற்றுகரணங்களுமா பாசனுக்கே விடயஞ் சாட்சிக்கு விடயமதாத் தயங்குவதா பாசன்- எ-து

சீவனுக்கு விடயமாவது முற்கூறிய அந்தக்கரணங்களும் சீவ சாட்சிக்கு விடயமாவது மெய்போலிலங்குவதாகிய சீவனுமாம்; போற்றுவிவேகக்ஞான விடயமதாஞ் சாட்சி- எ-து துதிக் கத்தக்க விவேகஞானத்துக்கு விடயமாவது முற்கூறிய சீவ சாட்சியும்; புகன்ற விவேகமும் பிரமபூரணத்தின் விடயம்-எ-து பரிபூரண பிரமஞானத்துக்கு விடயமாவது முற்கூறிய விவேகஞானமுமாம்; தோற்றரிய பிரமமொன்றின் விடயமன்றா தலினச் சொரூபநிலையுணர்ந்ததுவாத் துலங்குவர் ஞானிகள் - எ-து விளங்கற்கரிய அந்தப்பிரம ஞானமோ முற்கூறி வந்த முறைபோல முன்பின் ஒன்றிற்கும் விடயமாகாது மேலொன்றில்லாமையின் அந்தப் பிரமசொரூப நிலையை ஐயந்திரிபற வுணர்ந்து அது தானாகவும் தானதுவாகவும் விளங்குக. இவ்வாறாக விளங்கினோர் யாவரோ வவர்களே ஞானிகளெனப்படுவர்- எ-று.

விரிவுரை

ஏ.அசை. விடயங்களை யறிதற்கு மேலாக நிற்றலின், ஏற்றமுடை எனப்பட்டது. உடையவென்பதிலீறெஞ்சியது. ஆக்கவினைக்குறிப்பெஞ்சிய விடங்களிற் கொள்க. தேற்றே காரத்தையு மிடமறிந்துகொள்க. உருபுமயக்கமும் பொருளறிந்து மாற்றுக. இங்கே சாட்சி யெனல் கடாகாயம் போல்வதின் கூடஸ்தனெனவும், விவேகஞானமெனல் மகாகாயம் போல்வதின் பிரமமெனவும், பிரமபூரணமெனல் ஏகாகாயம் போல்வதின் திரஞானமெனவும் கோடற்கியைந்தன வென்க. பரிபூரணமாகிய திரஞானமெனல் அபரிச்சின்ன மாதலினானும், நீக்கமறநிற்றலினானும், மேல் கீழொப்பின்மை யானுமொன்றின் விடயமயமாகாதெனற்கு முரணென்னை? இன்மையினெவர்க்கு முடன்பாடென்க. திரிபதார்த்தமாகவும், முப்பாழாகவும் அப்பாலுக் கப்பாலாகவும் விடாதுநிற்பது ஓர்தெரி வாதலினானும், என்னையானறியேன் அறிவேனெனலு மதுவாதலினானும் அநவத்தாதோட மெங்ஙன மெய்தப்பெறும் மறுக்கற்க.

## 24. தாதான்மியத்திரயம்

சகசமென்றும் பிராந்தியென்றுங் கன்மமென்று மூன்றாந் தாதான்மி யங்களிவை சாற்றிலகங் காரம், புகல்சீவ

னொடுகலத்தல் சகசமதாம், பிரம பூரணத்திற் கலப்பதுவே பிராந்திசரீ ரத்தோ, டகலாது கலப்பதுவே கன்மநா னறிவேன் கர்த்தாநான் றேகமக மென்பதுதா னிவைகள், பகர்செய்பிரா ரத்தத்தாற் றத்துவ ஞா னத்தாற் பணிசுழுத்தி யாலகலப் படுமளவுந் தொடரும்.

(இ.ள்.) சகசமென்றும் பிராந்தியென்றுங் கன்மமென்று மூன்றாந் தாதான்மியங்களிவை சாற்றில்-எ-து தாதான்மியங்கள் சகசமென்றும் பிராந்திஜமென்றும், கன்மஜ மென்றும் மூன்றுவகைப்படும். இவற்றை முறையே சொல்லுமிடத்து; அகங்காரம் புகல், சீவனொடுகலத்தல் சகசமதாம் பிரமபூரணத்திற் கலப்பதுவே பிராந்தி- எ-து சொல்லப்பட்ட சீவனோடு அகங்காரங் கலப்பாற்றிருப்பது சகசதாதான்மியமெனப்படும், பரிபூரண பிரமசொரூபத்தில் பிரியாமற் கலப்புற்று நிற்பதே பிராந்திஜ தாதான்மிய மெனப்படும்; சரீரத்தோ டகலாது கலப்பதுவேகன்மம்- எ-து வந்துவந்து மடியுங் தூலசரீரத்தோடு அகலாது கலப்புற்று நிற்பதே கன்மஜ தாதான்மிய மெனப்படும். நானறிவேன் கர்த்தா நான் றேகமகமென்பது தான்- எ-து இவற்றிற்கு முறையே உதாரணமாவது நானென்னை யறிவே னெனலும், நானெவற்றிற்குங் கர்த்தாவெனலும், தேகமேயா னெனலு மாம்; இவைகள்பகர்செய்பிராரத்தத்தாற் றத்துவ ஞானத்தாற் பணிசுழுத்தி யாலகலப்படுமளவுந் தொடரும்- எ-து. இம்மூன்றும் சொல்லப்பட்ட பிராரத்துவத்தாலும் தத்துவஞான விளக்கத்தாலும் யாவரும் பணிதற்குரிய நனவிற்சுழுத்தி நிலையாலும் ஒழியப்படும். அதுகாறும் விடாது தொடர்ந்து கொண்டே நிற்கும்-எ-று.

விரிவுரை

உதாரணமூன்றும் நேர்நிரனிறையெனவும், இவை யொழி தற் கேதுவாகிய மூன்றும் எதிர் நிரனிறை யெனவுங் கொள்ளக் கிடந்தன. எங்ஙனமெனின், பிராரத் தகன்மத் தாலன்றித் தேகநானென்பதும், தத்துவசோதனை யால் விளங்கும் ஞானப்பிரகாசத்தாலன்றி நான் கர்த்தா வென்பதும், நனவிற் சுழுத்தியாலன்றி நானென்னை யறிவேனென்பதும், ஒருகாலும் நசித்தற்கிடமின்றென்க. அவரவர் தூலதனு அவரவர் பிராரத்வ

கன்மத்தளவாக நிற்றலானும், அவரவர்க்கு மேலாயதவத்தால் வாய்த்த பரிபூரணநிலை தானினைய னெனக் காணுமளவும் நிற்றலானும், அவரவர்க்குரிய அகங்கார மேலீட்டு நிலை நனவிற்சுழுத்திநிலை வருமளவும் நிற்றலானும் எதிர்நிரனிறை யென்றாம். தானினையனெனக் காணலாவது சுயஞ்சோதியை. குறிகளிலொன்றால் வாய்க்குஞ் சமநிலை யக்குறி கடந்தவிடத் தின்றித் ததாகாரம்போற் காண்ப திப்பரிபூரணநிலையாதலால் தெருளா தான் மெய்ப்பொருள் கண்டதுபோலுமாம். இதனைத்தத்துவ மென்ற ஞானத்தாலேனும், தத்-துவம்-என்ற சோதனை யாலேனு மாய்த்தற் கிடம்பெறுமாதலினானும், மக்கினசுழுத்தி சர்வசங்காரப்பிரளயசுழுத்தி யிவற்றாற் சற்றுங் கெடாது நனவிற்சுழுத்தியான் மாத்திர மகங்காரமாய்தற்கிடம் பெறுமாதலினானு மிங்ஙன முறைகொண்டாம். இங்ஙன மிருக்கத், தேகமேதானெனல் கன்மஜதாதான்மியமாதலால், இது பிராரத்துவத்தாலன்றிச் சுழுத்தியினாலெங்கேனு மகலுமோ? அகலுமெனின் உறங்கிச் செத்தவருளரோ? நனவிற் சுழுத்தியெனின் இறக்கின்ற வெழுவகைத்தோற்றமும் நனவிற்சுழுத்தி நிலைவந்துதானோ? சர்வசங்காரப்பிரளய சுழுத்தியெனின் இப்போதுமரிக்கின்ற வுயிர்களெல்லாம் அது வருமளவுங் காத்திருக்கின்றனவோ? ஆதலின், வழு. அகங்காரத்தோடு கூடியது சகசதாதாத்மிய மெனப்படலால், அது பிராரத்துவத்தால் நசிக்குமென்றெங்ஙனமுறை கொண்டனரோவது தெரியாது. பிராரத்துவ கன்மநாசத்தா லகங்கார நாசமாவதுளதோ? உளதெனின், சிரவண மனனாதிகளெற்றிற்கு? இயமந்யமாத்களும் ஆறாதார அர்யமுயற்சிகளும் யாதுபயன் பெறும்? ஆதலின் பிராரத்வ கன்மநாசத்தால் சகசதாதான்மியம் நாசமுறுமென்பது வழு. பரிபூரணபிரமத்திற்கலந் தேகமாநிற்றல் தத்துவஞானத்தா லெங்ஙனமகலும்? அகலுமெனின், சலனத்துவம் வாய்க்குமே. வாய்க்கின் முன்போல் விடயங்கள்லாழ்ந்து மொத்துண்ணவரும். இதுகருதாது தத்துவஞானமெனற் கெவ்வாறு பதச்சேதஞ்செய்துரை கொளப்புகினு மியையாதாதலினிதுவும் வழு.

இவ்விஷயந்தெரியாது உரைசெயப்புகின் கல்விச்செருக்கு மடமையே தருமென்க பரிமேலழகரொழிந்த வேணைய உரையாசிரிய ரின்னும் பேதவாதமெனக்கருதி "அகரமுதல வெழுத்தெல்லா" மென்னுங் கவிக்குபமானவுபமேய சாதாரண தரும விலக்கணம் நன்குணர்ந்தும் ஏகமேவாத்துவித சுவானு பூதிப்பிரத்தியட்சந் தினைத் துணையுமின்மையின், தத்தமக்கியைந்தவா றுரை கூறி வாளாபோயினர். தானினையனெனத் தெரியாது "தன்னிழப்பை யென்னகற்றும்" என்னும் கவிக்குப் பொருத்தமின்றிக் கூறியவுரையாசிரி யருமுளர்.

## 25. பஞ்சகோசதாதாத்மியம்.

அன்னமயம் பிராணமய மனோமயம்விஞ் ஞான மானந்த மயமைந்தி னன்னமய மாகும், பின்னுடல்கன் மேந்திியத்திற் பிராணனது கூடிற் பிராமணமய மனங்கூடிற் பிறங்குமனோ மயமா, நன்னிலைஞா னேந்தியமும் புத்தியுங்கூ டிடில்விஞ் ஞானமய மாமவித்தை யானந்த மயமாஞ், சொன்னவைந்துந் தானெனறா தான்மியமிவ் வெல்லாந் தோய்வறநின் றெனதெனல்காண் சுத்தவனு பவமே.

(இ.ள்.) அன்னமயம் பிராணமய மனோமயம் விஞ்ஞானமானந்த மயமைந்தி னன்னமயமாகும் பின்னுடல்- எ-து பஞ்சகோசமெனப்படுவது அன்னமயம்- பிராணமயம்- மனோமயம்- விஞ்ஞானமயம்- ஆனந்தமயமென வைந்தாம். இவற்றுள், கடையாநின்றுள்ள தூலசரீரம் யாதானு மோராகாரமயமாநிற்றலின் அன்னமயகோசமெனப்படும்; கன்மேந்திரியத்திற் பிராணனது கூடிற்பிராணமய மனங்கூடிற் பிறங்கு மனோமயமாம்- எ-து கன்மேந்திரியத்தோடு பிராணவாயு கூடில் பிராணமயகோசமெனப்படும். அந்தக்கன் மேந்திரியத்தோடு மனங்கூடில் மனோமயகோசமெனப்படும். நன்னிலை ஞானேந்தியமும்புத் தியுங் கூடிடில்விஞ்ஞான மயமாமவித்தை யானந்தமயமாம்- எ-து நன்மார்க்கத்திற்கு மியைந்த ஞானேந்திரியமும் புத்தியுமொருங்கு கூடில்

விஞ்ஞானமயகோசமெனப்படும். அவித்தையாகிய காரண சரீரமாகத் தனித்து நிற்புழியானந்தமயகோசமெனப்படும்; சொன்னவைந்துந் தானெனறாதான்மியம்- எ-து இங்ஙனங் கூறிய வைந்துநிலையுந் தானெனநிற்கு மவ்வவ் வவசரநிலையே தாதான்மிய மெனப்படும்; இவ்வெல்லாந் தோய்வறநின் றெனதெனல்காண் சுத்தவனுபவம் -எ-து இவ்வைந்துகோசமும் பேதமாநிற்பினும் விசாரணைத்தெளி வின் மேலீட்டா லொவ்வொன்றும் யானல யானலவென் றவற்றிற்கு விலட்சணமாகச் சதோதயமாக விளங்கிநிற்றலே சுத்தாத்துவித வனுபவ மெனப்படுவதாம்- எ-று.

விரிவுரை

ஏ-அசை. இங்கே மயமெனல் உபாதானத்தை. கோசமெனல் திரைச்சீலை போல்வது. எனவே ஆன்மாவாகிய புருஷன் இவ்வைந்தணையில் கட்டப்பட்டிருப்பனெனப் பெற்றாம். பெறவே, ஏனைய நான்குகோசமும் கடவாதிருக்க அன்னமயகோசமாகிய தூலதேகம் பிராரத்துவத்தால் நீங்க முத்தியெனல் கூடாது. ஏனைய மூன்று கோசமுமிருக்க யோகத்தால் பிராணமயங்கடக்கில் முத்தியெனல் கூடாது. ஏனைய விரண்டுகோசமுமிருக்க மூலாதார முதலிய வாறாதாரத்தால் மனோமயங்கடக்க முத்தியெனல் கூடாது. ஏனைய வானந்தமய கோசமொன்றிருக்க வனைத்தையுஞ் சோதனைத் தெளிவால் மித்தையாக்கிய விடத்து விஞ்ஞானமயங்கெடும். அதனால் முத்தியெனல் கூடாது. அனைத்தையும் மித்தையாக்கி நின்றது அறிவாதலா லதுவிளங்காதகாறும் அவித்தையெனப்படும். அது காரணமாகவரு மானந்தமய மெங்ஙனம் நீங்கும். அதுநீங்காததால் முத்தியென்பது கூடாது. இவ்வகை தெரியாதார் யாது கருதி முத்தியென்றரோ யாமறிகிலம். இவையனைத்துந் தானாகிற சிதாகாயத்தில் சலட்சணவி லட்சணமாகக்காணும். இங்ஙனங்காண்டலே சுத்தாத்துவித வனுபவமெனக்கொள்க. ஆக்கவினை யெஞ்சிய விடத்துக்

கூட்டிப் பொருள்கொள்க; ''ஆக்கவினைக்குறிப் பாக்கமின்றியலா'' என்பதினால். தோய்வற நிற்றல் விலட்சணமாதலை, காணென்பது அசைநிலையெனினும் நீ கண்டுதெளியெனினுமமையும். இதற்கனுபவமெங்ஙனமெனின், நான்பருத்தேன் இளைத்தே னென்பது அன்ன மயகோசதாதாத்மியம். எனக்குப் பசிக்கிறது தாகிக்கிறது என்பது பிராணமயகோச தாதாத்மியம். நான் சங்கற்பித்தேன் விகற்பித்தேன் என்பது மனோமயகோச தாதாத்மியம். நான் கர்த்தா போக்தாவென்பது விஞ்ஞானமயகோச தாதாத்மியம். நான் அறியேனென்பது ஆநந்தமயகோச தாதாத்மியம். இவைகட்கு அன்னியமாக நின்று என்சரீரம், என்பிராணன், என்மனம், என் புத்தி, என்னஞ் ஞானம் என்னுமனுபவத்தினால் தன்க்கு இப்பஞ்சகோசங்கள் வேறு, விவகாரதசையில் தாதாத்மியமென்று அறிந்து அவற்றில் தோய்வற நின்று அறிவுவடிவமாகிய தன்னை உள்ளபடி காண்பதே சுத்தமாகிய அனுபவமாம். இவ்வெல்லாந் தோய்வற நின்று என்பதனால், தான் தெருளாய் நின்றவிடத்தெனக் கண்டாம்; தெருளுமருளுந் தன்னையன்றி யில்லாமையின், இவையிரண்டுந் தானல்ல வென்க. இவை ஒற்றுமை நயத்தா லொன்றெனத் தோன்றலும், வேற்றுமை நயத்தால்வேறெனத் தோன்றலும், தாமோர் முதலன்றா கையி னியல்பன்று என்றார் அறிஞர்.

### 26. சாக்ஷி சரீரத்திரய விலக்ஷண மெனல்.

மொய்த்தாருஞ் சாட்சிக்குச் சரீ மான மூன்றினுக்கு மன்னியமு முடிவுங் கூறிற், கர்த்தாவாஞ் சாட்சியதான் ஞானத்தாலே காரணமாந் தேகமந்தக் கணத்தி னாசந், தொத்தாய காரணதே கந்தானொன்றுதொலைவதன் முன் சூக்குமதே கங்கள் கோடி, யொத்தாய பிரளயத்தி லொடுங்குஞ் சூக்க மொன்றொடுங்கு முனம் அனந்த மொடுங்குந் தூலம்.

(இ.ள்.) மொய்த்தாருஞ் சாட்சிக்குச் சரீரமான மூன்றினுக்கும் மன்னியமு முடிவுங் கூறில்- எ-து-எங்குந் தாக்கற்று நிறைந்திருக்கின்ற கூடஸ்தசைதன்யத்திற்கும் தூலமுதலிய

*வுபாதித்திரயத் திற்கும் பேதநிலையும் அந்தமுங் கூறுமிடத்து; கர்த்தாவாஞ் சாட்சியதான் ஞானத்தாலே காரணமாந்தேகம்- எ-து கூடஸ்தசைதன்யமெப்போது மெவற்றிற்குஞ் சாட்சியா விளங்கி நிற்றலின் கர்த்தத்துவத்தையுஞ் சேதனத் துவத்தையு மியல்பாகவே யுடையதாவிளங்கும். காரணதேகமாகிய அவித்தையோ பிரத்தியட்சஞானத்தினால் நாசமுறும்; அந்தக்கணத்தினாசந் தொத்தாயகாரண தேகந் தானென்று தொலைவதன் முன் சூக்குமதே கங்கள் கோடி -எ-து விடாதுதொடர்ந்து நின்றுள்ள அவித்தையாகிய காரணதேக மொன்று நசித்தற்குரிய கணநேரத்திற்குள் சூக்குமசரீரங்கள் எண்ணிறந்த கோடி தோன்றித் தோன்றி நசிக்கும்; ஒத்தாய பிரளயத்திலொடுங்குஞ் சூக்க மொன்ரெடுங்குமுனமனந்த மொடுங்குந்தூலம்- எ-து - ஒருங்குநசித்தற்குரிய சர்வசங்காரப் பிரளயத்தி லொரு சூக்குமதேக மொடுங்குவதற்குமுன் அனந்த தூலதேகந் தோன்றித் தோன்றி யொடுங்கும்-எ-று.*

*விரிவுரை*

*அதனால் காரணதனு ஒன்றழிதற்கு முன்ன ரனந்த கோடி சூக்குமதனு அழியுமெனவும், ஒரு சூக்குமதனு தோன்றி யழிவதன்முன் அனந்தகோடி தூலதனு தோன்றி யழியுமெனவு மிக்கவி கூறலின், இங்கே சாட்சி ஒன்றெனலும், சரீரம் மூன்றெனலும் கூடஸ்தனையும் வியட்டியுபாதித் திரயத்தையுங் குறிப்பிக்கப்பெற்றாம். சாட்சியாகிய சைதன்யத்தையன்றி யுபாதித்திரயந் தோன்றியழிதற்கும் இவையோர் முதலாதற்கும் இடம்பெறுவதாகத் தோற்றுவதேயன்றி யுற்று நின்றுணருமிடத்துச் சற்றும் பேதமில்லை. பகிர்முகத்தில் சாட்சிக்கும் உபாதித் திரயத்திற்கும் அன்னியமும் முடிவும் உளவாகக்காணும்; காணினும், அந்தர் முகத்தில் அன்னிய மென்பதும் முடிவென்பதுஞ் சாட்சிக்குச் சற்று மின்றெனவுணர்க. உபாதித்திரயத்திற்குக் கால வரையறை யேற்கப் பெற்றது பகிர்முகத்திலென்க. இங்கே கோடியென்பது கணக்கின்மையைக் காட்டி நின்றது. கர்த்தாவாஞ் சாட்சி*

என்றதனால் சேதனத்துவம் வருவிக்கப்பட்டது. இங்கே அவித்தையெனல் தானலாததைத் தானெனக் கோடலை. பொருளல்லவற்றைப் பொருளாக வேற்குமளவும் இங்கே கூறிய வுபாதித்திரய முடிவுகள் தள்ளற்பாற் றன்று. உபாதிநாட்டத்தால் சைதன்யம் மேலாகவுந் கீழாகவும் ஒப்பாகவுந் காணப் படுவதன்றிச் சைதன்ய நாட்டத்தில் சற்றுமின்றெனக. உபாதி நாட்டஞ் சற்றுமகலாததால் இங்ஙனம் வரையறுத்த முறைகளைத் தடுக்கி லுபயபிரஷ்டத்துவந் தப்பாதெய்துவரென்க. எனவே, தூலதனுவுக்குச் சூக்குமதனுவும், அந்தச் சூக்கும தனுவுக்கு மூடமாகிய அவித்தையு முபாதான மெனப்பெற்றாம். பிரவிர்த்தியுங் கணத்திலாதலால் நிவிர்த்தியும் கணத்தினாச மென்றார். உபாதியாகிய தூலதனுவை மெய்யென வேற்றலா லதற்கியைந்த காலத்தையு மிடத்தையும் மெய்யாக வேற்கவேண்டிவரும். இங்ஙனம் விர்க்கிற் பெருகுமாதலின் சுருக்கி யுரைத்தனரென்க.

### 27. வஸ்துவை அணுவக்கணுவெனல்.

ஆய்ந்தசுத்தத் தவியத்த மதிலவ்வியா கிருத மதனிலிர ணியகருப்ப மதனில்விராட் டடக்கம், வாய்ந்தவிராட் டினில்வானம் வானில்வளி வளியின் வன்னிவன்னி யதில்வனமவ் வனத்தின் மண்டா னடக்கந், தோய்ந்தமண்ணிற் றூலவுட லடக்கமதிற் சூக்கஞ் சூக்குமத்தி லவித்தையதிற் றோய்சீவ னடக்கம், போந்தடங்கு மதனையணு வென்பரிதி லடங்கும் பொருளையணு வக்கணுவாப் புகன்றிடு நான் மறையே.

(இ.ள்.) ஆய்ந்தசுத்தத் தவியத்த மதிலவ்வியா கிருத மதனிலிர ணியகருப்ப மதனில்விராட் டடக்கம்-எ-து அளவைகளாலும் யுத்தியனுபவங்களாலும் ஆராய்ந்து தெளிந்த விடத்துச் சதோதயமாக விளங்கி நிற்பது யாதோ அந்தச் சுத்தசைதனிய த்தில் அவ்வியத்தமா நிற்பது. மூலப்பிரகிருதி. அந்த மூலப்பிரகிருதியிலடங்கி நிற்பது ஈசனுக்குக் காரணதனுவாகிய அவ்வியாகிர்தமும், அந்த அவ்வியாகிர்தத்தி லடங்கி நிற்பது சூக்கும தனுவாகிய இரணியகர்ப்பமும், அந்த இரணிய

*கர்ப்பத்திலடங்கி நிற்பது விராட்டாகிய தூலதனுவும்; வாய்ந்த விராட்டினில் வானம் வானில்வளி வளியின் வன்னி வன்னி யதில்வனமவ் வனத்தின் மண்டான டக்கம்-எ-து இங்ஙனம் வாய்ந்த விராட்டாகிய தூலதனுவி லடங்கி நிற்பது ஆகாயமும். அந்தவாகாயத் திலடங்கி நிற்பது காற்றும், அந்தக்காற்றிலடங்கி நிற்பது அக்கினியும், அந்தஅக் கினியிலடங்கிநிற்பது சலமும், அந்தச் சலத்தி லடங்கி நிற்பது மண்ணும்; தோய்ந்த மண்ணிற்றூலவுட லடக்க மதிற் சூக்குஞ் சூக்குமத்தி லவித்தையதிற்றோய் சீவனடக்கம்-எ-து இங்ஙனம் விசிரிம்பித்து நின்றுள்ள மண்ணிலடங்கி நிற்பது வியட்டி தூலதனுவும் அந்தத் தூலதனுவி லடங்கிநிற்பது காரண தனுவாகிய அவித்தையும் அந்த அவித்தையி லடங்கிநிற்பது சீவனும்; போந்தடங்கு மதனையணு வென்பரீதி னடங்கும் பொருளையணு வுக்கணுவாப் புகன்றிடு நான்மறை- எ-து இங்ஙனம் நிரலே வந்தடங்கிய சீவனையணுவெனச் சத்துக்கள் கூறாநிற்பர். இந்தச் சீவனாகிய வணுவி லடங்கிநிற்பது யாதோ வந்தப்பரம்பொருளை யணுவுக்கணுவென்று நான்கு வேதங்களுந் துதியாநிற்கும்- எ-று.*

*விரிவுரை*

*ஏ.அசை. சுத்தம் என்றதனால், அசுத்தமெனக் கொள்ளக்கிடந்தது இயைவதினால் அதனைமூலப்பிரகிருதி யென்றாம். சுசாதியாதி பேதமின்மையே சுத்தமென்றற் கியையின் அவை யுடைமைக் கசுத்தமெனக் கூறவேண்டுமோ? சுத்தத்தி லசுத்தமடங்கி நிற்றல் விதையின் கண் விருக்ஷம் சாகை முதலியவைக ளடங்கிநிற்றல் போல்வதாம். வியத்தம்- வெளிப்படல். அவ்வியத்தம்- வெளிப்படாமை. இதிலடங்கும் பொருளை அணுவுக்கணுவாப் புகன்றிடு நான்மறை என்றதனால், சுத்த சைதன்யத்திற்கணு மூலப்பிரகிருதி யெனவும் அதற்கணு அவ்வியாகிருத மெனவும், அதற்கணு இரணியகருப்ப மெனவும், அதற்கணு விராட்டெனவும், அதற்கணு வானமெனவும், அதற்கணு காற்றெனவு மிவ்வாறே கீழ்ச்சேறற் கிடம்பெற்றாம். இங்ஙனங்*

கூறிய நெறியால் வஸ்து அணுவுக்கணுவா மென்றது ஐயமின்றி யேற்றற் பாலதென்க. உபாதிபேதநாட்டத்தாலன்றி யணுவுக்கணுவெனல், வஸ்து நாட்டத்தாற் சற்றுமின்றென்க. இங்ஙனமாய பேதங்களை அறியப்புகின் ஏனையகருவிகளிலும் மிகச் சிறந்தது அறிவாகிற கருவி யாதலால் அதனையே ஐயந்திரிபெய்தாதற்கு அறிவுடையோரேற்பதென்க. ஏனையோர், வேறுகருவியை யேற்பதனால் அது முடிவுபெறாததற்கும் துக்கநிவிர்த்தி தடையற்றவானந்தம் வாய்க்காததற்குங் காரணமாமென்க.

## 28. வஸ்துவை மகத்துக்கு மகத்தெனல்.

அரிதான சீவனுக்குப் பஞ்சகோச மைங்குகையா மதின்குகையா மைம்பூ தந்தா, மிரியாத விராட்டிதுமற்றிதற்கு மேலா மிரணியக ருப்பமதா மிதற்கு மேலாம், பெரிதாமவ் வியாகிருத மிதற்குமேலாம் பேசருமவ் வியத்தமிதிற் பெரிதாஞ் சுத்த, முரியார்களிதனைமகத் தென்பர். மேலா மொளியைமகத் தின்மகத்தென் றுரைப்பர் மேலோர்.

(இ.ள்.) அரிதான சீவனுக்குப் பஞ்சகோச மைங்குகையா மதின்குகையா மைம்பூ தந்தாம்-எ-து எட்டற் கரியசீவனென்னு நிலைக்குப் பஞ்சகோசமென லைந்துகுகை போல்வனவாம். அந்தப்பஞ்சகோசங்களுக்கும் பஞ்சமாபூதங் களுங்குகை போல்வனவாம்; இரியாத விராட்டிதுமற் றிதற்கு மேலா மிரணிய கருப்பமதாம்-எ-து இந்தப் பஞ்சமா பூதங்கட் கென்றும் நசியாத விராட்டென்னுநிலை குகைபோல்வதாம். இந்த விராட்டென்னு நிலைக்கு மெலாநின்றுள்ள இரணியகருப்பநிலை குகைபோல் வதாம்; இதற்கு மேலாம் பெரிதாம் அவ்வியாகிருத மிதற்கு மேலாம் பேசருமவ் வியத்த மிதிற் பெரிதாஞ் சுத்தம்- எ-து இந்து இரணியகருப்பத்திற்குச் சிறந்த அவ்வியாகிருதமென்பது குகைபோல்வதாம். இந்த அவ்வியாகிருதத்திற்கு வேறொன்றை மேலாகச் சொல்லற்கரிய அவ்வியத்த நிலையென்பது குகைபோல் வதாம். இந்த அவ்வியத்த நிலைக்குச் சுத்தசை தன்யமென்பது குகைபோல்வதாம்; உரியார்க ளிதனைமகத்

தென்பர் மேலாமொளியை மகத்தின்மகத்தென் றுரைப்பர்மேலோர் - எ-து- இங்ஙனமாய நிலையை அனுபவித்தற்குரிய பெரியோர்களிவ்வாறு முடிந்த முடிவாய நிலையை மகத்தெனக் கூறாநிற்பர். எவற்றிற்கு மடங்காது விளங்கும் பரஞ்சோதியை மகத்துக்கு மகத்தெனக் கூறாநிற்பர் சத்துக்கள்- எ-று.

சலசந்திரன் போற் றனக்கெனச் சொரூபமொன் றின்மையை யுளதாகக் கருதி 'யாரோபமென் றெண்ணாமற் றேடப்புகுவான் போல்வதின் ; அரிதான சீவனென் றடை கொடுத்தார். பஞ்சகோசமெனல் அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் மென்பவற்றை. எனவே, ஒன்றை யொன்று வியாபித்து மறைத்து நிற்ப தெனப் பெற்றாம். இவ்வாறே யேனையவையுமெனப் பொருள்கொள்க. விராட்டாதி கூறியவதனால் விசுவாதி பஞ்ச கோசங்களி லடங்கினவாகக் கண்டாம், இரியாத விராட்டெனல் யாதொன்றாலும் விலகாத சமஷ்டி வியஷ்டி தூலவடிவங்களைத் தானென்றபிமானித் தலை பெரிதாஞ் சுத்தமெனல் சுருதிக்கும் யுத்திக்குஞ் சற்றும் முரணின்றி அறிவே உண்மை ஏனையவனைத்தும் ஆரோபமெனத் தெளிதலை. மேலாம்ஒளியெனல் ஏனையவற்றால் விளங்காமல் சற்குருவின் அருள் நோக்கத்தா லவ்வறிவு விளங்கலை. உரியார்களெனல் வாச்சியார்த்தத்தில். மேலிட்டோரையு மெனக்கொள்க. ஒருவன் அணுவெனவும் மகத்தெனவு மிருப்பதை விசாரிக்கப்புகின் அணுவெனவும் மகத்தாகவும் ஆகவேண்டும். இங்கே தானெனல் அறிவு ஆகாவிடத்து அது வது தனக்கு விளங்காது; விளங்காவிடத்துக் கணிப்பதரிது. எங்ஙனமெனின், தான் அணுவாயவிடத்து மகத்தும், மகத்தாயவிடத் தணுவும் எங்ஙனம் விளங்கும். இ:.தன்றியும் தான் அதுவது வானா லதுவது விளங்கும் ; தானாகாவிடத்து விளங்கா என்ற விடத்து அணுவில் மகத்தெனலும் மகத்தில் அணுவெ னலும் தனக்கில்லை. தன்னைவிட வேறோவெனில் தனது பிரதிபலனமாதலின் வேறல்ல. வேறோவெனில் தனது பிரதிபலனமாதலின் வேறல்ல.

அறிவே சமஸ்தமுமாக விளங்கலின் அவ்வறிவு அணுவெனற்கும் மகத்தெனற்கு முடன்படாதோ? படுமாதலின் அணுவுக்கணு வெனவும் மகத்துக்கு மகத்தெனவுங் கூறியது பொருந்துமென்க. இவ்வறிவு விளங்கிய விடத்து இப்பேதம் இன்றெனக் கொள்க உபாதானவடுக்கிற் செல்லுழியணுவுக்கணுவெனவும், உபாதேய வடுக்கிற் செல்லுழி மகத்துக்கு மகத்தெனவுஞ்சேற லறிவன்றியின்றேனும், அந் நாட்டமும் அதுவிளங்கும் விளக்கமும் எய்தப்பெறாவளவும் மகத்தெனவும் , அணுவெனவுங் கூறற்றகையதா மெனக்கொள்க. மறுத்துக்கூறின், சொல்லானந் தமும், விடயப்பயனுமே மேலிட்டழிதற்குத் தெரியாம லிடந்தருமென வருத்தாபத்தியா லோர்ந்தாம். இங்ஙனமிருந் துணராதகுற்றம் நமதென்க. அனுபவ வுத்தரவாதி யாதலினு மிக்கதொன்றில்லை யென்பது திண்ணம்.

## 29. அஞ்ஞான நீங்குமுறை

தோற்றுமசத் தறிந்தகலத் தொடர்பகல்வ தேதெனிலித் தூல தேக, மாற்றுதொறுந் தொழிலகலு மிந்திரியச் செயலகன்றால் வைய நீங்கு, மேற்றுமனோ லயத்திலறும் விடயமவித் தையைநீங்கில் யாவு நீங்கும், போற்றுமந்தச் சீவவறி விழந்தவிடம் புகல்பரிபூரணம தாமே.

(இ-ள்) தோற்று மசத் தறிந்தகலத்தொடர் பகல்வதேதெனில் - எ-து-த் மெய்போலத் தோற்றித் தனக்கெனச் சொரூபமொன்றில்லாதன வென்று காட்சிப் பொருளையுங் கருத்துப்பொருளையுஞ் சோதனை முதலியவற்றால் ஐயந்திரிபற நன்குணர்ந்து உணர்ந்தவாறு கலங்காது நிற்க அவை தம்மை விட்டகலும். அகலவே அதுகாரணமாகப் பிறவிதோறுந் தொடர்ந்துவரும் பந்தத் தொடர்பகலும் எனச் சுருதி கூறுவது எங்ஙனமேற்பதெனில்; இத் தூலதேக மாற்றுதொறுந் தொழிலகலு மிந்திரியச் செயலகன்றால் வையநீங்கும் - எ-து பஞ்சபூதமாகிய தூலபூதத்தை யன்றித் தூலதனு வெங்கணு மில்லையென மறவாது நின்று வாசனையா லடிக்கடி தோற்றினு மங்ஙனமாய விசாரணைத் தெளிவா லத்தடிப்பைக் கரைக்

குந்தோறும் வந்தேன், போனேன், இருந்தேன், நடந்தேன் முதலிய தூலதனுவுக் கியைந்த புடைபெயர்ச்சிகள் மெல்ல மெல்ல நீங்கும். அவை நீங்கவே தூலதனுவில் அமைத்திருப்பதாக வெவர்க்கு மியல்பாகக்காணப்படும் பஞ்சேந்திரியங்களு மவற்றிற்குரிய ஸ்தானங்களு மவற்றின்புடை பெயர்ச்சிகளாகிய பார்த்தேன், கேட்டேன், முகந்தேன், ஸ்பரிசித்தேன், ருசித்தேன் முதலிய சொல்களுந் தாமே அகலும். அங்ஙன மகலில் உலகமென லெங்ஙனங்காணப்படும். காணப் படாததால்; ஏற்றுமனோ லயத்திலறும் விடயமவித் தையை நீங்கில் யாவுநீக்கும் - எ-து. சங்கற்ப மெங்ஙனமெழும், அச்சங்கற்பத்திற்கு வினைமுதலாகிய மனமென லெங்ஙனந் தலைகாட்டும். தலைகாட்டாவிடத்து அதின் பகிர்முகப்புடை பெயர்ச்சியாகிய நினைத்தேன், மறந்தேன், விரும்பினேன், வெறுத்தேன் முதலியவைகள் எங்ஙன மிருக்கப்பெறும். இங்ஙனமாய மனோலயத்தில் சத்த பரிச முதலிய விடயங்கள் தலைகாட்டுமோ? காட்டாவிடத்துத் தன்னைத்தானுணர்தற் கிடையூறா நின்றுள்ள அஞ்ஞானமாகிய அவித்தையெனல் ஒழியாதிருக்குமோ? அந்த அவித்தை நீங்கப்பெறில் சமஷ்டி சங்கற்பங்க ளனைத்துந் தலைகாட்டா தொருங் ககலும்; போற்றுமந்தக் சீவவறி விழந்தவிடம் புகல் பரிபூரணமதாம் - எ-து- அங்ஙன மொருங்ககன்ற வவசரத்தில் தானே நானல்லாததை நானெனக் கொண்டுழலுமந்தச்சீவ அறிவுநசிக்கும். நசித்த அக்கணத்திற்றானே கூடஸ்தனும் பிரமமும் பேதமின்றி யேகமாக விளங்கும். அங்ஙன மேகமாக விளங்கு நிலையே வேதமுடிவிற் சொல்லப்பட்ட பரிபூரண சொரூப மெனப்படுவதாம் - எ-று.

ஏ - அசை. மனோலயம் எவர்க்குமுடன்பா டாதலின், ஏற்றுமனோலயமென அடைகொடுத்தார். தற்போத மிழந்த விடம் மேலாய நிலையாதலால் போற்றுமென்றார். தோற்று மெனல் பெயரெச்ச மாதலின் உலகெனலெஞ்சியது. அசத்தறிந்த தகலத் தொடர்பகல்வது என்றதனால், இது காறுஞ் சத்தென்று அறிந்திருந்ததாப் பெற்றாம். வையநீங்கு மெனக் கூறி மனோலயத்தி லறும்விடயமென வேறுபிரித்துக் கூறுவதென்னை

யெனின், இந்திரிய நிக்கிரகத்தால் உலகந் தோற்றா தொழியினும் முன்னர் அதுவதுவாகத் தடித்து நின்ற விடயத்தடிப்புகள் மனத்திலாதலா லிங்ஙனங் கூறினாரென்க. தானலாதொன்று தன்னைத் தானெனக்கோடல் தெளிவின் மைபற்றி யாதலாலும் அதுகாரணமாக அனைத்தையும் மெய்யெனக் கொள்ள வருமாதலினாலும் அவித்தையை நீங்கில் யாவு நீங்குமென்றார். அகலும், நீங்கும், அறும், யாவு நீங்குமெனத் தன் வினையிற் கூறியது ஆங்காங்கு யாம் தெளிந்துவிடத் தாதலினென்க. எனவே, சகல கற்பனைகளு மற்று அறிவாய் விளங்கிய வவசரமெனக் காட்டச் சீவவறி விழந்தவிடம் புகல் பரிபூரணமதா மென்று கூறப்பட்டது. இழவாதவிடம் திரிபுடி மயமதாமெனத் தாமேயுரை கொடுக்கின்றது.

30. அஞ்ஞான காலவரையறை முறை.

மாறாத வஞ்ஞான முழுதுமகல் வதுகூறின் வையந் தன்னின், வேறானாற் காலகலு முடன்மூன்றுஞ் சீவனுக்கு வேற தானா, வீறாகும் பாதிதற்சாட்சியைக் காணின் முக்காலு நீங்குந் தானாய்ப், பேறான சொரூப பரி பூரணமா னான்முழுதும் பேசொணாதே.

(இ-ள்) மாறாத வஞ்ஞான முழுதுமகல் வதுகூறின் - எ-து. என்றும் நசியாதுள்ள அறியாமையெனப் படுவன வனைத்தும் அகலவேண்டுவதைப் பற்றிக் கூறுமிடத்து; வை யந்தன்னின வேறானாற் காலகலு முடன்மூன்றுஞ் சீவனுக்கு வேற தானா வீறாகும் பாதி - எ-து. தானாகிற அறிவு உலக மாகாதாதலின் தக்க வாதாரவனுஷ்டானத்தால் உலகாகாரந் தவிர்ந்து சத்தாமாத்திரமாக விளங்கின் காற்பங்கு தன்னைவிட்டகலும். தூலசூக்கும காரணமென்னும் மூன்றுபாதியுடல்களும் அவ்விளக்கஞ் சுருங்காது செய்யுஞ் சாதனமேலீட்டால் சீவசைதன்யத்திற்கு வேறாகுமெனத் திடந்தரும், தரில் பாதிப் பங்கு இனித் தலையெடாது நசிக்கும், தற்சாட்சியைக்காணின் முக்காலு நீங்கும் தானாய்ப் பேறான சொரூப பரிபூரணமானான்முழுதும் பேசொணாது - எ-து அம்மேலீட்டுத்

தேர்ச்சியால் சீவனுக்க திஷ்டானமா நின்றுள்ள சொப்பிரகாசத்தை அவத்தை மூன்றினும் ஞானாசிரியரது அநுக்கிரகத்தால் நேரே யுண்மையாகக் காணுமிடத்து முக்காற் பங்கு நீங்கும். அங்ஙனம் மேலாய பயனாகவிளங்கும் பரிபூரண சொரூபமாக இயல்பாகத் தான் நிற்கில் முழுதும் நீங்கும். அப்பாலினைய நிலையினதெனச் சொல்லக்கூடாமல் நிலைத்துவிடும் - எ-று.

ஏ-அசை. மாறாதவெனல் விசாரணைத் தெளிவா லன்றி யெனக் குறிப்பிக்க நின்றது. வையந்தன்னில் வேறாதல் - அறியாமைவயத்தாகாமை. முழுது மகலுமென்றதனால், பகிர் முகநெறிக்கண்ணும் - அந்தர்முக நெறிக்கண்ணும் - அறிவறியா மை யடுக்குகள் அபரிமிதமாக உளவெனப்பெற்றாம். காலபரிச்சேதம் - தேசபரிச்சேதம் - வஸ்துபரிச்சேதம் - என்னு மிம் மூன்றும் எங்கு மில்லையெனக்காட்டச் சொரூப பரிபூரண மானாலென்றார். அப்போது முழுதும் அகல்வதற் கையம் வேண்டுமோ வென்பார் பேசொணாதே என்றார். வாச்சியார்த்த மென்னும் நிச்சயார்த்த அறிவே யெல்லாமா யல்லவுமாய் நிற்பதெனத் திடங்கோடல் தினைத்துணையும் பயனின்மையினெங்ஙனம் பிராந்தியகலும்; இன்மையி னிலக்கியார்த்தமா கிய பிரத்தியட்ச ஞானத்தாலெனக்கருதித் தக்கோர்பாற் றிரிகரண சுத்தியாகத் தொண்டுசெய்யப்பெறில் ஆசிரியரது கிருபாநோக்கம் வரும் ; வரின், தானாகிற அறிவு மின்மினி போலவும் - தீபம் போலவும் - வளர்பிறையினடுக்குகள்போ லவும் - தினகரன்போலவும் - ஒளிவிட்டிலகும் ; அங்ஙனமிலகுவதால் உலகங்காணா தொழியும்; ஒழியினும், முன்னர்ப்பழக்கத்தா லுலகிருப்பு முற்றுங்கெடாது. கெடாது பற்றிப் பிராந்திகாற்பங்ககலு மெனவும், தனக் கின்றேனு மூழ்பற்றியின்பதுன்பத் தாக்குக ளிடைவிடாது வருமன்றோ? வரினும் அவற்றோடு போக்குவரத்தின்றி நிற்குதுமன்றோ? அங்ஙன நிற்றல் அறிவன்றோ? எனத்துணிந்து அவ்விளக்க நாட்டத்தில் விடாது

பற்று துமன்றோ? பற்றுந்தோறு மாதேய நாட்டமிழக்கு மன்றோ? இங்ஙன மிழக்குந்தோறு மொளிவிட்டெறிதல் பலகோடி தினகரனுதயத்திற் குவமை கூறற்கடங்காது சாக்கிராவஸ்தை முழுதுமா நிற்குமன்றோ? நிற்கின் அப்பழக்கம் ஏனையவீரவத்தைக் கண்ணும் மெல்ல மெல்ல வருமன்றோ? வரின், மூன்றவத்தைகளு மவற்றிற்குரிய வுபாதிகளும் அது பற்றிக் கற்பனையாக வெழு மபிமான நாமங்களு மெங்ஙனந் தலைகாட்டப்பெறும். இங்ஙனந் தலைகாட்டாத நிலைமையைப் பற்றி யுன்னுமிடத்துப் பிராந்தி யரைப்பங்ககலு மெனவும், சுசாதியாதி பேதமின்றிச் சதோதயமாக விளங்குமந்த வியாபக விளக்கத்தைத் தவிரத் தானென லில்லாத தாகவும், அஃது அவத்தைகடோறும் நிகழும் சேட்டைகளாகாது அவற்றிற்குச் சாட்சியாகவும் தான் காணப்பெறும். அங்ஙனங் காணப்பெறுவதால் பிராந்தி முக்காற்பங்ககலுமெனவும், அகலின், அச்சுயம்பிரகாசமே தானாக முடியும். முடியின், பரிச்சின்னத் துவமின்றி விளங்கும். விளங்கின், பிராந்தி முழுப்பங்ககலு மெனவும், அகலின், பிராந்தியெனல் வந்ததுமின்றிப் போயதுமின்றி யியல்பாய நெறியில் நிற்கும். நிற்கின் அப்போதுள்ளநிலை யெங்ஙனங் கூறப்படுவது. ஆதலின் பேசொணாதேயெனவுங் கூறிய தாகப் பெற்றாம். இது நிற்க. இந்நிலையடுக்குகள் தானாகா ததனைவாசித்துப் பிறருக்குக் கூறுவதில் யாதுபய னுறுவர். இன்றாதலின், நிட்டைகூடுதலே தனக்குப் பெரும்பயனென்க. காற்பங்கு முதலியவளவைகள், துக்க நிவர்த்தி தடையற்ற வானந்தப் பேற்றின் வளர்ச்சியால் நுண்ணுணர்வினரால் கணித்தற்கியையுமாகலினேற்றற் பாற்றாம். இவ்விலக்கணங்களனைத்துந் தன்னிலாதலால் தன்னைப் படிக்கவேண்டும். தன்னைப் படித்தலாவது அயலனைத்துந் திரிபுடியாக வாங்காங்குக் காண்டல் அறிவின் விகாரம் அன்றேல் சோதனை யாதிகளால் உற்று நின்று உணரி லெவர்க்கு மறிவாக முடிவதென்னையோ? இஃதன்றியும், மண்ணையும் பொன்னையும் நீரையும் நேரே காண்பார்க்கவற்றின் விகார மெங்ஙனமோர் முதலாகக்

காணப்படும்? கற்பனையைப் பற்றிச் சுயம்பென வரலா லிரண்டும் அறிவேயெனத் தெளிவுறுவ தென்னையோ? ஆதலின், யாதானுமோர் பொருள் தோற்றின் அதன் வயத்தாகாது நிதானித் துபாதான மில்லாத தின்மையி னவ்வுபாதான வாகாரமாக வேண்டும். ஆயின், காரியமெங்கேயென நாட்டம் வரும்; வரின், பாழாக முடியும்; முடியின், மருளாதலினிருளாகக் காணும்; காணின், தெருள்வருங்காறுங் காக்கவேண்டும். காக்கின், மின்மினி முதலிய பலவித விகற்ப வொளியாக மேன்மேல் வளராநிற்கும்; நிற்கின், நிரதிசயானந்தப் பெருக்காமுடியும். இங்ஙன முடிந்தவாறிதற்கானி நேரிடாது கலங்காது நிற்கும். கலங்கல்- சச்சிதானந்தம்போற் காண்டலின் விகாரத்தை மீண்டு மெய்யெனக் காண்டலை; தன்னை யன்றி வேறன்மையினென்க. இஃதன்றியும் வெளியால் சூழப்படாத பொருள் தினைத்துணையு மில்லையெனப் பிரத்தியட்சத்தாலெவர்க்குங் காணப்படுவதால் யாதானு மொன்றைப்பற்றி விசாரிக்குமிடத்து விசாரிக்கப்படு பொருள் உருவமும், அதனைச் சூழ்வெளி அருவமும், விசாரிக்கப் புகுவது தெரிவுமாதலி னிஃதெவர்க்கு முடன்பாடன்றோ? ஆதல் பற்றிச் சிறிது விசாரிக்குதும். அஃதாவது உருவத்திற்கு எல்லையிருப்பதுபோ லிருவகைக்கு மெல்லையாது? உணர்த லிருப்பினு மருவமாதலி னில்லையெனின் உருவமு மருவமுஞ் சடமன்றோ? அகர்த்தத்துவமன்றோ? உருவநாட்டத்தி லருவமும் அருவ நாட்டத்திலுருவமு மில்லாமற் காண்டற்கேதென்னை? நாட்டபேதத்தா லெனின், நாட்ட பேதமறிவின்புடை பெயர்ச்சியன்றி ரூபா ரூபமாகுமா வெனவரும்; வரின், அதுவது வாகப் பரிணமித்துத் தோற்றலும், தானே திணைபாலிடமாகலும் அவ்வவற்றிற் குரிய செயல்களைப் போனிகழ்தலும், இத்தனையும் யாதென்றுற்றுணரு மிடத்துச் சர்வ சங்காரமயானம் போனிர்விகற்பமா_நிற்றலு மியல்பாகப் பருவத்துக்குத் தக்க வாறுடைமையின் பொருந்துமென்க. பற்பல விகற்பரூபமாகச் சிதைந்து நிற்றலும் தானே தானாகச் சேட்டித்து நிற்றலு மறிவன்றியின்மையின், பகுத்தறி வின்மையி

னின்றகலும் வரையும் காலவரையறைவகையுங் கணித்தலெங்ஙனமருமைத்தாமென்க. பெருகுமாதலின் சுருக்கியுரைத்தாம்.

31. முத்தர்பெத்தரிலக்கணம்.

முத்தரையும் பெத்தரையு முகக்குறியா னகக் குறியான் முழுதுந்தேரின், மெத்தென்வா கியமொழியு மானந்த பரவசத்தான் மிகுந்த சோர்வுஞ், சித்தநிலை தெரியாத செல்வமுமா யிருப்பர்நல்லோர் தீயோ ரெல்லா, மித்தகைமை யோர்களையே யிகழ்ந்து புகழ்ந்தோர்க்குறவா யிருப்பர் தாமே.

(இ.ள்.) முத்தரையும் பெத்தரையு முகக்குறியா னகக்குறியான் முழுதுந் தேரின்-எ-து வீடு பெற்றோரையும் பந்தமுற்றோரையும் முகக்குறியினாலு மகக்குறியினாலு முழுதும் விசாரித்துத் தெளியுமிடத்து; மெத்தெனவாகிய மொழியு மானந்த பரவசத்தான் மிகுந்த சோர்வுஞ் சித்தநிலை திரியாத செல்வமுமா யிருப்பர்நல்லோர்- எ-து கடிய வசனமின்மையும் பேரின்பமே லீட்டால் பரவசப்பட்டு அதனாலெய்தும் மிக்க சோர்ந்த நடையும் தெளிந்த தாலுண்டாகுந் திடச்சித்த முமதனாலென்றும் மாறாதொரு தகையாயுள்ள நிரதிசயவானந்தமுமாய் முத்தர் களிருப்பார்கள்; தீயோ ரெல்லா மித்தகைமை யோர்களையே யிகழ்ந்து புகழ்ந் தோர்க்குறவா யிருப்பர்-எ-து. இங்ஙனமாய நெறிபெறாத பெத்தராகியபாவிகள் தம் நிலைபிறழாதுள்ள இப்படிப்பட்ட பெரியோர்களையே ஞாயமின்றியெங்கணு மிகழ்ந்து அவர்களை விரோதித்துத் தம்மைப்புகழ்பவர் யாவரோ அவர்களுக் குறவாகவே யிருப்பர்- எ-று.

விரிவுரை

தாம்-ஏ-அசைகள். முகக்குறியானு மகக்குறியானும் முழுதும் ஓர்தலாவது நல்லோர்களது முகம் பிரம்மதேஜசும் அகம் ஆனந்தப்பெருக் ககலாமையும், தீயோர்களது முகம் பிணக்குறியும், அகம் தம்மெண்ணப்படி நிறைவேறாமை யாலெய்தும் வதையுமாமெனலை. மெத்தனவாகிய மொழி தனது

*விகார நாட்டமிழந்தமையானும், மிகுந்த சோர்வு அய னாட்டமிழந்துழி யெய்தற்பாலது ஆனந்த பரவசமாதலானும், சித்தநிலை திரியாத செல்வம் சகலவித பதவிப்பேறும் இதுகாறும் அயலாகக் கொண்டிருந்த மயக்கமிறந்து என்னையே யல்லாமல் யான் பயனாகப் பெற்றது இப்போது வேறில்லையென்றும் பந்த காலமுழுது மிவ்வாறே யிருந்தேனென்றும் தெளிந்த திட மெய்தினமையானும் வரற்பாலனவென்க.*

*32. அஞ்ஞானஞானங்களினிலக்கணம்.*

*ஏற்றபிர பஞ்சமதே நித்தமென்றும் பிரமமென்ப தில்லை யென்றும், தோற்றுமுட றானென்றுந் துளங்குவதே யஞ்ஞான துக்கமாகும், சாற்றுபிர பஞ்சமெலா மநித்தமென்றும் பிரமமது தானே யென்றும், வேற்றுடல்வேற் றுடலென்றும் விரிந்துணரப் பெறுமதுவே தாந்தஞானம்.*

*(இ-ள்.) ஏற்றபிர பஞ்சமதே நித்தமென்றும் பிரமமென்பதில்லை யென்றும், தோற்றுமுட றானென்றுந் துளங்குவதே யஞ்ஞான துக்க மாகும்- எ-து- அந்தர்முகநாட்ட மிழப்பி லெவரு மேற்றற் பாலதாகிய பிரபஞ்சமென்பது சத்தா கக்காண்டலின் அனாதிநித் தியமென்றும், அரிபிரமாதிகளாலு மெட்டியறிதற்கரிய பிரமமென்பது நாஸ்தி நபாதியென்றும், பிரத்தியட்சமாகப் பிறவிதோறும் பலவிகற்ப பேதமாகத் தோற்றற்குரிய வுடலேதானென்றும், சித்தங்கலங்கற் கியைந்து நிற்பதே அறியாமை மயமாகிய துக்க ஸ்வரூபமெனப்படுவதாம்; சாற்றுபிர பஞ்சமெலா மநித்தமென்றும் பிரமமது தானே யென்றும் வேற்றுடல்வேற் றுடலென்றும் விரிந்துணரப் பெறுமதுவே தாந்த ஞானம்-எ-து. இன்ன நிலையினதென அறியாமலெவருஞ் சொல்லுதற்கியைந்த பிரபஞ்சமனைத்து மநித்தியமெனவும், பிரமமென்பதொன்று மேயானேயெனவும், நானெனற்கு வேறாயிருப்பதால் விவர்த்தவுடலெனவும், சுருதியுத்திகளா லையந்திரிபற விரிந்துணரப் பெறுவது யாதோ அதுவே வேதாந்த ஞான மெனப்படுவதாம்-எ-று.*

*விரிவுரை*

*அஞ்ஞான துக்கமாகு மென்பதுகாறு மத்தியாரோபமென வும், வேதாந்த ஞானமென்பதுகாறு மபவாதமெனவும், குறிப் பித்த தருத்தாபத்தி. பிரபஞ்சமதே யென்றதேற்றேகாரம் பிரமமென்பகற்கேற்றினுமமையும். அஞ்ஞானத்தைத் துக்க மென்றதனால் ஞானத்தை ஆனந்த மெனற்குமுரண்யாது? எனவே, பிரவிர்த்தி தள்ளற்பாலதும், நிவிர்த்தி கொள்ளற்பா லது மெனப்பெற்றாம். விரிந்துணரவென்னாது பெறுமென்ற மிகையாலென்னையானாகப் பெறுதலென்பதாயிற்று. ஞானமென்னாது வேதாந்தமென் றடைகொடுத்தது ஏனைய ஞானம் போல்வதன்றெனற்கு. அ:தாவது குறி குணங்களற்றது. வேற்றுடல் வேற்றுடலென்றது தன்னை யுள்ள வாறுகண்டுழித் தானல்லாததாகவும், இருந்தும் பயனற்றதாவும் நிற்பதை யுணர்த்தற்கென்க. சத்தெனற்கிடமின்மையின் அநித்தமெனவும், யாது யாதென விசாரித்துத் தெளிந்துழி முடிவாக விளங்குவது ஞானப்பிரகாசமாதலின் அதுதானே யெனவுங் கூறற் கியைந்தவாறு காண்க. தான் சுயஞ்சோதியாகச் சதோதயமாக விளங்கலை மறந்த மறப்பே விரிந்துணர்தற்கு மாறாதலாற் குவிந்துணரப்பெறுமது வஞ்ஞானமாகுமென்னாதது சுருங்கச் சொல்லென்னு மழகுறுதற்கென்க. பிரபஞ்சம் அறிவு என முன்பின்னாயது உன்னற்கியைந்தபருவ மெய்தப் பெறாமையானும், அதுகாறுந் தேகமே யான்மா போகமே முத்தியெனப்படுமன்றோ? அல்லவற்றையாமெனக் கொண்டங்ஙனமனு பவித்தலும் அனுபவிக்கப்படு பொருளும் அறிவின் சேட்டையும் பிரதிபலனமுமாயிருப்பினும் தனதறியா மைதன்னை மறைக்குமன்றோ? அந்தப்பருவத்திற் கங்ஙனமாக நிகழ்வது சகசமாதலானும், இந்தப் பருவத்திற்கிங்ஙனமாக நிகழ்வது சகசமாதலானும், இருமையுமேற்கு மெனலைக் காட்டற்கென்க . என்றாலும், அறிவு அதிஷ்டானமும் அறியாமை யாகிய வுலகமாரோபமு மாக முடிதல்திண்ணமாதலாலிதுவே துக்கநிவிர்த்தியுந் தடையற்ற வானந்தமுந் தரற்பாலதென்க. இந்நெறியறி யாதறிவை முன்னுமுலகைப்பின்னும் வைத்துப்*

போதிப்பதிற் பயனின்றெனக். பலசென்மமாக வறிவே தானாதற்கியைந்த ஞானகதப்பிரத்தியட்சத்தில் விடாது நிற்புழி வினைகாரணமாக தூலதனுநழுவும்; மீண்டுமதனை முடிக்குமளவுமிடை யிடையே யனேக தூலதனுவந் துவந்தகலும். இ:தெவர்பாலு மேகதேசத்தி னிகழ்வதா லிவர்க்கறிவு முன்னெனினு மமையும். உணர்த்தா தியல்பாயந்நிலை வரப்பெறுநருமுளர். இவரைச் சிறுவயதிலு முலகத்தி வவர்வாய் மொழியா லவ்வுளவாளிகளாங்காங்குக் காண்பதுமுண்டு; ஆதலின் ''ஊகமுளதேற்சிறு வருவாயுங் கொள்க'' என்றார் வசிட்டர். இதற்கு யாமே யுத்தரவாதி.

33. தங்குருவைப்புகழ்தல்.

இருளகற்று நால்வேதத் துபநிடத மெண்ணான்கி னெங்கோன் சொன்ன, பொருளதனை நெஞ்சகத்தே சௌபாக்ய குருவென்னும் பொருளி னோடு, மருளகலும் படியழுத்தித் தமிழ்போலு மதனையொரு வழி யெண்ணான்கா, யருளகத்தி லிருந்துரைத்த ததிசயமே யதிசயமற் றறிகிலேனே.

(இ.ள்.) இருளகற்று நால்வேதத் துபநிடத மெண்ணான்கி னென்கோன் சொன்ன பொருளதனை -எ-து அஞ்ஞா னங்களைப் போக்கற்கியைந்த நான்கு வேதங்களிலும் முடி வாயுள்ள முப்பத்திரண்டுபநிடதங்களையு மாய்ந்து எமதுகர்த் தாவாகிய வியாசபகவான் முடிவாகச்சொல்லிய வையந்திரி பகன்றபொருளை; நெஞ்சகத்தே சௌபாக்கிய குருவென்னும் பொருளினோடு மருளகலும் படியழுத்தி-எ-து அவரது சௌபாக்யகுருவென்னும் தீர்ந்தபொருளோ டொத்துக் காண எனது பிராந்தியகலும் வண்ணம், எனது நெஞ்சினிடத் திலழுந்தச் செய்து; தமிழ்போலு மதனையொரு வழி யெண்ணான்கா யருளகத்தி லிருந்துரைத்த ததிசயமே யதிசயமற் றறிகிலேன்-எ-து- அந்தமேலாயபொருளை யொருவாறு பிறருக்கு விளக்கும்படி அருள்வடிவமாக வெனதகத்திலிருந்து தமிழைப்போல முப்பத்திரண்டு கவியாகப் பாடச்செய்தது

அதிசயமே யெவற்றினும் மேலாய வதிசயமாம்; இதுபோன்ற அதிசயம் யானெங்குங் கண்டிலன்-எ-று.

விரிவுரை

ஏ.அசை. அழுத்தி இருந்து உரைத்தது அதிசயமேயதிசய மெனக்கூட்டி முடிக்க. சுசாதி யாதிபேதமின்மையை ஐயந்திரிபகன்ற பொருளென்றும், சௌபாக்கியகுருவெனல் சுயம்பிரகாசநிலையை யாதலால் பொருளினோடெனவும், உபநிடதார்த்தமும் குரு உபதேசமும் ஒருங்கொத்தலைக் காட்ட அழுத்தியெனவும், இலக்கணமுரண் கிஞ்சித் திருந்தாலு மிருக்குமென்பதைக் குறிப்பிக்கத் தமிழ்போலு மெனவும், அந்த மேலாய பொருளை முழுதுமெட்டி யறித லெவர்க்கு மரிதென்பதைக் குறிப்பிக்க வொருவழியெனவும், இங்கே அருளெனல்- ஞானப்பிரகாசத்தை. இங்ஙனமாக விருந்துரைத்தது தனது சற்குரு நாதனாதலால் உரைத்தததி சயமே யதிசயமெனவுங் கூறியவாறாகப் பெற்றாம். குருவை யேதுப்பொருளாக்காது குருவென்னும் பொருளென்றதனா லிருபெயரொட்டுப் பண்பாக்குக. மருளகலும்படி யென்னாது மருளகற்றும்படியெனப் பிறவினையாகக் கூறல் வழுவென்க. சௌபாக்கியகுரு வென்பவரிந் நூலாசிரியருக் காசிரியராதலி னிவர்க்குக் கருணாகரனென்னுமாசிரியனென்றாம். எனவே இந்நூலா சிரியராகிய கருணாகரனென்பவர் தமதாசிரியராகிய சௌபாக்கியகுரு வென்பவருபநிடதப்பொருளை யெனதகத் திலழுத்தி அங்கே அருள் வடிவா நின்றிந் நூலைத் தந்த தாகப் புகழ்ந்தனரென்பது கருத்து. உபநிடதப்பொருளும் எனதாசிரியரதனுபவமு மொத்துளதேனும் பாஷை யதற்கயலாத லால்வழுவெய் தினு மெய்தும். அதனால் வழுவெனக்களையாது பொருணாடி யேற்கவேண்டுமெனக் கூறியதாகப் பெற்றாம். மருளெனல்-உபாதேயமெனற் கியையுங் கருத்துப்பொருள் காட்சிப் பொருளாகிய வியங்குதிணை நிலைத் திணைகளை யுபாதானமாகக் கொண்டுபலவாகக் கற்பித்துழறலை. இதனா லான்மாவாகிய தன்னையன்றிப் பண்பி யில்லையெனத்

*தெளியாததாற் பண்பனைத்தையும் பண்பியெனத்திட மாகக்கருதிப் பிறவிதோறு முழல்கின்றனம். இதிற்றன்னைக் கல்லா விடத்துக்கற்றும் பயனின்றென்பது கருத்து. ஆயினெப் பாடை வல்லவரும் பண்பியபரிமிதமென்பதெல்லாம் பண்புந் தொழிலையுமென்க. இதனைச் சோதனை ஞாயம் பொருத்தத்தாலெங்கணுங் காணலாம். அயலனைத்து மறிவின் பிரதிபலனமாதலால் சர்வம் மித்தையென்றும், ஆதிமத்தியாந்தமறிவா முடிவதாற் சர்வம் பிரமமென்றும், நானெனல் அறிவையன்றி யெல்லாவிதத் துமின்மையாற் சர்வம் நானென்றும் போந்தவாறு காண்க. இதனை யந்நிலையுடையோர்பாலன்றிக் கேட்டத்தெளியின் பழிப்பாக முடியுமென்க. இதற்கிவ்வுலகமேசாட்சி. ஒருநிலையையும் விடாததா விவ்வுபநிடத்தைப் போலத் துக்கநிவிர்த்தியையும் தடையற்ற வானந்தத்தையுந் தாற்பாலதொரு நூலு மெங்கணுமில்லை யெனக்கருதிப்பாடித் தந்ததுமுறையோ? வழுவோ? வழுவெனின், துவாதசாந்தப் பெருவெளிதாற்பாலது வேறொன்றிருக்கவேண்டும். இருக்கின்றதெனின் போலியாகா திருக்கவேண்டும்; அங்ஙன மில்லையெனின் முறையாமென்க.*

*முற்றிற்று.*

அத்தியாயம் ஏழு

# 7. அஷ்டாவக்ர கீதை

வரலாறு

முன்னொருகால் ஜனகன் தனது ஆஸ்தான வித்வானிடம் சிரவணஞ் செய்து கொண்டிருந்த வேதாந்த நூலொன்றில், "குதிரையேறு மொருவன் சேணத்தின் ஒரு சுவட்டிற் காலூன்றி மற்றொன்றிற் காலெடுத்து வைக்கும் நேரத்திற்குள் பிரஹ்ம ஞான முறலாம்" என்னுமோர் வசனமிருந்தது. இமைப் பொழுதில் ஞான முறலா மென்பதே அதன் தாத்பரியம். அத்துடன் ஜனகன் பாடத்தை நிறுத்திக்கொண்டு பண்டிதரை நோக்கி, "இவ் வாக்கியத்தின் உண்மையைத் தாங்கள் நிரூபித்தல் வேண்டும். குதிரை கொண்டுவரச் சொல்லவா?" என வினவினான். ஞானானுபவத்தை யருள்வது தன்னாலாகாதெனப் பண்டிதர் தாழ்ந்தார். அவ் வசனம், ஒன்று பொய்யாகவோ, அல்லது மிகையாகவோ விருத்தல் வேண்டு மென்றான் மன்னன். "இவ் வாக்கியத்தை நிரூபித்தல் என்னாலாகாதென்பதனால் அது பொய்யெனலாகாது. மெய்யுணர்ந்த ஆன்றோர் வாக்கன்றோ அது?" என்றார் பண்டிதர். அரசன் அதிருப்தியுஞ் சினமுங் கொண்டு பண்டிதரைச் சிறைச்சாலைக் கனுப்பினான். அவ்வாறே அவ்வாக்கியத்தை நிரூபிக்க வியலா அறிஞர் யாவரையும் ஒவ்வொருவராகத் தலைமை வித்வானுக்குத் துணையாக அனுப்பிவந்தான்.

இந் நிலையில் வயதிற் சிறியவரும், அறிவிற் பெரியவரும், வடிவில் எண்கோண லுற்றவருமாம் முனிவரொருவர் ஜனக ராஜ்ய எல்லைக்குட் காணப்பட்டார். அஷ்டாவக்ர ரென்பது அவரது காரணப்பெய ரென்பது மிகத் தெளிவாம். கற்றோரனைவரையும் ஒவ்வொருவராகச் சிறைப்படுத்தி வரும் அரசனது வரலாற்றைக் கேள்வியுற்ற அஷ்டாவக்ரர் தான் அரசனைச் சமாதானப்படுத்தி அறிஞர்களை விடுவிப்பதாக வாக்களிக்கவே, மக்களிற் சிலர் அவரை யோர் பல்லக்கில் அரண்மனைக்கிட்டுச் சென்றனர்.

சபையை யணுகும் முனிவரை அரசன் எழுந்து வணங்கிக் கௌரவித்தான். பண்டிதர்களைச் சிறைப்படுத்துங் காரணத்தை

அஷ்டாவக்ரர் அரசனிடம் நேரிற் கேட்டறிந்துகொண்டதும், அவர்க ளனைவரையும் விடுவிக்கச் சொன்னார். ஜனகனும் தனதையத்தைத் தீர்க்க வல்லவனும் ஒருவனே இவ்வாறு தன்னைக் கேட்டுக் கொள்ளக் கூடுமென் றுணர்ந்து, அறிஞர் யாவரையும் விடுவித்தபின் முனிவரை நோக்கி, "குதிரை கொண்டு வரச் சொல்லவா?" என வினவினான். அதற்கவர், "அரசே! அவசரப்படேல். தாங்கள் கோரும் உண்மையை யுணர்த்துதற் குரிய தனியிட மொன்றிற்குப் போவோம்" என்றார்.

அஷ்டாவக்ரர் பல்லக்கிலும் அரசன் புடைசூழக் குதிரையிலுமாகக் கானகஞ் சென்றனர். காடு சமீபித்ததும் முனிவர், "அரசே! நின் பரிவாரங்கள் யாவுந் திரும்பிப் போகட்டும். நாமிருவர்மட்டுந் தனித்திருப்போம்" என்றார். அவ்வாறே செய்தபின் மன்னவன் குதிரைமீது சேணத்தின் ஒரு சுவட்டை மிதித்துக் கொண்டு, "முனியரசே! தயைபுரிக!" என வேண்டினான். அஷ்டாவக்ரரோ அமைதியுடன், அரசே! தாங்கள் கூறும் நூலிலேயே இவ்வுண்மை குருவினாற் சீடனுக் கருளப் படுவதெனக் கூறியுளதே! நாமிப்போது அத்தகைய சம்பந்தத்தோ டிருப்பது உறுதி தானா?" எனக் கேட்டார். ஜனகன் முனிவரை வணங்கிச் "சீடனானேன். அருள் புரிக" என்றான். மீண்டும் முனிவர், "ஜனகா! உண்மைச் சீடன் தன்னையுந் தனதையுங் குருவுக்கர்ப்பிக்க வேண்டுமே!" எனலும், அரசன் "அவ்வாறே" என்றான். அஷ்டாவக்ரரும் "அவ்வாறே!" என்றியம்பிக் கணத்தில் மறைந்தேகினார். ஜனகன் ஸ்தம்பித்துப்போனான். இருந்த விடத்திலேயே சிலையென நின்றான். பொழுதாயிற்று. அஸ்தமித்து இருளெங்குஞ் சூழ்ந்தது.

நெடுநேரங் காத்திருந்தும் மன்னன் திரும்பாமை கண்ட குடிகள் கவலைமிகுந்து அவனைத் தேடலுற்றனர்; காட்டினுட் சென்று தம்பமென நிற்கும் மன்னவனைக் கண்டனர். அவனோ ஜனத்திரளையோ அதன் வினாக்களையோ உணரவேயில்லை. மக்கள் அரசனது நிலையைக் கண்டு வியப்பும் வருத்தமு முற்றனர். அஷ்டாவக்ரரோ எங்குங் காணப்படவில்லை. அவரோர் மாயாவி யென்று மந்திரிகளும் பிறருஞ் சினமுற்றனர். அரசனைப் பல்லக்கில் அரண்மனைக்கிட்டுச் சென்றனர். அவனது நிலையில் யாதொரு மாறுதலுங் காணப்படவில்லை. அரசனைப்

படுக்க வைத்து அமைச்சர் கவலையுடன் காத்திருந்தனர். மறுநாட் காலையும் அரசன் அவ்வாறே யிருத்தல் கண்ட அமைச்சர் அஷ்டாவக்ரரைக் கண்டுபிடித்துக்கொண்டு வரத் தூதர்களை யேவினர்.

அஸ்தமித்ததும் தூதர்களிற் சிலர் அஷ்டாவக்ரரைக் கொண்டுவந்து சேர்ந்தனர். முதன் மந்திரி அவர் மீது மிகவுங் கோபமுற்றிருந்துங் காரிய சாதகங்கருதி அதை வெளிக் காட்டாது, அரசனது பரிதாபகர நிலைமையையும் அது பற்றிய பொதுஜனத் துயரையுங் கவலையையும் அவருக்கு விளக்கிக் கூறி அரசனை மீண்டும் சுயநிலைக்குக் கொண்டுவரவேண்டு மென மன்றாடினான். அரசனது இந்நிலைமைக்கு அஷ்டாவக்ரரே காரணரென்று அமைச்சர் கூறலும், முனிவர், "அரசனையே நேரில் அதுபற்றி வினவுங்கள்" என்றார். மந்திரிகள் அது அசாத்தியமெனவே, அஷ்டாவக்ரர் அரசனை "ஜனகா!" எனக் கூப்பிட்டார். அரசனும், "ஸ்வாமி" என்று அவரை வணங்கினான். அமைச்சர் திகைத்தனர். முனிவர் மீண்டும் அரசனை நோக்கி, "ஜனகா! நானுன்னைப் பரிதாபகர நிலைமைக்குக் கொண்டுவந்துவிட்டதாக இவர்கள் பகர் கின்றனரே! இது உண்மைதானா சொல்" என்றார். ஜனகன் "யாரப்படிச் சொல்வது?" என வெகுண்டான். மந்திரிகள் பிரதானிகள் யாவரும் நடுங்கினரேனும், மன்னனை நன்னிலையுறுத்த முனிவரை மீண்டும் வேண்டினர். "அவ்வாறாயின் அரசனை என்னுடன் தனியே விட்டு அனைவரும் அகலுங்கள்" என்றார் முனிவர்.

தனிமையில் முனிவர் மன்னனை நோக்கி, "ஜனகா! நீயேனிவ்வாறிருக்கிறாய்? உலகியலுக்கு மாறாக நடப்பதெதற்கு? எல்லோரையும் போலவே யிருப்பதுதானே" என்றார். "ஐயனே! நான் உம்மவன். உமதாணைப்படியே நடப்பேன்" எனவிடையளித்தான் மன்னவன். "பிரஹ்ம ஞானம் நற்பக்குவிகட்கே புகட்டற்பாலது. இதுவரையுன்னைச் சோதித்தேன். உணவருந்திவா. பின்னர்ப் பேசலாம்" என்றார் அஷ்டாவக்ரர். அவ்வாறேயுண்ட பின் ஜனகன், "பிரஹ்மானுபவ முறுவ தெவ்வாறு? விடுதலைவழி யாது?" என்று முனிவரை வினவினான். "பிரஹ்மம் உன்னினும் வேறாம் அன்னியமன்று.

அதையுணரத் தேசகாலமேதுமில்லை. அதுவே நீ. அதுவே எல்லை யிலா நித்யபரிபூரண ஆத்மா'' என்றுபதேசித்தார் அஷ்டாவக்ரர். அன்றிரவு ஜனகனுக்கும் அஷ்டா வக்ரருக்கும் நிகழ்ந்த சம்பாஷணையே அஷ்டாவக்ர கீதை.

மறுநாட்காலை அரண்மனை சார்ந்த அமைச்சர் அரசன் எப்போதும் போலவே சஹஜமாயிருப்பது கண்டு சந்தோஷமுற்று முனிவரை வாழ்த்தினர். அரசன் தனது சபையைக்கூட்டி என்றும் போன்றே தன் வேலையிலீடு பட்டான். அச்சபையில் அஷ்டாவக்கிரர் அரசனை நோக்கி, ''வேந்தே! நூல்களிற் கூறியவாறு கணத்தில் ஞானானுபவ முறுவதுபற்றி, அ:தெங்ஙனம் கூடுமென ஐயமொன்றிருந்ததே. இப்போ தெப்படித் தோன்றுகிற தொன்று சபையோர்க் கியம்பல்வேண்டும்'' என்று ரைத்தார். மிக்க வணக்கத்துடன் அரசன், ''ஐயனே!, என தையம் முற்றிலுந் தவறானது. எனது அபக்குவத்தா லேயே சாஸ்திர வாக்கியத்தின் உண்மையைச் சந்தேகித்தேன். அதன் ஒவ்வோரெழுத்தும் உண்மையே'' என் றொப்புக் கொண்டான்.

## அஷ்டாவக்ர கீதை

ஜனகன்: கேள்வி

1. இறைவ! ஞானத்தையும் முக்தியையும் அவாவின் மையையும் பெறுவதெப்படியென்று எனக்கு அருளல் வேண்டும்.

அஷ்டாவக்ரர்: உபதேசம்

2. அன்ப! முக்தியை நீ விரும்புவையேல் விஷயங்களை நஞ்செனத் தள்ளு; பொறுமை, நேர்மை, வாய்மை, தயை, திருப்தியென்னும் இவற்றை அமு தெனப்பேண் .
3. மண், நீர், தீ, காற்று, வெளியென்னு மிவை நீ யல்ல, முக்திபெற, இவற்றின் சாக்ஷியாகிய அறி வுருவாம் ஆன்மாவை யுணர்.
4. உடலை யொதுக்கி அறிவிலே யமைதியாய் நிலைத் தால் இப்பொழுதே நீ சுகமும் சாந்தியும் முக்தியும் பெற்றவனாவை.

5. அந்தணர் முதலாம் மரபுனக்கில்லை, ஆச்ரமமு மில்லை; பொறிகளுக்குப் புலப்படாது பற்றற்று வடிவற்று அனைத்தின் சாக்ஷியாயிலகுமதே நீ; சுக மாயிரு.

6. மனோமயமாம் தர்மாதர்மங்களும் இன்பதுன் பங்களும் உனக்கில்லை. செய்பவனும் அனுபவிப்ப வனும் நீ யல்லை. உத்தமனே! நீ என்றும் விடுதலை யுற்றவனே.

7. அனைத்தின் ஏக சாக்ஷியே நீ; நித்திய விடுதலை நிறைவே நீ; காண்பவனை அன்னியமாய்க் காண்பதே உனது பந்தம்.

8. செய்பவன் நானென்னும் அகங்காரப் பெருங்கரு நாகத்தாற் கடிபட்டனை; செய்பவன் நானல்ல வென்னும் நம்பிக்கை யமுதருந்தி இன்புறு.

9. தூய ஞான மொன்றே நானெனும் நிச்சய நெருப்பினால், அஞ்ஞானப் பெருவனத்தை யெரித்துத் துயரற்றுச் சுகமாயிரு.

10. எதனிடம் இ:ஃதனைத்தும் கயிற்றரவுபோற் கற் பிதமா யிலகுமோ, அப்பேரின்பப் பெருக்காம் அறிவே நீ; சுகமே யிரு.

11. தன்னை முத்தனெனக் கருதுவோன் முத்தனே சித்தனெனக் கருதுவோன் சித்தனே; பத்தனெனக் கருதுபவன் பத்தனே. "மதியெதுவோ கதியதுவே" என்னுமிப் பழமொழி இங்கே யுண்மையாம்.

12. ஆத்மா சாக்ஷி, விபு, பூரணம், ஒன்று, விடுதலை வடிவு, தொழிலற்றது, பற்றற்றது, அவாவற்றது, அமைதிமயம்; மாயையால் சம்ஸாரிபோலிலகும்.

13. சிதாபாஸ(ஜீவ)னே நானென்னும் மயலொழிந்து, வெளியும் உள்ளுமாம் பாவனையகன்று இரண்டற்ற நிச்சலபோதமாம் தன்னையே கருது.

14. தேகாபிமானக் கயிற்றால் வெகு காலங் கட்டுற் றனை. மைந்தா! அறிவே நானெனும் ஞானவாளால் அதைத் துணித்துச் சுகமே வாழ்.

15. பற்றற்றுப் பணியாற்று மாசற்ற சுயம்பிரகாசனே நீ; (மற்றும்) சமாதி பழகுகிறாயே அதுவே நின்பந்தம்.

16. இப்படைப் பனைத்தும் உன்னால் வியாபிக்கப் பெற்றது, உன்னுளே திகழ்வது; தூய ஞான வடிவே நீ; அற்ப நினைப்புறாதே.

17. எதனையு மெதிர்பாராது, சித்த விகாரமற்றுச் சுமையற்று, அகங்குளிர்ந்து, ஆழ்ந்த புத்தியுடன், குழம்பாது, ஞான வாசனை மாத்திரனா யிரு.

18. உருவுற்ற தெல்லாம் பொய்யென்றும், உருவற் றதே மாறாததென்றும் உணர். இவ் வுண்மை யுப தேசத்துடன் இனியுனக்குப் பிறப்பில்லை.

19. கண்ணாடியுள் வடிவத்தின் உள்ளும் புறமும் எவ்வாறு அதுவேயோ, அவ்வாறே இவ் வுடலி லுள்ளும் புறம்பும் பரமேசனே.

20. குடத்தினுள்ளும் வெளியும் எங்கும் நிறைந்த ஏக வானமேபோல், சிருஷ்டித்திரளனைத்தினும் இலகுவது நீக்கமிலா நிறைவாம் சாசுவதப் பிரஹ்மமே.

உ

ஜனகன் தத்துவ நுட்பம் உணர்ந்து

வியப்புடன் சர்வனுபவம் உரைத்தல்.

1. படைப்பிற்கப்பால் மாசற்றிலகும் அமைதிமய அறிவே நானாகியிருக்க, ஆகா! இத்தனை காலம் மயக்கத்தால் நான் ஏமாறிய தென்னை!

2. நானொருவனே இவ்வுடலை யொளிர்விப்பது போல் உலகையும் ஒளிர்விக்கிறேன். ஆதலின் உல கனைத்தும் என்னது, அல்லது ஒன்றுமே யெனதல்ல.

3. உடலுடன் உலகையும் நீத்தலும், ஏதோவோர் நுட்பத்தாலே பரம்பொரு ளெனக்குத் துலங்குவ தென்னே!

4. அலைகளும் நுரை குமிழிகளும் நீரினும் வேறன்மை போன்றே ஆத்ம வெளிப்பாடாம் உலகம் ஆத்மா வினும் வேறன்று.

5. ஆயுங்கால் ஆடை நூல் மாத்திரமே யாதல் போல, இப் படைப்பும் விசாரிக்குங்கால் ஆன்ம மயமே யாம்.

6. கருப்பஞ் சாற்றி லுண்டாகும் சர்க்கரை அதனாலே (சாற்றாலே)யே வியாபிக்கப்படுவதுபோல் உலகம் என்னிட முண்டாகி இடையறா தென்னால் வியாபிக்கப் பெறும்.

7. தன்னை யுணராமையால் உலகு தோன்றும்; தன்னை யுணரின் உலகு தோன்றாது. கயிற்றைக் காணாமையால் அரவு தோன்றும்; காணின், அரவு தோன்றாது.

8. எனது சுயவடிவம் ஒளியே யன்றி வேறன்று; உலகம் ஒளிருங்கால் (உண்மையில்) நானே யொளிர் கின்றேன்.

9. கிளிஞ்சலில் வெள்ளியெனக் கயிற்றிற் பாம்பென வெயிலிற் கானலென அறியாமையால் அகிலம் என் பால் விகற்பிக்கப்பெற் றிலகுவ தென்னே!

10. என்னிடமிருந்து வெளிப்பட்ட வுலகு என்னிடமே யொடுங்கும்; மண்ணிற் குடமும் ஜலத்தில் அலையும் பொன்னிற் பணியும் போல.

11. பிரமன் முதற் புழுவரை அகிலத்தின் அழிவிலும் அழிவின்றி நிற்கும் விந்தை மிகும் யான் போற்றி!

12. உடலுற்றாலும் ஒருவனாயிலகும் நானே நான்! எனக்கே நமஸ்காரம். போதல் வருதல் எங்குமெனக் கில்லை. அகிலத்தும் பரந்து நிற்பவன் யானே.

13. மேனியால் எதனையுந் தொடாமலே தொன்று தொட் டுலகு தாங்கும் எனக்கு நிகர் சமர்த்தனெவன்? நானே நான்! என்னை வணங்குகிறேன்.

14. என்னே நான்! என்னை வணங்குகிறேன். ஒன்று மெனக்கில்லை; இன்றேல் மனவாக்குகளுக்கு இலக்காம் அனைத்து மென்னதே.

15. அறிவான் அறிவு அறிபொருள் என்னும் இம் மூன்றும் உண்மையல்ல. அறியாமையால் இவை எங்கு விளங்குமோ அக் களங்கமிலாப் பொருளேயான்.

16. அந்தோ! துன்பத்தின் மூலம் துவிதம். அதற்கு "முன்னே காண்பது முழுவதும் பொய். ஏகமாம் தூய ஞான ரஸமே நான்" என்பதினும் வேறு மருந்தில்லை.

17. "ஞான மாத்திரன் யான்; அறியாமை பற்றி (தேகாதி) உபாதிகள் என்னாற் கற்பனை யுற்றன" வென்று நிதம் ஆயுமெனக்கு விகற்பமிலா நிலை வாய்த்தது.

18. பந்த மெனக்கில்லை; மோக்ஷமுமில்லை. ஆதார மற்ற குழப்பமும் அடங்கியது. என்னே! அகிலம் என்னிடமே யுளது; (ஆயினும்) உண்மையில் என்னிடமில்லை.

19. உடலுட னிவ்வுலகம் ஒன்றுமேயில்லை யென்றும் ஆத்மா தூய அறிவுமயமென்றுந் துணிந்தேன். ஆதலினிப்பொழுது கற்பனை யெதனிடம்?

20. சரீரமும் சுவர்க்க நரகங்களும் பந்த முக்திகளும் பயமும்- இஃதனைத்துங் கற்பனையே. ஞானாத்மாவாம் எனக் கிதனாலென்ன?

21. அகோ! துவிதங் காணா வெனக்கு ஜனக்கூட்டமுங் காடுபோலாகியது. எதனிடம் யான் இன்புறுவேன்?

22. உடல் நானல்ல; பஞ்சபூதபௌதிகம். எனக்கு உடலில்லை. ஜீவனும் நானல்ல; ஞானமே நான். வாழ்க்கை விழைவே என் பந்தமாயிருந்தது.

23. எல்லையிலாப் பெருங் கடலா மென்னிடம் மனமாங் காற்றெழுதலும் பற்பல வுலகத் திரைகள் திடீரென விந்தையாய்க் கிளம்புகின்றன.

24. எல்லையிலாப் பெருங்கடலா மென்னிடம் மனக் காற் றொடுங்கலும் ஜீவனாம் வியாபாரியின் உலகக் கப்பல் அழிவடைகிறது.

25. கரையிலாப் பெருங்கடலாம் என்னிடம் ஜீவ தரங்கங்கள் இயற்கையாகவே உண்டாகி மோதி விளையாடி யொடுங்குகின்றன.

## அஷ்டாவக்கிரர் உபதேசம்

## அத்தியாயம் 3

1. அழிவிலா ஒன்றாம் ஆத்மாவை உண்மையி லுணர்ந்த ஆத்ம ஞானியுந் தீரனுமாம் உனக்குப் பொருள் தேடுவதில் உவகை யெவ்வா றுண்டாகும்?

2. கிளிஞ்சல் என்றறியாததனால் வெளித் தோற் றத்தில் ஆசையுண்டாவதுபோல், அந்தோ! ஆத்மாவை யுணராததனால் மோகத்தாற் காணும் விஷயங்களில் விருப்பமுண்டாம்.

3. கடலில் அலைகள் போல் எதனிடம் இவ்வுலகு விளங்குமோ அதுவே நானென் றறிந்தபின்னும் ஏழைபோல் நீ பதறுவதேன்?

4. எழில் மிகுந் தூய அறிவாம் தன்னைக் கேள்வி யுற்றுஞ் சிற்றின்பப் பற்று மிகுந்தோன் மாசுறு கின்றான்.

5. படைப் பனைத்திலுந் தன்னையும் தன்னிடம் படைப் பனைத்தையும் காணும் முனிவனுக்கும் மமகாரத் தொடர்பிருத்தல் மிகு விந்தையே!

6. அத்துவித வுயர் நிலையை நாடுந் தீவிர முமுக்ஷுவும் காம வயப்பட்டுக் காதல் பயின்று சீரழிதல் விந்தையே!

7. பலமிகக் குன்றி முடிவு காலத்தை யடுத்திருந்தும் ஞானப்பகையாய்க் கிளம்பியதென்றறிந்த காமத்தை விழைதல் விந்தையே!

8. நித்யா நித்ய விவேகமுற்று இம்மை மறுமைகளில் விருப்பற்ற முமுக்ஷுவுக்கு மோக்ஷத்தின் பாற் பயமுண்டாதல் விந்தையே!

9. உபசரிக்கப் பெற்றாலுந் துன்புறுத்தப் பட்டாலும் தீரன் ஆத்மாவையே என்றுங் காண்பவனாய் மகிழ்வுஞ் சினமு முறான்.

10. இயங்குந் தன்னுடலைப் பிறனுடலெனக் காணும் பெருந்தகை புகழ்ச்சியிலும் இகழ்ச்சியிலும் எவ்வாறு குழம்புவன்?

10. இயங்குந் தன்னுடலைப் பிறனுடலெனக் காணும் பெருந்தகை புகழ்ச்சியிலும் இகழ்ச்சியிலும் எவ்வாறு குழம்புவன்?

11. இவ் வகிலத்தையும் மாயாமயமாய்க் குதூகல மற்றுக் காணும் மதியுரத்தோன் சாவுமிக நெருங்கினும் அச்ச முறுவனோ?

12. ஆத்மஞான நிறைவெய்தி அவாவின்மையிலும் பற்றற்ற மனத்தனாம் மஹாத்மாவுக்கு எவரே நிகராவர்?

13. தனதியல்பினாலேயே தோன்றுமீ தொன்றுமில்லை யென்றுணர்ந்த மதியுரத்தோன் கொள்ளுதற்குந் தள்ளுதற்கு முரிய தொன்றைக் காண்பனோ?

14. இரட்டைகளும் மனவெழுச்சியும் அகத்தழுக்கு மகன்றோனுக்குத், தானே நேரும் அனுபவத்தால் துன்பமுமில்லை, மகிழ்வுமில்லை.

ஜனகன் சுவானுபவம் உரைத்தல்!

ச

1. விஷயானுபவங்களுடன் விளையாடும் தீரனாம் ஆத்ம ஞானியைச் சம்சார பந்தத்தைச் சுமக்கும் பாமரருடன் ஒப்பிடுதல், அந்தோ! தகாது.

2. இந்திரன் முதலாம் தேவர்கள் யாவரும் தீனர்களாய் எந் நிலையுற விரும்புவரோ, ஆங்குறையும் யோகி (அதனால்) மகிழாததென்னே!

3. புண்ணிய பாபங்களின் பரிசம் ஞானியி னுள்ளத்தைத் தீண்டுவதில்லை. புகை, வானத்தே படிந்தது போற் காண்கினும், படியாததுபோல.

4. இவ்வுலகனைத்தும் ஆத்மாவேயென் றுணர்ந்து சுதந்தரமாய் வாழும் மஹாத்மாவைத் தடை செய்யத் தக்கோனெவன்?

5. பிரமன்முதற் புழுவரை யுள்ள நால்வகைப் படைப்புக் கூட்டத்தில் வேண்டல் வெறுத்தல்களைத் துறக்குந் திறலோன் அனுபவ ஞானி யொருவனே.

6. உலகிறையாம் இரண்டிலாப் பொருளே தானென்று யாரோ ஒருவன் உணர்கிறான். அவன் சித்தம்போற் சஞ்சரிப்பன். எதனின்றும் பயம் அவனுக்கில்லை.

### அஷ்டாவக்கிரர் உபதேசம்!

ரு

1. எதனோடும் பற்றுனக்கில்லை; தூயவனாம் நீ துறக்க விரும்புவதேன்? திருசியத்திரளைக் கரைத்து இவ்வாறே நீ கரைந்துபோ.
2. கடலினின்று குமிழிகள்போல உன்னிடமிருந்து உலக முதிப்பதென்று, ஒன்றாம் ஆத்மாவை யுணர்ந்து இவ்வாறே நீ கரைந்துபோ.
3. கயிற்றிலரவுபோல் வெளிப்படையாய்க் கண்முன் தோன்றினும், அஃதோர் தனிப் பொருளன்மையின் அமலனாம் உன்னிடம் உலகில்லையென்று இவ்வாறே நீ கரைந்துபோ.
4. இன்பதுன்பங்களிலும் ஆசை நிராசைகளிலும் வாழ்விலுஞ் சாவிலுங்கூடச் சமனாய்ப் பூரணனாய் இவ்வாறே நீ கரைந்துபோ.

### ஜனகர் சுவானுபவம் உரைத்தல்!

சா

1. வானம்போல் எல்லையற்றவன் யான், உலகோ குடம் போன்ற ஜடம்,என்னுமிதுவே ஞானம். ஆதலினிதனைத் தள்ளலுங் கொள்ளலும் ஒழித்தலுமில்லை.
2. மஹா சமுத்திரம் போன்றவன் யான் ; உலகோ அலைபோன்றது, இதுவே ஞானம். ஆதலின் இதனைத் தள்ளலுங் கொள்ளலும் ஒழித்தலுமில்லை.
3. கிளிஞ்சில் போன்றவன் யான்: உலகக் கற்பனை வெள்ளிபோன்றது. இதுவே ஞானம். ஆதலின் இதனைத் தள்ளலுங் கொள்ளலும் ஒழித்தலுமில்லை.

4. அகிலப் படைப்பிலும் உள்ளவன் யானே. மேலும் அகிலப் படைப்பும் என்னுளே யுளது. இதுவே ஞானம். ஆதலி னிதனைத் தள்ளலுங் கொள்ளலும் ஒழித்தலுமில்லை.

எ

1. எலையிலாக் கடலா மென்னிடம் உலகக்கப்பல் மனக் காற்றால் இங்குமங்கும் அலைகிறது. (அதனால்) எனக்கொன்றும் வருத்தமில்லை.
2. எலையிலாக் கடலா மென்னிடம் இயற்கையால் உலகத்திரை யுண்டாயினும் ஒடுங்கினும், அதனால் வளர்வுந் தேய்வு மெனக்கில்லை.
3. எலையிலாக் கடலா மென்னிடம் ஜகமோர் கற்பனையே; நான் அமைதிமயன், வடிவற்றவன் என்னும் ஞானத்தே யான் நிலைபெற்றேன்.
4. ஆத்மா விஷயங்களில் இல்லை; வரையற்ற மாசற்ற ஆங்கே விஷயமில்லை - என்று பற்றற்று அவாவற்று அமைதியுற்ற யான் இதனில் நிலைபெற்றேன்.
5. நானோ ஞானமயன்; உலகோ இந்திரஜால நிகர். ஆதலின் எவ்வாறு எதனிடம் எனக்கு வேண்டல் வெறுத்தலுண்டாம்?

அஷ்டாவக்கிரர் உபதேசம்!

அ

1. எப்போது மனம் ஏதோ வொன்றை விரும்புவதும் வருந்துவதும், தள்ளுவதுங் கொள்ளுவதும், உவப் பதுஞ் சீறுவதும் உண்டோ, அப்போதே பந்தம்.
2. எப்போது சித்தம் எதனையும் விரும்பாது வருந்தாது, தள்ளாது கொள்ளாது, மகிழாது சீறாதிருக்குமோ அப்போதே முக்தி.

3. எப்போது மனம் சில விஷயங்களிற் பற்றுறுமோ அப்போதே பந்தம். எப்போது சித்தம் எவ் விஷயத்திலுந் தோயாதோ அப்போதே வீடு.

4. நானற்றபோழ்து விடுதலை, நானுற்ற காலை பந்தம் என்று விளையாடல்போ லறிந்து எதனையுங் கொள்ளாது தள்ளாதிரு.

சா

1. செய்ததுஞ் செய்யாததும் (பிற) இரட்டைகளும் எப்பொழுதெவனுக்கு ஒய்ந்தன? என்றிங்கே யறிந்து உதாசீனமுற்றுச் சங்கற்பமற்று (சர்வத்) தியாகமே சிறந்த தென்றிரு.

2. அன்ப! ஏதோவோர் புண்ணியவான் உலகியலை யுணர்ந்து, வாழ்க்கை வேட்கையும் போக விருப்பும் அறிதல் விருப்பும் அடங்கப் பெறுகிறான்.

3. இஃதனைத்தும் நிலையாதது, தாப மூன்றால் மாசுற்றது, சாரமற்றது, இகழ்ந்து தள்ளற்பால தென்று நிச்சியித்தவன் சாந்தியடைகிறான்.

4. எங்கே மாந்தர்க்கு இரட்டைகளே யில்லையோ ஆங்கே காலமென்ப தென்ன, வயதாவ தென்ன? அவற்றைப் புறக்கணித்து நேர்ந்தவாறிருப்பவன் பூரணனாவான்.

5. மஹரிஷிகளும், சாதுக்களும், யோகிகளும் வெவ்வேறு கொள்கையுற் றிருப்பதைக் கண்டு வெறுப்பெய்திய வன் சாந்தியுறான்?

6. உதாசீனம் சமத்துவமென்னும் யுக்திகளால் ஞான ஸ்வரூபானுபவத்தை யருளி உலகச்சுழலினின்றுங் காப்பவன் குருவன்றோ!

7. (பஞ்ச) பூதத் திரிபுகளைப் பூதங்களாகவே கண்டால் அக்கணமே நீ உண்மையிற் கட்டறுந்து சொரூப நிலை பெறுவாய்.

8. ஸம்ஸ்காரங்களே ஸம்சாரமென்று அவை யனைத்தையும் விட்டுவிடு. வாதனை நீக்கத்தாலேயே சம்சார நீக்கமாம். உள்ளவாறுள்ளது இந்நிலையே.

க0

1. காமப்பகையையும் இன்னற் பின்னலாம் பொருள் விருப்பையுமொழித்து, இவ்விரண்டிற்கும் முன்னதாம் தர்மத்தையும் விட்டு, அனைத்திலும் உதாசீனங்கொள்.
2. நண்பரும் நிலமுஞ் செல்வமும் வீடும் மனைவியுஞ் சுற்றமும் சம்பத்தனைத்தும் நாலைந்து நாட்களே. இதனையோர் கனவென மாயத் தோற்றமெனப் பார்.
3. எங்கெங்கே அவாவுளதோ ஆங்கே சம்சார மென்றுணர். திடவைராக்கியமுற்று ஆசையற்றுச் சுகமேயிரு.
4. அவாவே பந்தம்; அ:தறுதலே முக்தி. உலகப் பற்றொழிதன் மாத்திரத்தால் அவ்வப்பொழுதே (ஆன்மா) அடைவின்புண்டாம்.
5. நீ ஒருவன், அறிவுமயன், தூயவன்; உலகோ அசத்துஞ் ஜடமுமாம். அவித்தையென்பது ஒன்று மேயில்லை. ஆயினும் நீ அறிய விரும்புவதேன்?
6. பிறவிதொறும், ராஜ்யமும் மக்களும் பெண்டிரும் உடலும் சுகங்களும் (அவற்றிடை நீ) ஆர்வத் தோடிருந்தும் அழிந்தே போயின.
7. அறம் பொரு ளின்பம் யாவும் போதும்; உலகக் காட்டில் இவற்றால் மனம் அமைதியுறவில்லை.
8. எத்தனை பிறவிகள்தான் உடலாலும் மனத்தாலும் வாக்காலும் பாடுபடவில்லை? கருமம் துன்பம்; களைப்பைத் தருவது. ஆதலின் இப்போ தாயினும் ஓய்ந்திரு.

கக

1. ஆதலு மழிதலுமாம் திரிபு இயற்கையா லெனத் துணிந்தவன் திரிபற்றுத் துயரற்றுச் சுகமே அமைதி யுறுவன்.
2. இறைவனே எல்லாம் புரிபவன், வேறெவருமில்லை யென இங்கே துணிந்தவன் அவாவனைத்தும் அகத்தே நீங்கி, சாந்தனாகி எதனிலுமொட்டான்.

3. சம்பத்தும் விபத்தும் (அவ்வக்) காலத்தே விதி யாலேயே வருவனவெனத் துணிந்தவன் பொறிகள் நிலைக்கப்பெற்று என்றும் நிறைந்தவனாய் ஒன்றையும் விரும்பான், வருந்தவுமாட்டான்.

4. இன்ப துன்பங்களும் ஜனன மரணங்களும் விதி வசமெனத் துணிந்து, தன்னாலாவ தொன்றுமிலை யெனக் கண்டு கவலையற்றிருப்பவன் செய்தும் பற்றுறான்.

5. நினைப்பாலன்றி வேறெவ்வாறும் துக்கமிங்குறா தெனத் துணிந்து, கவலையற்று அனைத்தினும் ஆசை தீர்ந்தவனே இன்பமும் அமைதியு மெய்தியவன்.

6. உடல் நானல்ல, என்னுடையதுமல்ல, அறிவே நான் எனத் துணிந்தவன் முக்தியுற்றவனே யெனலாம். செய்ததையுஞ் செய்யாததையும் அவன் நினையான்.

7. பிரமன் முதற் புழுவரை (அனைத்தும்) நானே யெனத் துணிந்தவன் அடைந்ததினின்றும் அடை யாததினின்றும் முற்றிலும் விலகித் திரிபற்றுத் தூயோனா யமைவன்.

8. பற்பல விந்தையதாம் இவ் வையம் ஒன்றுமே யின்றெனத் துணிந்தவன், ஒன்றுமே யிலதென வாதனையற்று (ஆத்ம) விளக்கமயமா யிலகுவன்.

## ஜனகர் சுவானுபவம் உரைத்தல்!

### கஉ

1. முதலில் உடல் வினைகளிலும், பின்னர் வாக்கை வளர்ப்பதிலும், அதன் பின் நினைப்பிலும் வெறுப்புற்று அதனால் இவ்வாறே நான் நிலைத்துளேன்.

2. சப்தாதி விஷயங்களில் உவகையின்மையாலும் ஆத்மாவின் காணொணாத் தன்மையாலும் (முறையே) விக்ஷேபமும் ஏகாக்கிரமுமின்றி இவ்வாறே நான் நிலைத்துளேன்.

3. விபரீதத் தோற்றம் முதலியவற்றால் மனம் சிதறும் பொழுதே சமாதி முயற்சியுமென்னும் நியதியை யுணர்ந்து இவ்வாறே நான் நிலைத்துளேன்.

4. தள்ளுதலுங் கொள்ளுதலு மின்மையாலும், அவ்வாறே உவத்தலும் நோதலு மின்மையாலும், பிரஹ்மமே! இவ்வாறே நான் நிலைத்துளேன்.

5. ஆச்ரமம் ஆச்ரமமின்மை, தியானம், அகப்பற் றொழித்தல் என்னுமிவற்றால் வரு விகற்பங் கருதி இவ்வாறே நான் நிலைத்துளேன்.

6. கரும முனைவு எவ்வாறு அறியாமையினாலோ அவ்வாறேதான் அதைத் துறத்தலும் என்னுமிவ்வுண்மையை நன்குணர்ந்து இவ்வாறே நான் நிலைத்துளேன்.

7. நினையொணாததை நினையப்புகின் அது நினைவு வடிவே யுறுதலின் பிரஹ்ம பாவனையையும் துறந்து இவ்வாறே நான் நிலைத்துளேன்.

8. இவ்வாறெவன் செய்வனோ அவனே கிருதகிருத்யன் . இவ்வாறே தன்னிய லெவன் சார்வனோ அவனே கிருத கிருத்யன் (செய்து முடித்தவன்.)

க

1. ஒன்றுமின்மையிலுள்ள தன்னிலையின்பம் கோவண மட்டுங் கொண்டவனுக்கு மின்மையின் தள்ளலுங் கொள்ளலுமின்றி இன்பமயமா யிருக்கின்றேன்.

2. சிலகால் உடல் வருந்துகிறது; சிலகால் நாவு நோகின்றது. சிலகால் மனம் துன்புறுகின்றது. ஆதலின் இவற்றை நீத்து விடுதலை நிலையிற் சுகமே யிருக்கின்றேன்.

3. உண்மையில் நான் எதையுஞ் செய்பவனலன் என்று நன்குணர்ந்து எப்பொழுது எதைச்செய்ய நேருகின்ற தோ அதைச்செய்து இன்பமயமாயிருக் கின்றேன்.

4. உடல் பொருந்திய யோகிக்கே கருமம். கரும நீக்கம் பந்தம் முதலாம் பாவனைகள். யோகமும் வியோகமும் எனக்கிண்மையின் இன்பமயமா யிருக்கின்றேன்.
5. இருத்தல் நடத்தல் படுத்தலால் எனக் கெதுவும் ஆவதும் போவதுமில்லை. (ஆதலின்) நின்றும் நடந்தும் படுத்தும் இன்பமயமா யிருக்கின்றேன்.
6. தூங்குவதால் யான் இழப்பதொன்றில்லை; முயல்வதால் அடைவது மொன்றில்லை; ஆதலின் அழிவும் உயர்வுமற்று இன்பமயமா யிருக்கின்றேன்.
7. விஷயங்களிற் சுகம் முதலியவற்றிற்குக் குறித்த வடிவமின்மையைப் பலகாற் கண்டு, நல்லது தீய திரண்டையும் நீத்து இன்பமயமா யிருக்கின்றேன்.

கச

1. தப்பித்தவறி விஷயத்தை நினைந்தாலும் இயற்கையில் எவன் நினைப்பற்றவனோ, துயிலில் விழிப்பூட்டப் பெற்றவன் போன்ற அவனே சம்சாரச் சுழற்சியற்றவன்.
2. அவாவற்றுப் போயினகால், எனக்குச் செல்வமோ நட்போ, விஷயப்பகையோ, நூலோ, அறிவோ எங்குளது?
3. பரமாத்மாவும் ஈசனுமாகிய சாக்ஷி புருஷனை யிறந்தபின் பந்த விடுதலையிலும் அவா வற்றதால் முக்தி சிந்தை எனக்கில்லை.
4. உள்ளே விகற்பமொழிந்து வெளியே சுதந்தரமாயுலவும் ஞானியின் - பித்தனது போன்ற - அவ்வந் நிலைமைகளை அத்தகையோரே யறிவர்.

அஷ்டாவக்கிரர் உபதேசம்!

கரு

1. ஸத்வபுத்தி உண்மை யுபதேசத்தாற் கிருதார்த் தனாகிறான். மற்றவன் ஆயுள் முழுதுந் தேடியும் மயங்குகிறான்.

2. விஷயச் சுவையறுதலே வீடு; விஷயச்சுவையே பந்தம்; ஞானம் இவ்வளவே. இஷ்டப்படி செய்து கொள்.

3. இவ் வுண்மை யறிவு வாசாலனும் மேதாவியும் முயற்சிமிக்கவனுமாம் ஒருவனை ஊமையையும் முழு மகனையுஞ் சோம்பேறியையும் போலாக்குவதால் போக விரும்பினர் இதை விலக்குவர்.

4. உடல் நீ யல்லை; உடலுனக்கில்லை; புசிப்பவனும் புரிபவனும் நீ யல்லை. நீ ஞானமயன். என்றும் சாக்ஷி, தேவையற்றவன் சுகமே வாழ்.

5. விருப்பும் வெறுப்பும் மனத்தி னியல்புகள் . உனக்கோ என்றும் மனமில்லை. திரிபும் விகற்பமு மற்ற ஞானாத்மாவே நீ. சுகமே வாழ்.

6. படைப்பனைத்திலுந் தன்னையும், தன்னிடம் படைப்பனைத்தையுங் கண்டு, நானெனதற்றுச் சுகமாயிரு.

7. கடலில் அலைகள்போல் எதனிடம் இவ்வுலகு இலகுமோ அதுவே நீ; ஐயமில்லை. ஞான வடிவே! தாபமற்றிரு.

8. அன்பனே! நம்பு. இங்கே நீ மயங்காதே; மாயைக் கப்பாலாம் ஆத்மாவே, ஞானமயனாம் இறைவனே நீ.

9. குணங்கள் சூழும் உடலே நிற்கிறது. வருகிறது, போகிறது. ஆத்மாவோ போவதும் வருவது மில்லை. அதைப்பற்றி என் வருந்துகிறாய்?

10. உடல் பிரளய முடிவுமட்டு மிருக்கட்டும்; இன்றே லின்றே போகட்டும். ஞானமே வடிவாம் உனக்கு அதனால் ஆக்கமேது, அழிவேது?

11. வரையற்ற பெருங்கடலா முன்னிடம் உலகத்திரை இயல்பாகவே உதிக்கட்டும், அல்லது அடங்கட்டும். (அதனால்) உனக்குக் கூடுதல் குறைவில்லை.

12. அன்ப! ஞானமே நின் வடிவாகும். இவ்வுலகு உன்னிலும் வேறன்று. ஆதலின் யாருக்கெவ்வாறு எங்கே தள்ளலுங் கொள்ளலுமாங் கற்பனை?

13. அழிவற்றுத் துய்யதாய் அமைதியாயிலகும் ஒரே ஞானவானமாம் உன்னிடம் பிறப்பெங்கே, வினை யெங்கே; அகந்தைதானெங்கே (யுளது).

14. எதை நீ கண்டாலும் ஒருவனாம் நீயே அங்கு விளங்குகிறாய். பொன்; மேகலையுந் தோள்வளையுஞ் சிலம்பும் பொன்னினும் வேறா யிலகுமோ?

15. இது நான், இது நானல்லவென்னும் பிரிவு பாட்டை முற்றிலுமொழித்து, அனைத்தும் ஆத்மா வேயெனத் துணிந்து, நினைப்பற்றுச் சுகமாயிரு.

16. உன்னை யுணராமையாலேயே அகிலமும் உண்டாகிறது. உண்மையில் நீ யொருவனே (இருக்கிறாய்) உனக்கயலாய்ச் சம்சாரியோ, சம்சார மற்றவனோ ஒருவனுமில்லை.

17. இவ்வகிலமும் மயக்கமேயன்றி வேறன்றென்று தணிந்து, வாதனையற்று, ஆன்ம விளக்க மாத்திரமா யிருப்பவன் எதுவுமில்லாதது போலவே அமைதி யுறுவன்.

18. பவசாகரத்தின்கண் ஒருவனே யிருந்தான், இருக்கிறான். இருப்பான். உனக்குப் பந்தமுமில்லை, முக்தியுமில்லை. செய்துமுடித்தவனாய்ச் சுகமாயிரு.

19. ஞானமயனே! சங்கற்ப விகற்பங்களால் சித்தங்குழம்பாதே. ஆனந்தவடிவாந் தன்னிடம் ஓய்வுற்றுச் சுகமா யிரு.

20. எங்கு மெக்காலுந் தியானத்தையொழி. சித்தத் தொன்றுங் கொள்ளற்க. நீ விடுபட்டவனாக ஆத்மாவாகவே யிருக்கிறாய், நினைப்பாலாவதென்?

கசா

1. பற்பல நூல்களைப் பன்முறை புகன்றாலுங் கேட்டாலும் அனைத்தையும் மறத்தலாலன்றித் தன்னிலையின்பம் உனக்கில்லை.

2. போகத்தையோ, கன்மத்தையோ, சமாதியையோ நீ சார்ந்திரு. ஆயினும் அறிஞ! அவா வனைத்துமற்ற வுள்ளமே அளவிலா வுவகை யுனக் களிக்கும்.

3. (விஷயங்களில்) உழலுவதால் யாவருந் துன்புறு கின்றனர். இதை யாரும் உணர்வதில்லை, புண்ணிய வானொருவன் இவ்வுபதேசத்தாலேயே பேரின்பம் பெறுவன்.

4. (கண்ணை) இமைத்துத் திறத்தற்கும் எவன் வருந்துவானோ சோம்பரிற் றலைசிறந்தவனாம் அவனுக்கே இன்பம்; வேறுஎவர்க்குமில்லை.

5. அறம் பொரு ளின்பம் வீடுகள்பற்றி, இது செய்தோம் இது செய்யவில்லை யென்னும் இரட்டைகளினின்றும் மனம் விடுபடுமன்றே அது அவாவற்றதாம்.

6. விஷயத்தை வெறுப்பவன் விரக்தன்; விஷயத்தில் உழல்பவன் காமி, தள்ளலுங் கொள்ளலுமற்றவன். விரக்தனுமாகான், காமியுமாகான்.

7. விசாரணையற்ற நிலைமையையே தலமாக் கொண்ட ஸம்ஸாரப் புதிரின் முளையாம் அவா வுயிர்த்துள மட்டுமே தள்ளலுங் கொள்ளலும் உள்ளவையாம்.

8. தொடங்குதலாற் பற்றும் விலகுதலால் வெறுப்புமே யுண்டாதலால் அறிஞன் இரட்டைகளற்றுக் குழந்தைபோல் இவ்வாறே நிலைத்திருப்பன்.

9. துன்பத்தைத் தொலைக்கும் விருப்பினால் அவாவுற்றவன் உலகியலைத்துறக்க விரும்புகிறான், அவாவொழிந்து விடுதலையுற்றோன் உலகிலிருந்தும் துன்புறான்.

10. எவனுக்கு முக்தியிலாயினும் விருப்புளதோ, அவ்வாறே உடலிலாயினும் எனதென்ப துளதோ, அவன் துயரையே நுகர்வோனேயன்றி ஞானியுமாகான், யோகியுமாகான்.

11. சிவனே, அல்லது ஹரியே, அல்லது பிரமனே யுனக்குபதேசகனாயினும், அனைத்தையும் மறத்தலா லன்றிச் சுகநிலை நீ யெய்தாய்.

கள

1. உள்ள நிறைவும் இந்திரிய வமைதியும் பெற்றுத் தனிமையிலெவன் என்று மின்புறுவனோ, அவனே ஞானப்பயனையும் யோகப்பயிற்சியின் பயனையு மெய்தினோன்.

2. ஒருவனாந் தன்னாலேயே பிரமாண்டத் தொடரெலாம் நிறைந்துளபடியால், உண்மை யுணர்ந்தோன் இவ் வுலகில் எக்காலுந் துன்புறான்.

3. ஈச்சங் குருத்துண்டு இன்புறும் யானையை வேப்பிலை மகிழ்வியாததுபோலத் தன்னுளே யுவப்பவனை இவ் விஷயங்களெவையும் என்றுங் களிப்பிக்க மாட்டா.

4. அனுபவித்த போகங்களில் வாதனையற்றிருப் பவனும் அனுபவியாதவற்றில் உதாசீனமாயிருப்பவனுமாம் ஒருவன் உலகிலே கிடைத்தற் கரியவன்.

5. இவ்வுலகில் போக விருப்பினரையும் மோக்ஷ விருப்பினரையுங் காணலாம். போகமோக்ஷ மிரண் டையும் விழையாப் பெரியரோ மிகவரியர்.

6. அறம் பொரு ளின்பம் வீடு வாழ்வு சாவு முதலிய எவற்றிலும் ஏதோவோர் பெருந்தகைக்கு வேண்டலும் வெறுத்தலுமில்லை.

7. (அவனுக்கு) உலகந் தொலைவதில் விருப்புமில்லை; அஃதிருப்பதில் வெறுப்பு மில்லை. அப் புண்ணிய வான் நேர்ந்தவாறு வாழ்ந்து இன்பவடியிருக்கிறான்.

8. இவ்வாறு மனமொழிந்த தன்யன் "இஞ் ஞானத்தாற் கிருதார்த்தனானேன்" என்று பார்த்துங் கேட்டும் பரிசித்தும் முகர்ந்தும் அருந்தியும் சுகமா யிருப்பன்.

9. சம்சாரக்கடல் வறண்டவனது பார்வை குறியற்றும், செயல் உத்தேசமற்றும், பொறிகள் வேக மற்றுமிருக் கும். விருப்பும் வெறுப்பும் அவனுக்கில்லை.

10. அவன் விழிப்பதும் உறங்குவது மில்லை. இமைப் பதுந் திறப்பது மில்லை; விடுபட்டோனிடமிலகும் பரநிலை யொன்றென்னே!

11. எங்குமவன் தன்னிலை நிற்பவனாய்த் தூயவகத் தினனாய்த் திகழ்வன். வாதனை யாவும் விலகிய முக்தனா யெங்கும் பிரகாசிப்பன்.

12. பார்த்துங் கேட்டுந் தொட்டும் முகர்ந்தும் உண்டும் ஏற் றும் புகன்றும் சென்றும் வேண்டல் வெறுத்தல் களினின்றும் விடுபட்ட முக்தனே பெரியோன்.

13. அனைத்தினுஞ் சுவையற்ற முக்தன் (எதையும்) தூற்றான், புகழான், மகிழான், கோபியான்; கொடுத்தல் வாங்கல் அவனுக்கில்லை.

14. காதலுறும் பெண்ணைக் கண்டும் அணுகிவருஞ் சாவைக் கண்டும் உளங் கலங்காது தன்னிலை நிற்கும் பெரியோன் முக்தனேயாவன்.

15. அனைத்தினும் சம திருஷ்டியுடைய தீரனுக்கு இன்பிலுந் துன்பிலும் ஆணிலும் பெண்ணிலும், ஐசுவரியத்திலும் ஆபத்திலும் எவ் விசேடமுமில்லை.

16. உலகச் சுழலற்றவனிடம் வருத்துதலில்லை. இரக்கமுமில்லை; செருக்கில்லை, தாழ்வுமில்லை, வியத்தலில்லை, குழப்பமுமில்லை.

17. முக்தன் விஷயங்களை வெறுக்கான், விழையவு மாட்டான். என்றும் பற்றற்ற வுளத்தினனாய் நேர்ந்ததையும் நேராததையும் ஏற்றுக்கொள்ளுவான்.

18. அகத்தே யொன்றுமிலான் ஏகாக்கிரம் விக்ஷேபம், நன்மை தீமையென்னும் விகற்பங்களை யுணரான். அவன் தனிப் பரநிலை பொருந்தினான் போலும்.

19. நானெனதற்று (உண்மையில்) எதுவுமில்லை யெனத் துணிந்து, உள்ளே யவா வற்றவன், செய்துஞ் செய்யாதவனே.

20. அகந்தை நழுவியவன் மனம், ஒளி, மயல், கனவு, அறியாமை முதலியவற்ற, ஏதோவோர் நிலையுற்ற வனாவன்.

கஅ

1. எதன் ஞானமுதித்தலும் மோகம் கனவு நிகராமோ, இன்பமே வடிவாம் அவ் வமைதியொளி போற்றி!

2. உலகப் பொருள்கள் யாவையும் பெற்றுப் போகங்கள் செழிக்கப்பெறலாமாயினும், அனைத்தையுந் துறத்தலா லன்றிச் சுகவானாதல் இயலாது.

3. கடமையாங் கடுவெயிலின் அனலால் உள்ளம் பொசுங்கியவனுக்குச் சாந்தி யமுததாரைப் பொழிவை விட்டுச் சுகமெங்கேயுளது?

4. இப்படைப்பு கற்பனை மாத்திரமே; உண்மையி லொன்றுமில்லை. இருப்பையு மின்மையையும் உணருந் தன்மையோர்க்கு இன்மை யென்றுமில்லை.

5. விகற்பமும் வருத்தமும் மாறுதலும் மாசு மற்ற தனது நிலை தொலைவுமில்லை, அருகுமில்லை. அ.: தென்றும் அடையப்பட்டதேயாம்.

6. மயக்கமட்டும் விலகித் தம்மையே மீண்டும் பெற்றோர் பார்வைமுட்ட மற்றுத் துயரற்றுத் துலங்குவர்.

7. "அனைத்துங் கற்பனையே; ஆத்மாவோ கட்டற்ற பழம்பொருள்" என்றுணர்ந்த தீரன் சிறுவரைப்போல் என்ன பழகுவது?

8. தான் பிரஹ்மமென்றும், இருப்பு மின்மையுங் கற்பனைகளென்றும் துணிந்து அவாவற்றவன் எதையறிவது? எதைச் சொல்வது? எதைச் செய்வது?

9. அனைத்தும் ஆத்மாவேயெனத் தீர்ந்து சும்மா விருக்கும் (மோனத்திருக்கும்) யோகிக்கு "அது நான், இது நானல்ல" என்னும் விகற்பங்கள் ஒழிந்தனவாம்.

10. அமைதியுற்ற யோகிக்கு சஞ்சலமில்லை, ஏகாக் கிரதையுமில்லை; மேதையில்லை; மடமையுமில்லை; சுகமில்லை, துக்கமுமில்லை.

11. *விகற்பமிலாத் தன்னிலை யுற்றோனுக்கு அரசாட்சியிலும் பிச்சை யெடுத்தலிலும், லாப நஷ்டங்களிலும், ஜனத்திரளிலுங் காட்டிலும் விசேடம் ஒன்று மில்லை.*

12. *''இதைச் செய்தோம், இதைச் செய்யவில்லை'' என்னும் இரட்டையினின்றும் விடுபட்ட யோகிக்கு அறம் பொருளின் பங்களும் விவேகமும் எங்கேயுள!*

13. *ஜீவன் முக்தனாம் யோகிக்குக் கடமையேதுமே யின்று. இதயத்தே பற்றுதலெதுவுமின்று. உள்ள வாறிருத்தலே இங்கவன் தொழிலாம்.*

14. *நினைப்பனைத்தின் முடிவிலே யிளைப்பாறும் பெருந் தகைக்கு மோகமெங்கே, உலகெங்கே, தியானமும், விடுதலையுமெங்கே?*

15. *உலகைக் காண்பவன் அ.: தில்லையென்று சாதிக் கட்டும். (உலகைக்) கண்டுங் காணாதவனாம் வாதனை யற்றவன் எதைச் செய்வது?*

16. *பரம்பொருளைக் கண்டவன் அப் பரமே நானெனக் கருதுக. இரண்டாவதைக் காணாதவன் -நினைப் பற்றவன்-எதை நினைவன்?*

17. *தன் விக்ஷேபத்தைக் காண்பவன் அதை யடக்குவன். பெரியோர் விக்ஷேபமுறார். அடைதற் கொன்றின் மையின் அவர் எதைப் புரிவர்?*

18. *உலகத்தார்போல் நிலவினும் ஞானி அவர்களிலும் மாறுபட்டவன். தனக்குச் சமாதியையோ விக்ஷே பத்தையோ களங்கத்தையோ அவன் காணான்.*

19. *நினைப்பும் நினைப்பின்மையுமற்று வாதனையற்று நிறைவுற்றிலகுபவன் உலகப்பார்வையிற் பல புரிந்தும் (உண்மையில்) ஏதுஞ் செய்யாதவனே.*

20. *எப்பொழு தெதைச்செய்ய நேருகிறதோ அதைச் செய்து சுகமாயிருக்குந் தீரனுக்குப் பிரவிருத்தியிலாயினும் நிவிருத்தியிலாயினும் கஷ்டமேயில்லை.*

21. வாதனையற்றுப் பற்றற்றுக் கட்டற்றுச் சுதந்தர மாணவன் காற்றிற் சருகெனத் தொடங்கிய (பிராரப்த) வினையாலாடுவன்.

22. உலகியலற்றவனுக்கு எதனிடமுங் களிப்போ ஏக்கமோ உண்டாகாது. அவன் என்றும் அகங் குளிர்ந்து உடலற்றவனெனச் சுடர்வன்.

23. மாசற்றுக் குளிர்ந்த வுளத்தினனாய்த் தன்னுளே மகிழும் தீரன் எதனையு மொழிக்கக் கருதான். அவனுக் கெங்கும் அழிவில்லை..

24. இயல்பாகவே உள்ளத் தொன்றுமிலனாய் நேர்ந்தவாறு நடக்குந் தீரனுக்குப் பாமரர்க்குள்ள மானாவ மானங்கள் இல.

25. இவ்வேலையைச் செய்வது உடலேயன்றித் தூயோனாம் யானல்ல வென்னுங் கருத்தைப் பின்பற்றுபவன் செய்துஞ் செய்யாதவனே.

26. ஆர்வமற்றவன்போற் புரிவனாயினும் அவன் மூடனாகான் . இன்பமயனாம் ஜீவன்முக்தன் உல வுழலினும் திருமிகத் திகழ்வன்.

27. பற்பல ஆராய்ச்சிகளால் மிகக் களைத்த இளைப் பாறலுற்ற தீரன் எதையும் நினையான், அறியான், கேளான், பாரான்.

28. சமாதியும் விக்ஷேபமு மின்மையின் ஞானி முமுட்சுவுமாகான், பாமரனுமாகான். (உலகம்) கற்பிதமென நிச்சயித்து (அதைப்) பார்க்குங்காலும் பிரஹ்மமாகவே யிருக்கிறான்.

29. எவனுக்கு உள்ளே அகந்தையுளதோ அவன் செய்யானாயினும் செய்கிறான். அகந்தையற்ற தீரன் செய்தும் ஒன்றுஞ் செய்யவில்லை.

30. முக்தனது உள்ளம் குழப்பமற்றுக் குதூகலமற்றுத் தொழிலற்று அசைவற்று அவாவற்று ஐயமற்றுவிடும்.

31. ஆலோசிக்கவோ தொழிற்படவோ முற்படாத வுள்ளம் எக்காரணமுமின்றி (ஓரொருகால்) ஆலோசிக்கும், வேலையுஞ் செய்யும்.

32. உண்மையை யுள்ளபடி கேட்கும் மூடன் மயக்க முறுகின்றான்; புத்திமானோ மூடனைப்போல் ஒடுக்க முறுகின்றான்.

33. (சித்த) ஓர்மையையும் அடக்கத்தையும் மூடர் மிகப் பழகுவர். தூங்கியவன்போலத் தன்னிலை நிற்குந் தீரர் செயற்பால தேதுங் காணார்.

34. முயற்சியினாலோ முயற்சியின்மையினாலோ மூடன் அமைதியுறுவதில்லை. அறிஞனோ உண்மை நிச்சயத் தினாலேயே சாந்தனாகிறான்.

35. அப்பழக்கத்தையே மேற்கொண்ட மாந்தரும் உலகற்று நோயற்றுத் தூயவறிவாய் அன்பு நிறைவாய்த் திகழுந் தம்மை யுணர்வதில்லை.

36. மூடன் அப்பியாசவடிவாங் கன்மத்தால் விடுதலை பெறுவதில்லை. புண்ணியவானோ ஞானத்தினாலேயே விட்பட்டு விகாரமற்று நிலைநிற்பன்.

37. அதுவாக விரும்புவதால் மூடன் அப் பரம் பொருளை யடைவதில்லை. தீரனோ விரும்பாமலேயே பரம்பொருளே தானாயிருக்கிறான்.

38. ஆதாரத்தைவிட்டு, அடையவிரும்பும் அவிவேகிகள் பிறவிச் சுழலைப் பெருக்குவர். துன்பவேராம் இப் பிறவியின் வேரையே அறிஞர் அறுத்துவிடுவர்.

39. சாந்தியடைய விரும்புமதனால் மூடன் சாந்தி யுறுவதில்லை: தீரனோ உண்மையைத் தேர்ந்து என்றும் மனமடங்கி யிருக்கின்றான்.

40. காட்சியைப்பற்றி நிற்பவனுக்கு ஆன்மப் பார்வை எங்குண்டாம்? தீரர் அதையு மிதையுங் காணாது அழிவறு மான்மாவையே காண்பர்.

41. தன்னுளே யமைதியுறுந் தீரனுக்கே என்று மியல்பாயிலகும் உண்மை யொடுக்கம் கட்டுப்பாடியற்றும். மூடனுக்கு எங்ஙனம் நேரும்?

42. இருப்பை ஒருவன் நினைகிறான். மற்றொருவன் ஒன்றுமிலையெனக் கருதுகிறான். வேறோருவன் இருபாவனைகளுமற்று இவ்வாறே கலக்கமற்றிருக்கிறான்.

43. மதிகெட்டவர்கள் மயக்கத்தால் இரண்டிலாத் தூயவான்மாவை யுணராது (மனத்தால்) அதைப் பாவிப்பதால் ஆயுள் முழுவதும் அவர்களுக்கு அமைதியில்லை.

44. முமுக்ஷுவின் புத்தி பிடிப்புற்றிருப்பதில்லை. முக் தனது புத்தியோ எக்காலுஞ் சற்றும் பிடிப்பற்று அவாவுமற்றிலகும்.

45. விஷயப்புலிகளைக் கண்டு மிரண்டவர் அடைக்கலம் நாடி மனோநிக்ரகமும் ஏகாக்கிரமும் பெற வேண்டிச் சரேலெனக் குகையில் நுழைவர்.

46. (ஸம்ஸ்கார) வாதனையற்ற சிங்கத்தைக் கண்டு விஷய யானைகள் ஓசையின்றி ஓட்டமெடுக்கின்றன; (ஓட) முடியாவிடிற் கெஞ்சிப் பணிகின்றன.

47. உளம் பொருந்தியவன் சந்தேகமுறான்; மோட்ச நூலைப் பேணான்; கண்டுங் கேட்டுந் தொட்டும் முகர்ந்தும் உண்டும் சுகம்போலிருப்பான்.

48. வஸ்துலக்ஷணத்தைக் கேட்ட மாத்திரத்திற் புத்திதெளிந்து (மீண்டுங்) கலங்காதவன் ஆசாரம் அநாசாரம் உதாசீனம் (முதலாம்) எதையுங் காணான்.

49. அவன் களங்கமிலனாய் நல்லதோ கெட்டதோ எப்பொழுதெதைச் செய்ய நேருகிறதோ அப்பொழுததைச் செய்வன். அவன் செயல் குழந்தையினது போன்றது.

50. சுதந்தரத்தாற் சுகப்படலாம். சுதந்தரத்தாற் பரமெய்தலாம். சுதந்தரத்தால் விடுதலை பெறலாம். சுதந்தரத்தாற் பரமபதமுறலாம்.

51. ஆன்மாவாந் தான் புரிபவனும் புசிப்பவனு மலனென ஒருவன் என்றுணர்கின்றானோ அன்றே மனநினை வனைத்தும் நசித்தே போகின்றது.

52. கட்டற்றதாயினுந் தீரனது இயல்புநிலையே அழகியது; அகத்தே யவாவுற்ற மூடனது செயற்கையமைதி யன்று.

53. கற்பனையோய்ந்து பந்தமற்ற சுதந்தர மதியினராந் தீரர்மஹா போகங்களுடனு மிலகுவர்; மலைக் குகைகளிலும் புகுவர்.

54. வேதியனையுந் தேவதையையும், க்ஷேத்திரத்தையும் வனிதையையும், அரசனையும் அன்பனையுங் கண்டும் வழிபட்டும் தீரனுக்கு இதயத்தே வாதனை யாதுமிராது.

55. பணியாளர், மக்கள், பெண்டிர், பேரர், உறவினர் முதலோர் சிரித்து அவமதிப்பினும் யோகி சிறிதும் விகாரமுறான்.

56. அவன் மகிழ்ந்தாலும் மகிழ்ந்தவனாகான்; வருந்தினாலும் வருந்தியவனாகான்; அவனது விந்தை நிலையவ்வதனை அத்தகையோரே யறிவர்.

57. செய்தாக வேண்டுமென்பதே சம்சாரம். சூனிய (பூரண) வடிவினராய், வடிவற்றவராய்த் திரிபற்றுத் தாபமற்றிலகும் ஞானிகள் கடமையைக் காணார்.

58. மூடன் (ஒன்றுஞ்) செய்யாவிடினுங் குழப்பத்தால் எதனிலுங் கலங்குவான். சமர்த்தன் கடமைகளைச் செய்யுங்காலுங் கலங்கமாட்டான்.

59. விவகாரத்தின்போதும் மதி யமைதியுற்றவன் படுத்தாலும் வந்தாலும் போனாலும் பகர்ந்தாலும் நுகர்ந்தாலும் சுகமாகவே யிருப்பான்.

60. உலகம்போல் விவகரிப்பினுந் தனதியல்பாலே எவன் இன்னலற்றானோ, பெருமடுப்போற் கலக் கொணாதவனாம் அவன் துயரற் றொளிர்வன்.

61. வினை நீக்கமும் முழுமகனுக்கு ஓர் வினையாக விளைகிறது. தீரனுக்கோ வினையும் வினைநீக்கத்தின் பயனை நல்கும்.

62. விஷயங்களிடம் வெறுப்பைப் பெரும்பாலும் அஞ்ஞானியிடங் காணலாம். உடலின் மீதே யவா வற்றவனுக்கு ஆசையேது, வைராக்கியமேது?

63. அஞ்ஞானியின் நோக்கு எப்போதும் நினைப்பு மறப்புக்களில் அழுந்தியிருக்கும். தன்னிலை யுற்றோனது நோக்கோ விஷயங்களை நினைத்தும் நினையாத தன்மையதாம்.

64. எம் முயற்சியிலும் விருப்பற்றுக் குழந்தைபோ லொழுகுந் தூயோனாம் மௌனி வினையாற்றுங் காலும் பற்றுறான்.

65. பார்த்துங் கேட்டும் பரிசித்தும் முகர்ந்தும் உண்டும் அகத்தே யவாவிலனாய் நிலைமையாவிலும் நடு நிலைமையனாயிலாகும் ஆத்ம ஞானியே புண்ணிய சாலி.

66. வானம்போலென்றுந் திரிபற்ற தீரனுக்கு உலகச் சூழலேது, தோற்றமேது, அடைவேது, அதன் சாதனமேது.

67. விஷயங்களை நீத்து வரையற்ற பரத்தில் இயற்கை நிலையுற்றோன் தற்சுவை நிறைவு வடிவனாய்ச் சிறப்பன்.

68. இதுபற்றிப் பலவாறுரைத்தென்? உண்மை யுணர்ந்த பெரியோர் போகத்தையோ மோக்ஷத் தையோ நாடார்; எப்போதும் எதனிடமுங் களிப் பெய்தார்.

69. பெயரளவாய் வெளித்தோன்றும் மஹத் (தத்துவம்) முதலாந் துவித வுலகைத் துறந்து தூய வறிவாயினோர்க்குக் கடமையொன் றெஞ்சியுளதோ?

70. மயக்கத்துதித்த இதுவெலாம் யாது மன்றென நிச்சயித்துக் குறியற்றுச் சுடருந் தூயோன் இயல் பாகவே அமைதியுறுவன்.

71. தூய சுடர் வடிவனாய்க் காண்பொரு ளேதுங்காணானுக்கு விதியேது, விரக்தியேது, துறவேது, அடக்கமேது?

72. எல்லையிலாப் பொருளாய்ச் சுடர்பவனாய்ப் படைப்பையே காணாதவனுக்குக் கட்டேது, விடு தலைதானேது, சுகமேது, துக்கமேது?

73. (உண்மை) அறிவு (உதிக்கு) மட்டுமே தோன்றும் படைப்பின் மாயையே பற்பலவாயுளது. (இதையுணர்ந்த) ஞானி நானெனதற்று அவாவற்றில குவன்.

74. அழிவுந் தாபமுமற்ற தன்னையே காணும் மௌனிக்கும் அறிவேது, அகிலந்தானேது, உடலேது, நானெனதேது?

75. மனோ நிக்ரகம் முதலாங் காரியத்தை அஞ்ஞானி கைவிடுவனேல் அக்கணமே அவன் மனோராஜ்யங்கள் புரிந்து வீண் வார்த்தையாட நேரும்.

76. மந்தன் உண்மைப் பொருளைக் கேள்வியுற்றும் மடமை யொழிவதில்லை; முயற்சியால் வெளியே விகற்ப மற்றவனெனவும் உள்ளே விஷய சபலனாகவு மிருப்பன்.

77. ஞானத்தாற் கருமங் கழன்றவன் உலக நோக்கிற் கருமம் புரிந்தாலும், எதனையுஞ் செய்யவோ, சொல்லவோ அவனுக்கு அவசியம் நேருவதேயில்லை.

78. என்றும் விகாரமற்றுத் தாப நோயற்ற தீரனுக்கு இருளேது, ஒளியேது, எங்கேனுஞ் சற்றேனும் அழிவு அவனுக்கு ஏது?

79. தன்மை யுரைக்கொணாதவனும், தன்மையிலனு மாகிய யோகிக்குத் தீரமேது, விவேகமேது, தாபமின்மைதானேது?

80. தீரனது சீதள சித்தம் அமுதம் பெருகுவதாம். எவ்வடைவையும் அவன் வேண்டான்; அடைய வில்லை யென்றும் வருந்தான்.

82. அவாவற்றவன் அமைதியுள்ள வனைப் புகழான்; தீயவனை யிகழவுமாட்டான் ; இன்ப துன்பங்களிற் சமனாய் நிறைந்தவனாய்ச் செய்தற்குரிய தெதனையுங்காணான்.

83. தீரன் உலகியலை வெறுக்கான்; ஆத்மாவைக் காணவும் விரும்பான். உவத்தல் வெகுளல் முற்றிலு மற்றவனாம் அவன் செத்தவனலன், பிழைத் திருப்ப வனுமலன்.

84. ஞானி மக்கள் மனை முதலிய நட்பற்றவனாய் விஷயங் களி லவாவற்றவனாய்த் தனதுடலினுங் கருத்தற்ற வனாய் எதனையும் விழையாதவனா யொளிர்வன்.

85. உற்றதைக் கொண்டு பிழைப்பவனும், நாடெங்கும் யதேச்சையாய் நடப்பவனும், அஸ்தமித்த விடத்திற் படுப்பவனுமாந் தீரனுக்கு எங்கும் சந்தோஷமே.

86. தன்னிலையாம் பூமியில் இளைப்பாறி, உலகிய லனைத்தையும் மறந்த மஹாத்மாவுக்கு உடல் விழுந்தாலு மெழுந்தாலும் (அதுபற்றிக்) கவலையில்லை.

87. ஒன்றுமிலனாய், இச்சைபோ லுலவுபவனாய், இரட் டையற்றவனாய், ஐயம் அறுந்தவனாய், எதனிலும் பற்றிலனாய்த் தானாய்த் தனித்தின் புறுவன் ஞானி.

88. தீரன் மமதையற்றவனாய், மண்ணுங் கல்லும் பொன்னுஞ் சமனாய், இதயக்கட்டு அறவே யறுந்தோனாய், ராஜத தாமத (குண)ங்கள் சிதறப் பெற்றவனா யிலகுவன்.

89. எதனிலும் நாட்டமற்றவனுக்கு உள்ளத்தே வாதனை யாது மிராது. விடுதலையுற்று நிறைவுற்றோருக்கு எவரையே நிகரென்பது?

90. அறிந்தும் அறியான், பார்த்தும் பாரான், பேசியும் பேசான் - வாதனையற்றவனினும் வேறு யார்?

91. பிச்சைக்காரனாயினும் அரசனாயினும் எவன் அவாவற்று, அனைத்திலும் நல்லது கெட்டதென்னும் எண்ணமற்றானோ அவனே சிறந்தவன்.

92. கள்ளமிலா நேர்மையனாய் வாழ்க்கை பயனுற்ற யோகிக்குச் சுதந்தரமேது, ஒடுக்கமேது, தத்துவ நிச்சயந்தானேது?

93. தன்னுளே இளைப்பாறி நிறைவெய்தி ஆசையற்றுத் துயரற்றவன் உள்ளே யனுபவிக்குமதை எப்படி யெவருக் குரைப்பது?

94. எவ்வெந் நிலையிலுந் திருப்தியுறுந் தீரன் தூங்கியுஞ் சுழுத்தியுறான்; கனவிலுந் தூக்கமுறான்; விழிப்பில் விழிப்புமுறான்.

95. ஞானி நினைவுறினும் நினைவற்றவன்; புலன்களோடிலகினும் புலனற்றவன்; புத்திமானாயினும் புத்தியற்றவன்; அகந்தையோடிலகினும் அகந்தை யற்றவன்.

96. அவன் சுகியுமல்ல துக்கியுமல்ல, பற்றற்றவனுமல்ல பற்றுளோனுமல்ல,. முமுட்சுமல்ல முக்தனுமல்ல, சற்றேனும் எதுவுமாகான்.

97. தன்யனாமவன் குழப்பத்திற் குழம்பான்; சமாதியி லொடுங்கான்; ஜடத்தன்மையிலும் ஜடனாகான்; மேதைமிகுந்தும் பண்டிதனாகான்.

98. உள்ளவாறு தன்னிலை நின்ற முக்தன் செய்ததினின்றும் செய்யவேண்டியதினின்றும் விடுபட்டான். அவாவற்று எங்குஞ் சமனா மவன் செய்யாததையோ செய்ததையோ நினையான்.

99. அவன் வணங்கப்பெறுங்கால் மகிழ்தலும் வைதலுறுங்கால் வெகுளலுஞ் செய்யான். சாவின் பாற் சற்றும் பதறான்; வாழ்க்கையிலுங் களியான்.

100. புத்தி யமைதியுற்றவன் ஜனக்கூட்டத்திற்கோ காட்டிற்கோ ஓடமாட்டான். அவன் எங்கெங்குஞ் சமனாய் உள்ளவாறே நிலை நிற்பன்.

ஜனகன் சுவானுபவம் உரைத்தல்

கக௯

1. தத்துவானுபவ ஞானமாம் முள்வாங்கி கொண்டு மனத் தகத்தினின்று பல்வகை யாலோசனைகளாம் முட்களை வெளியெடுத்தேன்.

2. சுய மஹிமையில் நிலைத்தளவெனக்கு அறம் பொரு ளின்பங்க ளேது? விவேக மேது? துவித மேது? அத்துவித மேது?

3. சுய மஹிமையில் நிலைத்துளவெனக்கு இறப்பெதிர்வு நிகழ்வுக ளேது? இடமேது? என்றென்று மென்பதேது?

4. சுய மஹிமையில் நிலைத்துளவெனக்கு ஆத்மாவேது? அனாத்மாவேது? நன்மைதீமைக ளேது? நினைப்பும் நினைப்பின்மையு மேது?

5. சுய மஹிமையில் நிலைத்துளவெனக்குக் கனவேது, துயிலேது, விழிப்பேது, துரியமேது, பயமேது?

6. சுய மஹிமையில் நிலைத்துளவெனக்குத் தொலையேது, அருகேது, வெளியேது, உள்ளேது, தூலமேது, நுட்பமேது?

7. சுய மஹிமையில் நிலைத்துளவெனக்குச் சாவேது, வாழ்வேது, உலகங்களேது, உலகியலேது, ஒடுக்க மேது, சமாதியேது?

8. ஆத்மாவில் அமைதியுறு மெனக்குப் பேறுகள் மூன்றின் கதை போதும்! யோக வரலாறும் ஞான வரலாறும் போதும்! போதும்!

உ0

1. மாசற்ற என் சொரூபத்தில் பூதங்களேது, உடலேது, பொறிகளேது, மனமேது, சூனியமேது, அவாவின்மை யேது?

2. என்று மிரட்டையிலா வெனக்குச் சாத்திரமேது, ஆத்மஞான மேது, நினைப்பிலா மனமேது, நிறைவேது, அவாவின்மையேது?

3. அறிவறியாமைகளேது, நானேது, இதுவேது, எனதேது, பந்த முக்திகளேது? சொரூபத்திற்கு வடிவேது?

4. என்றும் வகுக்கொணாததிற் பிராரப்த வினைகளேது, ஜீவன்முக்தி யேது விதேக முக்தி யேது?

5. புரிபவனேது, புசிப்பவனேது, வினையிலா விளக்க மேது? எக்காலுங் குணமற்ற வெனக்கு அபரோக்ஷமும் அதன் பயனு மேது?

6. நானேயாம் ஒரே சொரூபத்தில் உலகெங்கே, முமுட்சுவும் யோகியும் ஞானியும் பக்தனும் முக்தனுமெங்கே?

7. நானேயாம் ஒரே சொரூபத்திற் படைத்தலும் அழித்தலுமேது? சாதித்தற் குரியதும் சாதனையும் சாதகனும் சித்தியுமேது?

8. அறிபவனும் அறிநெறியும் அறிபொருளும் அறிவு மேது? என்றுந்தூயோனா மெனக்கு ஒன்றென்பதும் ஒன்றுமில்லை யென்பது மேது?

9. என்றும் வினையிலா வெனக்குச் சிதறலுங் குவிதலு மேது? அறிவறியாமைகளேது? மகிழ்வந் துயருமேது?

10. எப்போதும் நினைப்பிலா வெனக்கு இவ் விவகார மேது? அப்பரமார்த்த மேது? சுக துக்கங்களேது?

11. என்றும் மாசிலாவெனக்கு மாயையேது, சம்சாரமேது, விழைவும் வெறுப்புமேது? ஜீவனும் அதுவெனும் பிரமமுமேது?

12. மாறாப் பரம்பொருளினும் வேறாகாதென்றுந் தானாயிருக்கு மெனக்குப் பிரவிருத்தியேது, நிவிருத்தியேது? பந்தமேது, விடுதலையேது?

அஷ்டாவக்ர கீதை முற்றிற்று

# அத்தியாயம் எட்டு

## பஞ்சபத மஹா வாக்கிய ரகசியம்

இதுவுமல்லாமல் 108 வேதாந்த வாக்கியங்கள் அநந்த சமயங்களையும், அநந்த முத்திகளையுஞ் சொல்லுமாகை யால் இவை களுங் கூடா.''

வினா : ''ஆனால் , சிந்தாந்தமாவது என்ன?''

விடை : ''சித்தாந்தமாவது,ஈசுவரானுக் கிரகத் தினாலும், மஹான்கள் தரிசனத்தினாலும் , சத்குரு கடாட்சத் தினாலும் மோட்ச சாதனம் பெற்று , முற்கூறிய வாக்கியமுத்தி கிருதகிருத்திய அனுபவ சாட்சாத் கார பலத்தை யடையவேண்டியது. மேலும் இந்த வாக்கிய உபதேசத்தைப் பெறும் அதிகாரிகளும் ஐந்து பேதமாயிருப்பார்கள்.''

வேதாந்தும் கற்கும் அதிகாரிகளின் பேதம்

வினா : ''அதிகாரிகளின் பேதமாவது என்ன?''

விடை: (க) சாங்குசித்தன், (௪) சம்பவன்,

(உ) காருண்யன், (ரு) மந்தன்

(கூ) சமரசன்,

என்று ஐந்துவித அதிகாரிகளாம். அவர்களுள்,

ஐந்துவித அதிகாரிகளுக்கும்அநுக்கிரகிக்கும் விதம்

(க) சாங்குசித்தனுக்கு :

அங்காங்க பஞ்சவுபக்கிரம ஐக்கிய சமாதியான ஆகம சித்தாந்தத்தையும்,

(உ) காருண்யனுக்கு :

காரண காரிய பஞ்சவுபக்கிரம ஐக்கிய சமாதியான வேதாந்த சித்தாந்தத்தையும்,

() சமரசனுக்கு :

வேதாகம சமாச சித்தாந்தமான இருபந்தைந்து படி யொழுங்கு சமாதியையும்,

(ச) சம்பவனுக்கு :

சுத்த சைவசித்தாந்தமென்னும் சிவஞான போதக தக்ஷிணாமூர்த்த ஞான முத்திராமோன சமாதியையும்,

(ரு) மந்தனுக்கு:

இதிஹாச புராண சித்தாந்தமான விஷயலய சமாதியையும், அனுக்கிரகிக்க வேண்டும்.''

ஐந்துவிதஅதிகாரிளின் பேதம்

அறியும் வகை

வினா : ''இந்த அதிகாரிகளின் பேதம் அறிவ தெங்ஙனம்?''

கக. வது, சாங்குசித்த அதிகாரியின் இலக்கணம்ஷ

விடை : ''இந்த அதிகாரிகளின் பேதம் அறியும் வகை யெங்ஙனமெனின் சத்குரு சந்நிதானப்பட்டவன் இருதயத் திலுள்ள படி ஞானோதயமாகிற இலக்கண முடையவன் சாங்குசித்தன்.

கஉ-வது ,காருண்ய அதிகாரியின் இலக்கணம்ஷ

சத்குரு சந்நிதானப்பட்டு வாக்கியம் பெற்று ,அந்தக் குருவாக்கியமே சுருதியாகக் கொண்டு ,சுவாநுபூதி யடைந்து இங்ஙனம் குருவாக்கிய சுருதி வாக்கியமாகிய இருவகைச் சம்மதப்படி அகத்தில் விளங்கும் இலக்கண முடையவன் காருண்யன்.

க- வது , சமரச அதிகாரியின் இலக்கணம்ஷ

சகல வேதாகம சாஸ்திர சமய நிலைகளும் பட்சபாத மின்றிச் சமமாகக் காணுமிலக்கணமுடையவன் சமரசன்.

கவது சம்பவ அதிகாரிகளின் இலக்கணம் ஷ

தான் நின்ற நிலையே நிலை தான் கொண்ட சமயமே சமயம் அவைகட் நேற்பத்தான் படித்த சாத்திரமே சாத்திரம்

மற்றெல்லாம் நிலையல்ல என்று கண்டனம் பண்ணுமிலக்கண முடையவன் சம்பவன்.

கரு வது ,மந்த அதிகாரியின் இலக்கணம்ஷ

சகல சமயங்களையும் சாஸ்திரங்களையும் பார்த்து ஒன்றிலும் நிலைகொள்ளாத அனுபவ இலக்கணமுடையவன். மந்தன் .

இந்த ஐந்து அதிகாரிகளுக்கு மேற் சொல்லியபடி ஐந்துவிதமாய் அனுக்கிரகிக்க வேண்டியது.''

க- வது அதிகாரியாகிய
சாங்குசித்தனுக்கு உபதேசிக்கு முறை

வினா : ''ஆனால் , இந்த ஐந்து அதிகாரிகளுக்கும் அந்த ஐந்துவித சமாதிகளை யனுக்கிரகிக்கு முறைமை பெப்படி?''

விடை : அ.:தெப்படி யெனில்,

க-வது அதிகாரி: சாங்குசித்தனுக்கு உபதேசிக்கு முறை

சாங்குசித்தனுக்கு , வேதாகம சம்மதப்படி வாக்கிபா தீதம் என்றொரு வாக்கியம் உண்டு. அது தொந்தத்தசியதிநிசம் என்பது . அ .:து,

(க) தொம், (ச) அதி,
(உ) தத், (ரு) நிஜ,
(கூ) அசி,

என்று ஐந்து பதமாகியிருக்கும் , அவற்றுள்,

(க) தொம்பதத்தில்

(க) தூலசரீரம்
(2)சூட்சம சரீரம் (3) காரணசரீரம்
(4) சீவன் (5) கூடஸ்தர் ஆக 5

(2)தத்பதத்தில்

(க) விராட்டு, (ச) ஈஸ்வரன்
(உ) இரண்ய கருப்பம் (ரு) பிரம்மம்
(ங) மாயை ஆக 5

(கூ) அசி பதத்தில்

(க) சத்து, (சி) பரப்பிர ஹமம்
(உ) சித்து, (ரு) சர்வசாக்ஷி
(ங) ஆநந்தம் ஆகரு

(ச) அதி பதத்தில்

சுபாவம்

(க) சுத்தம், (ச) ஒழிவு
(3) சுபாவம்
(உ)சூன்யம் (ரு) அதீதம் ஆக

(ரு) நிஜ பதத்தில்

(க) யதார்த்தம், (ச)ஒடுக்கம்
(உ)ரகசியம் (ரு) மோனம்
(ரு) அறுதி ஆகரு

இவற்றுள் :

(க) தூலசரீரம் - ரு (ச) அபிமானி - ரு
(உ) சூட்சும சரீரம் - ரு (ரு) சாட்சி - ரு
(ஆக) காரண சரீரம் - ரு உரு.

இதுவே சாங்குசித்தனுக்கு அருகமான அங்காங்க, பஞ்ச வுபக்கிரம் ஐக்கிய சமாதியாம்.''

வினா : ''ஆனால் அஃது உபதேசிக்கு முறைமையில் முற்கூறிய இருபத்தைத்திற்கும் அங்காங்க பஞ்ச உபக்கிரம மெப்படி?

அங்காங்க பஞ்ச உபக்கிரம விவரம்

(க-வது உபக்கிரமம்)

விடை : அஃதெப்படி யெனின்,

(க) பிராயச்சித்தவானுக்கு சுத்தன் என்று நாமம் உண்டானதுபோல் யதார்த்தத்திற் சுத்தமும்,

(உ) சுத்தனுக்கு அழிவற்றவன் என்று நாமம் உண்டானது போலச் - சத்தில் விராட்டும்.

( ) மண்ணில் கடம் உண்டானதுபோல் - விராட்டில் தூலசரீரமும் உண்டாம்.

(உ வது)உபக்கிரமம்

(க) சொல்லில்லாதவனிடத்தில் பொருளில்லாதது போல் - இரகசியத்திற் சூன்யமும்,

(உ) கேவலத்தில் அறிவு ஜனித்ததுபோல் - சூன்யத்தில் சித்தும்.

() அறிவில் கரணம் ஜனித்ததுபோல் - சித்தில் இரணியகருப்பமும்,

(ச) சூக்குமையிற் பைசந்தி ஜனித்ததுபோல் -இரணியகருப்பத்தில் சூட்சுமசரீரமும் உண்டாம்.

3. (வது உபக்கிரமம்)

(க) அறுதிச்சொல் உடையவனுக்கு சுடரவி என்றுநாம முண்டானதுபோல் - அறுதியிற் சுபாவமும்,

(உ) நிர்மல சித்தத்திற் சுக முண்டாவதுபோல் - சுபாவத்தில் ஆனந்தமும்,

() சுதசித்தத்திற் சுதந்தரயுத்தி ஜனித்ததுபோல் - ஆநந்தத்தில் மாயையும்,

(ச) தோப்பினிடத்துத் தனிமரம் கண்டது போல்- மாயையில் அவித்தையும் உண்டாம்.

(ச.வது உபக்கிரமம்)

(க) அசைவின்றிய இடத்தில் தொழிலில்லாதது போல் -? ஒடுக்கத்தில் ஒழிவும்,

(உ) ஒழிவு வந்தவனுக்குச் சுழுத்தியன்போற் பரவசன் என்னு நாமம் உண்டானதுபோல் - ஒழிவிற் பரப் பிரமமும்,

(ஈ) ஆகாயம் நிர்மலக் கண்ணாடியிற் பிரதிபலித்தது போல் - பரப்பிரமத்தில் ஈசுரனும்,

(ச) சுதந்தரனுக்குப் பந்தசந்தி நீங்கினவுடன் சுதந்தரவான் என்னு, நாமம் உண்டானதுபோல் - ஈசுரனிடத்தில் ஜீவனும் உண்டாம்

(ரு-வது உபக்கிரமம்)

(க) இரகசியத்தில் அதீதமென்னும் வாக்கியம் உண்டானது போல் - மோனத்தில் அதீதமும்,

(உ) பர்வதவுச்சிவாசிக்கு பர்வத தரிசனன் என்னு நாமம் உண்டானதுபோல் - அதீதத்தில் சர்வசாட்சியும்,

(ங) மகாகாசத்தில் மடாகாசம் உண்டானது போல் சர்வசாட்சியில் பிரமமும்.

(ச) மடாகாசத்திற் கடாகாசம் உண்டானதுபோல் பிரமத்தில் கூடஸ்தரும் உண்டாம். இதுவே அங்காங்க பஞ்ச வுபக்கிரமம்.''

## ஐக்கியம்

வினா: ஐக்கியம் எப்படி ?''

விடை : ஐக்கியம் எப்படி யெனின் :-

| | | |
|---|---|---|
| (க) | தூலசரீரத்தை | விராட்டிலும் |
| (உ) | விராட்டைச் | சத்திலும், |
| (ங) | சத்தைச் | சுத்தத்திலும் |
| (ச) | சுத்தத்தை | யதார்த்தத்திலும் |
| (ரு) | சூட்சம சரீரத்தை | இரணிய கருப்பத்திலும் |
| (சு) | இரண்யகருப்பத்தைச் | சித்திலும், |
| (எ) | சித்தை | சூன்யத்திலும், |
| (அ) | சூன்யத்தை | இரகசியத்திலும் |
| (கூ) | காரண சரீரத்தை | மாயையிலும், |
| (க) | மாயையை | ஆனந்த்த்திலும் |
| (கக) | ஆனந்தத்தைச் | சுபாவத்திலும் |
| (கஉ) | சுபாவத்தை | அறுதியிலும் |
| (கங) | ஜீவனை | ஈஸ்வரனிலும் |
| (கச) | ஈஸ்வரனைப் | பரப்பிரஹ்மத்திலும் |
| (கரு) | பரப்ரஹ்மத்தை | ஒழிவிலும் |
| (கசு) | ஒழிவை | ஒடுக்கத்திலும் |
| (கஎ) | கூடஸ்தரை | பிரஹ்மத்திலும் |
| (கஅ) | ப்ரஹமத்தைச் | சர்வ சாட்சியிலும் |
| (ககூ) | சர்வசாட்சியை | அதீதத்திலும் |

(உ0) அதீதத்தை மோனத்திலும்

ஒடுக்க ஒடுங்காமற் சேடித்திருந்தது நிசபதம் ஐந்து.

இவ்வைந்தில்

(க) யதார்த்தம் ஸ்தூல சரீரமாகவும்,

(உ) இரகசியம் சூட்சும சரீரமாகவும்

(ங) அறுதி காரண சரீரமாகவும்,

(ச) ஒடுக்கம் அபிமானியாகவும்

(ரு) மோனம் ஜீவசாக்ஷியாகவும்

இருந்து, வேண்டியபடி சஞ்சரிப்பன்.

2வது அதிகாரியாகிய

காருண்யனுக்கு உபதேசிக்கு முறை

வினா : காருண்யனுக்கு அனுக்கிரகிக்கு முறைமை எப்படி?

(காரணகாரிய பஞ்ச உபக்கிரமம்)

(க-வது உபக்கிரமம்)

விடை : காருண்யனுக்கு அருகமான காரண காரிய பஞ்ச வுபக்கிரமம் எப்படியெனின்,

க. சூரியபிம்பம் மலினமான கண்ணாடியிற் பிரதி பிம்பித்ததுபோல் - ஜீவசாட்சியில் ஜீவனும்

உ. விஷந் தீண்டிவனவனுக்கு மூர்ச்சை யுண்டானது போல் - ஜீவனில் அவித்தையும்

ங. மூர்ச்சை தெளிவில் நினைவுண்டானதுபோல் - அவித்தையிற் சூட்சும சரீரமும்,

ச. நினைவில் சொப்பன சரீர முண்டானது போல் - தூல சரீரமும் உண்டாகும்.

(உவது உபக்கிரமம்)

க. சூரியபிம்பம் நிர்மலமான கண்ணாடியிற் பிரதி பிம்பித்ததுபோல் - பிரமத்தில் ஈஸ்வரனும்,

உ. ஆத்மாவுக்கு ஆத்மஞானம் உண்டானது போல் ஈசனில் மாயையும்.

ஈ. ஞானவானுக்கு இச்சை யுண்டானதுபோல் - மாயையில் இரணியகருப்பமும்,

ச. இச்சையுடையவனிடத்தில் கிருத்திய முண்டானதுபோல் - இரணியகருப்பத்தில் விராட்டும் உண்டாம்.

(3-வது உபக்கிரமம்)

க. காஷ்டத்தில் அக்கினி பிரவேசித்தபோது காஷ்ட மென்பது போய் அக்கினி யென்று பேர் வந்ததுபோல் சத்தி வியாபகமாகிய சர்வ சாட்சியிற் பரப்பிரமமும்.

(உ) அறிவிற் சாந்தகுண முண்டானதுபோல் - பரப் பிரமத்தில் ஆநந்தமும்,

(ங) சாந்தியில் இராசத முண்டானதுபோல் - ஆநந்தத்திற் சித்தும்,

(ச) இராசதத்தில தாமச முண்டானது போல் - சித்திற் சத்தும் உண்டாம்.

(ச-வது உபக்கிரமம்)

(க) அதீத அவஸ்தை வந்தவனுக்குக் காரணகிருத்திய ஒழிவுண்டானதுபோல் - அதீதத்தில் ஒழிவும்

(க) கரண ஒழிவில் உள்ளம் சுபாவமா யிருக்கிறது போல் ஒழிவிற் சுபாவமும்,

(ங) சுபாவ நிச்சிந்தை யுடையவனுக்கு ஒரு தேற்றரவு மில்லாததுபோல் - சுபாவத்திற் சூன்யமும்,

(ச) சூன்யகரணமே சுத்தமானதுபோல் - சூன்யத்திற் சுத்தமும் உண்டாம்.

(ரு-வது உபக்கிரமம்)

க. பேச்சற்றதே முடிவு என்று பெயர் பெற்றது போல் - மோனத்தில் ஒடுக்கமும்,

உ. முடிவே அர்த்த மென்பது போல் - ஒடுக்கத்தில் அறுதியும்

ங. அதீதமே சொல்லற்ற பொருளானதுபோல் - அறுதியில் இரகசியமும்,

ச. அதிரகசியமே யதார்த்தமென்று பெயர்பெற்றது போல் - இரகசியத்தில் யதார்த்தமும் உண்டாம். இதுவே காரணகாரிய பஞ்ச வுபக்கிரமம்?''

## ஐக்கியம்

வினா :ஆனால், ஐக்கியம் எப்படி ?
விடை: ஐக்கியம் எப்படியெனின்:

| | |
|---|---|
| தூலத்தைச் | சூட்சுமத்திலும் |
| சூட்சமத்தைக் | காரணத்திலும், |
| காரணத்தைச் | ஜீவனிலும், |
| ஜீவனைக் | கூடஸ்தரிலும், |
| விராட்டை | இரணியகருப்பத்திலும் |
| இரணியகருப்பத்தை | மாயையிலும் |
| மாயையை | ஈசுரனிலும், |
| ஈசுரனைப் | பிரமத்திலும் |
| சத்தைச் | சித்திலும் |
| சித்தை | ஆநந்தத்திலும் |
| ஆநந்தத்தைப் | பரப்ரஹ்மத்திலும் |
| பரப்ர ஹமத்தைச் | சர்வாசாக்ஷியிலும் |
| சுத்தத்தைச் | சூன்யத்திலும் |
| சூன்யத்தைச் | சுபாவத்திலும் |
| சுபாவத்தை | ஒழிவிலும் |
| ஒழிவை | அதீதத்திலும், |
| யதார்த்தத்தை | இரகசியத்திலும் |
| இரகசியத்தை | அறுதியிலும் |
| அறுதியை | ஒடுக்கத்திலும் |
| ஒடுக்கத்தை | மோனத்திலும் |

ஒடுக்கி, ஒடுங்காமற் சேடித்திருந்த பஞ்சசாட்சியுந் தானாய்.

(க) தொம்பதலட்சியமானசீவசாட்சி தானாயிருந்து வாச்சியமான சரீரத்திரய அபிமானியையும்,

(உ) தற்பதலட்சியமான பிரமம் தானாயிருந்து வாச்சிய மான சரீரத்திரய அபிமானியையும்.

( )அசிபத லட்சியமான சர்வசாட்சி தானாயிருந்து வாச்சியமான சரீரத்திரய அபிமானியையும்

(ச) அதிபத லட்சியமான அதீதம் தானாயிருந்து வாச்சியமான சரீரத்திரய அபிமானியையும்,

(ரு) நிசபத வட்சியமான மோனம் தானாயிருந்து வாச்சியமான சரீரத்திய அபிமானியையும்.

பார்த்துக்கொண்டு வேண்டியபடி சஞ்சரிப்பன்.

இவற்றின்விரிவை அடுத்த "மவுன குரு பஞ்சபத மகாவாக்கிய ரகசிய ம் என்னும் நூலில் காண்க!)

பஞ்சபத மகா வாக்கியம் இரகசியம் முற்றிற்று

| பதம் | சரீரத்திரயங்கள் | | | அபிமானி | சர்வசாட்சி |
|---|---|---|---|---|---|
| தொம் | தூலசரீரம் | சூட்சுமசரீரம் | காரணசரீரம் | சீவன் (மனம்) | கூடஸ்தன் |
| தத் | விராட்டு | இரண்யகர்ப்பர் | மாயை | ஈசுவரன்(குரு) | பிரமம் |
| அசி | சத்து | சித்து | ஆனந்தம் | பரபிரமம் (வரன்) | சர்வசாட்சி |
| அதி | அதீதம் | சூன்யம் | சுபாவம் | ஒழிவு (வரியான்) | அதீதம் |
| நிஜ | யதார்த்தம் | ரகசியம் | அறுதி | ஒடுக்கம் (வரிட்டன்) | மோனம் |
| | | மோனாதீதமே முடிந்த நிலை | | | |